# சீனு - ஜப்பான்

சீன ஸோவியத்துகளுக்கு
ஸமர்ப்பணம்

நவயுகப் பிரசுரம்-3

# சீனா - ஜப்பான்

ஆசிரியர் :
ஏ. ஜி. வெங்கடாச்சாரி
'தினமணி' உதவியாசிரியர்




நவயுகப் பிரசுராலயம் லிமிடெட்
ஜி. டி., மதராஸ்

 [அணா 8.

# முன்னுரை

உலகமெங்கும் அடுத்த மகா யுத்தத்துக்கு மும்முரமான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. ரஷ்யா உட்பட ஜனநாயக நாடுகள் ஒரு புறமும், பாஸிஸ்ட் ராணுவ வெறியர்களின் ஆதிக்கத்திலுள்ள நாடுகள் ஒரு புறமும் உலகெங்கும் அந்த யுத்தத்தில் எதிர்த்து நிற்கும். சீன - ஜப்பானிய யுத்தத்தி லிருந்துதான் இந்த உலக யுத்தம் பரவப் போகிறது. சீனு எப்படி ஏகாதிபத்தியங்களின் அடிமையாயிற்று? ஜப்பான் ஐம்பது வருஷங்களில் உலகத்தையே அறை கூவி அழைக் கும் நிலைமைக்கு வந்தது எப்படி? இந்தப் போராட்டத்தின் அடிப்படையான பிரச்னைகள் யாவை? பிரிட்டனும் அமெ ரிக்காவும் ஜப்பானுக்கு எதிராகச் சீனுவை ஆதரிக்குமா, அல்லது ஜப்பான் அலுத்துப்போகும் சமயம் பார்த்து, தங் கள் சுயாலத்தை யுத்தேசித்து ஜப்பானையும் வீழ்த்தி, சீனு வைத்தங்கள்சாசுவதமானபொருளாதாரஏகபோகமாக வகுத் துக் கொள்ளுமா? ஹிட்லர், முஸோலினி போன்ற சமா தானக் கொலைஞர்கள் என்ன செய்வார்கள்? சீன விடுதலைப் போருக்கும் இந்திய விடுதலைப் போருக்குமுள்ள சம்பந்தம் யாது? இவற்றையெல்லாம் 'தினமணி'க்காக நான் ஆராய்ச்சி செய்தேன். அதைத் தமிழுலகம் அறிதல் வேண்டுமென்று கருதி, அந்தப் பொறுப்பை 'நவயுகப் பிரசுராலயத்தார்'

ஏற்றனர். அதற்காக என் வந்தனம் அவர்களுக்கு உரித்தானது. ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரின் தன்மையைத் தமிழர் நன்குணர்ந்து அதைப் பலப்படுத்தவேண்டும் என்ற ஒரே அவாதான் இதை எழுதத் தூண்டியது. இதிலுள்ள குற்றங் குறைகளைப் பொறுத்து, ஏதாவது சாரமிருந்தால் அதை ஏற்றுக்கொள்ளுமாறு பிரார்த்திக்கிறேன்.

'தினமணி', சென்னை.
12-1-38.

ஏ. ஜி. வேங்கடாச்சாரி.

# பொருளடக்கம்

# சீனு - ஜப்பான்

## முதல் அத்தியாயம்

### பத்தொன்பதாம் நூற்றுண்டில் சீனு

சீனுவின் நாகரிகம் மிகவும் புராதனமானது. உலகிலேயே ஐந்தில் ஒரு பங்கு மக்களுக்குமேல் அங்கு வசிக்கின்றனர். ரஷ்யாவுக்கு அடுத்தபடி உலகில், மிகப் பெரிய நாடு அதுதான். இப்போது சீனு ஒரு குடியரசாக விளங்குகிறது. ஆனல், சமீபகாலம் வரை அது சர்வாதிகாரம் படைத்த சக்ரவர்த்திகளின் ஆட்சியின் கீழிருந்து வந்திருக்கிறது.

செங்கிஸ்கான் படையெடுத்து தன் ஆதிக்கத்தை அங்கு ஸ்தாபித்தது முதல் மேல் நாடுகளுக்கு சீனுவைப் பற்றித் தெரிய ஆரம்பித்தது. இந்தியாவுக்கும் சீனுவுக்கும் பல்லாயிரம் வருஷங்களாகவே தொடர்பு உண்டு. சீனுவின் இன்றைய நிலைமையை நன்கு உணர்ந்து கொள்வதற்குப் போதுமாறு, சென்ற நூற்றுண்டின் ஆரம்பத்திலிருந்து அதன் சரித்திரத்தைச் சுருக்கமாய் இங்கு எடுத்துரைக்க முயற்சிக்கப்படுகிறது.

சீனுவின் விஸ்தீர்ணம் 40 லக்ஷம் சதுரமைல். ஜனத்தொகை, இந்த நூற்றுண்டின் ஆரம்பத்தில் 40 கோடியாக இருந்தது. இப்போது சற்றேறக்குறைய 50 கோடியாக இருக்கலாம். திபேத், மங்கோலியா, ஸிங்கியாங் போன்ற சீன ஆதிக்கத்துக்கு உட்பட்டுள்ள நாடுகளின் விஸ்தீர்ணம் 25 லக்ஷம் சதுரமைல். இவற்றின் ஜனத்தொகை 1900ஸூத்தில் 1½ கோடியாக இருந்தது. பத்தொன்பதாவது நூற்றுண்டுக்கு முன் இந்தப் பிரதேசங்கள், சீனுவின் போக்கை உருவாக்குவதில் பலமாயிருந்தன. ஆனல், 1800-முதல் இவற்றின் முக்கியத்துவம் அநேகமாய் அற்றுப்போய் விட்டதென் சொல்லலாம். சீன சர்க்காரின் அதிகாரம் பூர்ணமாயிருந்த பிரதேசம் கடற்கரையை அடுத்தாற் போலுள்ள மாகாணங்கள் தான். அவற்றின் ஜனத்தொகை குறைந்தது 35 கோடியாயிருந்தது.

சீனுவின் பஸிபிக் கடற்கரை நீளம் (மஞ்சூரியா சேர்ந்து) 1600 மைல். மங்கோலியர்களின் படையெடுப்பைத் தடுக்க, பீகிங்குக்கு வடமேற்கே மூன்று மாகாணங்களில் அமைக்கப்பட்டிருக்கும் (Great Wall) பெரிய மதில், சரித்திரப் பிரசித்தமானது. வெகு காலமாக வடசீனுவிலுள்ள பீகிங் (பீபிங்) தான் சீன சர்க்காரின் தலைநகரா யிருந்துவந்தது. சமீபத்தில்தான் நான்கிங் தலைநகராயிற்று. சீனுவில், மிகவும் செழிப்பான பிரதேசம், நான்கிங்கை அடுத்துள்ள யாங்ட்ஸீ

நதிப் பள்ளத்தாக்கும் டெல்டாப்பிரதேசமுமாகும். கனி வர்க்கங்களிலும் இயற்கைப் பொருள் வசதியிலும் தலை சிறந்தது வட சீனா. யாங்ட்ஸீ, ஹுவாங்-ஹோ இரண்டும் மிகவும் முக்கியமான நதிகள். இவற்றில் பல நூறு மைல்கள் வரை உட்புறம் கப்பல்கள் போகக்கூடும். தெற்குச் சீனாவில் ஹாங்காங் அருகில் கடலில் சங்கம மாகும் காண்டன் நதியும் இப்படித்தான்.

பத்தொன்பதாவது நூற்றாண்டுக்கு முன் சீனர், மிகவும் தீரர்களாய் விளங்கினர் என்பது சரித்திரப் பிரசித்தமான உண்மை. பல சந்தர்ப்பங்கள் ஒன்றோ டொன்று மோதியதால் சென்ற நூற்றாண்டில், சீனா, தன் சம்பிரதாயமான வீரத்தை இழந்து, உலகெங்கும் கேலிக்கிடமாக இருந்தது. இன்று நிலைமை மீண்டும் ஓரளவுக்கு மாறி விட்டிருப்பதைக் காண்கிறோம்.

## சீன மாகாணங்கள்

சீனாவில் சிஹிலி (ஹோபெய்-சாஹார்), ஷாண்டுங், கியாங்ஸு, செகியாங், புகின், குவாங்டுங், ஆன்வே, ஹுபே, ஹோனன், ஹுனன், கியாங்ஸி, குவாங்ஸி, குவெய்டோ, ஷான்ஸி, ஷென்ஸி, கான்ஸு, யுன்னன், ஷெக்வான் ஆகிய பதினெட்டு மாகாணங்கள் இருக்கின் றன. வடக்கே மஞ்சூரியா, கொரியா, மேற்கே துருக் கிஸ்தான், தெற்கே அன்னம், பர்மா இவை சீனாவின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்து வந்தன. இவற்றில்

மஞ்சூரியாவை ஜப்பானும், அன்னாமை பிரான்ஸும், பர்மாவை பிரிட்டனும் தம் வசப்படுத்திக்கொண்டு விட்டன. இந்தியாவுக்கு வடபுறமுள்ள காஷ்காரிலும், திபேத்திலும் பிரிட்டிஷ் செல்வாக்குத்தான் இப்போது நிறைந்திருக்கிறது.

சீனாவின் கடற்கரையை அடுத்தாற்போல் பல முக்கியமான தீவுகளுண்டு. ஆனால் அவற்றின் ராணுவ முக்கியத்துவத்தைச் சீனர் எப்பொழுதுமே போதிய அளவுக்கு அங்கிகரித்ததில்லை. சீனா இன்று ஜப்பானிய ஆக்கிரமிப்பை எதிர்ப்பதில் திணறுவதற்கு முக்கிய மான காரணங்களில் இதுவுமொன்று.

## மஞ்சு சகாப்தத்தின் சிகரம்

மஞ்சூரியாவிலிருந்து வந்த சக்ரவர்த்திகள் மஞ்சு என்ற பரம்பரையை ஸ்தாபித்தனர். இந்தப் பரம்பரை யினர்தான் சமீபகாலம்வரை சீனாமீது ஆதிக்கம் செலுத்தி வந்தனர். 1793-ல், அறுபது வருஷ ஆட்சிக் குப் பிறகு இந்தப் பரம்பரையைச் சேர்ந்த சியூன்லிங் என்ற சக்ரவர்த்தி விலகிக் கொண்டார். அவருடைய காலத்தில்தான் சீனா தன் மகோன்னத தசையை அடைந் திருந்ததாக சரித்திராசிரியர்களில் ஒரு சாரார் கூறு கின்றனர். அவருடைய ஆட்சியின் விளைவாகப் பத் தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் சீனாவெங் கும் மத்ய சர்க்காரின் செல்வாக்கும் அதிகாரமும் பூர்

ணமாயிருந்து வந்தது. சியூன்லிங்குக்கு முன் அரசு புரிந்த 12 மன்னர்களுங்கூட இந்த நிலைமைக்குக் காரணம் என்று பலர் கூறுகிருர்கள். 1796-ல், சக்ரவர்த்தியான சியாசிங் பழைய சம்பிரதாயங்களை அனுஷ்டிக்கப் பாடுபட்டார். முதலில் கிறிஸ்தவ மதத்தைப் புகுத்தி அதன்பின் தொடர்ச்சியாகத் தங்கள் வர்த்தக ராஜீய ஆதிக்கங்களை ஏற்படுத்துவது மேல்நாட்டினரின் சாணக்யம். அவர்களுடைய பிரச்னை சீனுவைப் பல சங்கடங்களுக்குள் ஆழ்த்தியது.

சர்க்கார் உத்யோகங்களுக்கு நியமனங்களெல்லாம் பகிரங்கமான போட்டிப் பரீட்சைகளின் மூலந்தான். படித்தவர்களின் ஆசையெல்லாம் சர்க்கார் ஸேவகம்தான். இது தொழில் வளர்ச்சிக்கும் முற்போக்குக்கும் இடையூருயிருந்து வந்தது.

சீனருக்குத் தங்கள் இலக்கியத்தில் இயற்கையான தனிப்பெருமை உண்டு. சர்க்கார் செலவில் தேசமெங்கும் பல புத்தகாலயங்கள் இருந்து வந்தன. சீன சரித்திரத்தை உண்மையான விதத்தில் தொகுக்க தனிச் சபையொன்று உண்டு. ஆனுல், படித்து அதன் பயனைப் பெற்றோர் வெகு சிலரே. பாமர மக்களை இந்தக் கல்விமுறை எப்பொழுதும் பரவசப்படுத்தியதே யில்லை. கப்பல் கொள்ளையைத் தடுப்பதற்காக ஒரு பலஹீனமான கடற்படை சீன சர்க்காரிடம் இருந்தது. ஒவ்வொரு மாகாணத்துக்கும் ஒரு கவர்னர் இருந்தார்.

சிற்சில மாகாணங்களை ஒரு தொகுதியாகச் சேர்த்து, சீன சர்க்கார் ஒரு வைசிராயை அவற்றின் மேல்பார்வைக்கு நியமிப்பது வழக்கம்.

ஜனங்களிடம் கல்வியறிவு அதிகமாயில்லாததாலும் வறுமை மிகுந்திருந்ததாலும் லஞ்சம் தாண்டவமாடிக் கொண்டிருந்ததில் ஆச்சரிய மொன்றுமில்லை. சக்ரவர்த்தியின் அரண்மனைச் சிப்பந்திகள்கூட இதற்கு விலக்காயில்லை. தொழில் வளர்ச்சிக்கு எல்லா சக்ரவர்த்திகளுமே நீடித்த ஆதரவு அளித்து வந்தனர். ஆனல் தொழில் ரீதியில் அவற்றை முதல்தரமாக்க முயற்சிகள் செய்யப்படாதது வருந்தத் தக்கது.

மேல் நாட்டினரின் சூழ்ச்சிகளை அலட்சியம் செய்தால் தங்கள் சுதந்திரம் பறிபோம் என்பதை நன்குணர்ந்த சீனர், அந்நியர் எல்லோரையும் அடியோடு வெறுத்து வந்ததில் ஆச்சரியமொன்று மில்லை. ஆனல், புதிய சக்ரவர்த்தி சியாசிங் மிகுந்த ஜபர்தஸ்துக்காரர். வெளிநாட்டினருடன் அதிகமாகக் கூடிக்குலாவி சந்தேகத்துக்கு இடமான விதத்தில் நடந்து கொண்ட ஹோ என்ற ஒரு சீன அதிகாரியிடம் 230 லக்ஷம் பவுனுக்கு மேல் பணமிருந்தது அவருக்குத் தெரிந்தது. இது நியாயமற்ற முறையில்தான் கிடைத்திருக்க வேண்டுமென்பது வியக்தமாகவே தெரிந்ததால் அவர் தூக்கிலிடப்பட்டார். இதன் விளைவாக சர்க்கார் அதிகாரிகளிடையே விசேஷப் பரபரப்பு ஏற்பட்டது.

## பிரிட்டன் பிரவேசம்

ஈஸ்ட் இந்தியா கம்பெனிக்கு அளிக்கப்பட்டிருந்த ஏகபோக வர்த்தக உரிமை 1813-ல் ரத்தாயிற்றல்லவா? உடனே ஐரோப்பிய நாடுகளிடையே வர்த்தகப் போட்டி தலைவிரித்தாடத் தொடங்கியது.

பிரிட்டனுடன் வர்த்தக ஒப்பந்தம் செய்து கொள்ளும்படி 1816-ல் லார்ட் ஆம்ஹெர்ஸ்டிடம் பிரிட்டிஷ் மன்னர் ஒரு கடிதத்தைச் சீன சக்ரவர்த்திக்கு அனுப்பினார். ஆனால், சக்ரவர்த்தியின் பதில் பிரிட்டனுக்குத் திருப்தியளிக்கவில்லை. வர்த்தக ஒப்பந்தங்களின் மூலம் சிற்சில நன்மைகள் கிடைக்குமாயினும், நாளடைவில் அவை சீன சுதந்திரத்துக்கு உலைவைக்குமென்று தேச மக்கள் உண்மையாகவே நம்பினர். ஆகையால்தான் ‘மாற்றானுக்கு இடங்கொடேல்’ என்ற கொள்கையில் அவர்கள் மிகுந்த நம்பிக்கை வைத்தனர்.

அதிருப்தியடைந்த சர்க்கார் உத்தியோகஸ்தர்களைப் பின்பற்றியவர்கள் அடிக்கடி சக்ரவர்த்தியை வெருட்டிவிடச் சதிசெய்தனர். சக்ரவர்த்தியைக் கொலை செய்ய இரண்டு முயற்சிகளும் நடைபெற்றன. இவைகளுக்கும் அந்நியர்களுக்கும் - குறிப்பாக பிரிட்டிஷாருக்கும்-சம்பந்தமுண்டு என்பது சில சரித்திராசிரியர்களின் கருத்து. 19-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பிரிட்டனுக்கும் பிரான்ஸுக்கும் எங்கும் போர் நடந்துகொண்

டிருந்தது. இது சீனுவுக்கும் வியாபித்தது. அங்கு பிரான்ஸை மிஞ்சவிடாமல் செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் பிரிட்டன் பல யுத்தக் கப்பல்களைச் சீனுவுக்கு அனுப்பியது.

## சீனுவை அழித்த அபினி

வெளிநாடுகள் சீனுவில் விசேஷ வர்த்தக உரிமைகளைப் பெறுவதில் ஆயுதபலத்தை உபயோகித்துப் போட்டி போட்டன என்று பிரஸ்தாபித்தோம். பிரிட்டன் சம்பந்தப்பட்ட வரையில் இதைச் சற்று விரிவாய் ஆராய்வது அவசியம். 1260-ல்தான் முதன் முதலாக மங்கோலியர்கள் அபினிப் பழக்கத்தைச் சீனுவில் புகுத்தினர். அதுமுதல் அது சீன உயர்தர வகுப்புக்களிடையே பரவ ஆரம்பித்தது. ஆனல், சீனுவில் இதை ஏழைகளுக்கும் கிடைக்குமாறு மலிவாய் விற்று கொள்ளைலாபம் அடிக்கலாம் என்று தெரிந்ததும் பிரிட்டிஷார் அதில் மும்முரமாய் முனைந்தனர். அபினிப் பழக்கம் முற்றினுல், மக்கள் ஆண்மையிழந்து, வீரம் நலிந்து, தங்கள் சூழ்ச்சிகளுக்குச் சுலபத்தில் இரையாவது திண்ணம் என்பதை பிரிட்டிஷார் நன்குணர்ந்திருந்தனர். ஆகையால்தான் இந்த வியாபாரத்தில் அவர்கள் விசேஷ கவனம் செலுத்தியது. தங்கள் அட்டூழியங்களை மறைக்க பிரிட்டிஷார் என்ன சாதுர்யமான சமாதானங்களைச் சீனுவைப்பற்றிய நூல்களில் நுழைத்

திருந்தபோதிலும், சீனர்களை எதிர்ப்பு உணர்ச்சியற்ற வர்களாகச் செய்யவேண்டு மென்பதே அவர்களுடைய நோக்கம் என்பதைச் சரித்திர திருஷ்டியுள்ளவர்களெல் லோரும் ஒப்புக் கொள்ளத்தான் செய்வார்கள். வட இந்தியாவில் ஐக்ய மாகாணம், பீஹார், அஸ்ஸாம் முதலிய வற்றில் அபினியே முக்கியமான சாகுபடியாக்கப் பட் டது. இதன் ஏற்றுமதி வர்த்தகம் பிரிட்டிஷ் ஏக போகமாகச் செய்யப்பட்டது. சக்ரவர்த்தியும் உயர்தர சீன அதிகாரிகளும் இதை ஆரம்பம் முதல் அழுத்த மாகக் கண்டித்து வந்திருக்கின்றனர்.

சீனாவில் பிரிட்டிஷ் விவகாரங்களைக் கவனித்துக் கொள்வதற்காக 1834-ல் லார்ட் நேபியர் நியமிக்கப் பட்டார். சீனாவில் பிரிட்டிஷ் வர்த்தகத்தைப் பெருக்கு வதே அவருடைய முக்கியமான வேலை. அவர் ஒரு யுத்தக் கப்பலில் காண்டன் வந்து, வைசிராயைக் காண விரும்பினார். பரஸ்பரம் இரு நாடுகளுக்கும் அனுகூல மான வர்த்தக ஏற்பாட்டைச் செய்து கொள்ளவே பிரிட் டன் விரும்புவதாகக் கூறினார். ஆனால், பிரிட்டிஷ் முயற்சியைத் தடுக்க சீனர் முயற்சித்தால், அதெல்லாம் வியர்த்தமாகும் என்ற பயமுறுத்தலையும் தம் அறிக்கை யில் லார்ட் நேபியர் சேர்த்திருந்தார். இந்தத் தருணத் தில் 1835-ல் சக்ரவர்த்தி காலமானார். அவருக்குப் பின் வந்த சக்ரவர்த்தி டாக்வாங், லின் என்பவரை அந் நியர்களுடன் பேரம்பேசுவதற்காக அனுப்பினார். இதற்

குள், லார்ட் நேபியர் போய் காப்டன் எலியட் என்ற பிரிட்டிஷ் அதிகாரி வந்துவிட்டார். பிரிட்டிஷ் கோரிக்கைகளை, வைசிராயாகிய தனக்கு ஒரு மனுவின் மூலம் அனுப்பவேண்டுமென்று லின் தெரிவித்தார். காப்டன் எலியட் இதற்கு இணங்கவில்லை. இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் கொண்டு வந்திருந்த 25,000 பெட்டி அபினியை லின் கைப்பற்றிவிட்டார். ஆயுத பலத்தின் உதவியைக்கொண்டு சீனவின் உட்புறத்துக்குக் கொண்டு போய் இதை விற்க பிரிட்டிஷார் உத்தேசித்திருந்தனராம். பிரிட்டிஷார் மிகவும் அநாகரிகமான விதத்தில் 1839-நவம்பரில், இதற்கு வஞ்சம் தீர்த்துக்கொண்டனர். காண்டன் அருகில் ஒரு பிரிட்டிஷ் கடற்படை தோன்றி அங்கிருந்த சின யுத்தக் கப்பல்களையும் வர்த்தகக் கப்பல்களையும் திடீரென மூழ்கடித்துவிட்டது. போர் செய்வதாக முன்னடியே அறிவிக்காமல் சின சர்க்கார்மீது பிரிட்டன் போர் தொடுத்தது என்பது இங்கு குறிப்பிட வேண்டிய உண்மை. இந்த யுத்தம் தான் 'அபினி யுத்தம்' என்று அழைக்கப்படுவது. இந்த யுத்த காலத்திலும், பின்பும், தெற்கே காண்டனிலிருந்து வடபுறம் மண்ட்ஸின் வரையில், கள்ள அபினி விற்பனையை பிரிட்டிஷார் வெகு ஜோராக நடத்திவந்தனர்.

## அபினி யுத்தம்

1840-ல் பிரிட்டன் பெரிய போருக்கு ஆயத்தம் செய்தது. 1841-ல் காண்டன் துறைமுகத்தை பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்கள் முற்றுகை போட்டன. வடக்கே பீகிங் அருகிலும் ஒரு முக்கியமான இடத்தை அவை முற்றுகை யிட்டன. பிரிட்டிஷாருடன் சமரஸம் செய்து கொள்ளவேண்டிய நிலைமை ஏற்படவே லின் என்ற வைசிராயை வாபஸ் பெற்றுவிட்டு, கிஷேன் என்பவரைச் சக்ரவர்த்தி காண்டனுக்கு அனுப்பினார்.

கிஷேன் ஒரு உடன்படிக்கையைச் செய்து கொண்டார். அதன்படி இப்பொழுது ஹாங்காங் இருக்கும் தீவு பிரிட்டனுக்குத் தரப்பட்டது. மற்ற நாடுகளைப் போலவே சம உரிமையுடன் வியாபாரத்தை நடத்த பிரிட்டனுக்கு உரிமை யளிக்கப்பட்டது. சீன சர்க்கார் இதை அங்கீகரிக்க மறுத்து விட்டனர். கிஷேன் தேசத்துரோகம் செய்ததாகச் சிறைப்படுத்தப்பட்டார். வெளிநாட்டினரை அடியோடு ஒழித்துவிட வேண்டுமென்று சக்ரவர்த்தி பாடுபட்டார். பிரிட்டிஷார் மும்முரமாய்ப் போர் தொடுத்தனர். ஸர் ஹ்யூ கப் என்பவர் தலைமையில் ஏராள்மான துருப்புகள் வந்தன. பல கடற்கரைக் கோட்டைகளை பிரிட்டிஷ் கடற்படை பிடித்து, ஷாங்ஹாய் அருகிலுள்ள யாங்ட்ஸீ முகத்துவாரத்தை முற்றுகைபோட்டு, நான்கிங்வரை முன்னேறி

விட்டது. கடைசியில் சக்ரவர்த்தி சமரஸத்துக்கு இசைந்தார். காண்டன், ஆமாய், பூசோ, நிங்போ, ஷாங்ஹாய் முதலிய ஐந்து துறைமுகங்களிலும் வர்த்தகம் செய்யும் உரிமை பிரிட்டனுக்குக் கிடைத்தது. 1842-ல் இந்த உடன்படிக்கை கையெழுத்தாயிற்று. ஆனால், இதை ஒரு மத்ய சர்க்கார் உடன்படிக்கையென மதியாமல் மாகாண உடன்படிக்கையாகவே சீன சர்க்கார் பாவித்தனர். இதை ஒரு நொண்டிச் சாக்காக வைத்துக் கொண்டு பிரிட்டிஷார் தெற்கே சென்று ஹாங்காங்கைக் கைப்பற்றிக் கொண்டனர். காண்டனுக்கு இன்னம் ஏராளமான பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்கள் வரவழைக்கப்பட்டன. பிரிட்டிஷ் போர்க்கோலத்தைக் கண்டதும் சக்ரவர்த்தி, யே என்ற புதிய கவர்னரை காண்டனுக்கு அனுப்பினர். அவர் பிரிட்டிஷாருக்கு எதிராக குவாங்டுங் மாகாணத்தில் பெரிய படையைத் திரட்டினர். ஹாங்காங்கை பிரிட்டன் ஒரு பெரிய படைத் தளமாக்கி விட்டது.

இதற்கிடையே பல ஸர்வதேச சிக்கல்கள் தோன்ற வாரம்பித்தன. வர்த்தக உரிமைகளைக் கோரி அமெரிக்க சர்க்கார் ஒரு கமிஷனரை அனுப்பினர். பிரெஞ்சுப் பிரதிநிதிகள் மதப் பிரசார உரிமை வேண்டுமென்ற போர்வையின்கீழ் பல உரிமைகளைக் கோரினர்.

அபினிப் பழக்கத்தினல் சீன மக்களின் ஒழுக்க முறையும் தேக வலிமையும் மிகவும் குன்றி விட்டன

என்று பிரிட்டிஷ் ராயல் கமிஷன் மெம்பர்களில் ஒருவ ரான ஸ்ரீ.ஹென்ரி ஜே வில்ஸன் என்பார் கூறியிருக்கிருர். மிதமாக உட்கொள்வதால் நற்பயன் ஏற்படுவதாகக் கூறி, ஒன்றும் மாறுதல் செய்யவேண்டா மென்று கமிஷனில் பெரும்பான்மையோர் சிபார்சு செய்தனர். ஸர் ஜார்ஜ் ஸ்டாண்டன்,ஸர் ஸ்டாம்போர்ட் ராபின்ஸ், மாண்ட்காமரி மார்டின் போன்ற பிரிட்டிஷ் உயர்தர அதிகாரிகள், பன் முறை இந்தப் பழக்கத்தின் கேடுகளை விவரமாய் எடுத் துரைத்திருக்கின்றனர். சீனவின் நன்மையை உத்தே சித்து, இந்தியாவில் அபினி உற்பத்தி தடைசெய்யப் படவேண்டும் என்று ஸ்ரீ. வில்ஸன் சிபார்சு செய்தார். 1824-ல் பார்லிமெண்டிலும் இதுபற்றி பிரேரணை வந் தது. லார்ட் ஆஷ்லி, ஸ்ரீ. குர்னே, ஸ்ரீ. பிரை போன்ற பிரிட்டிஷார் அபினி எதிர்ப்புக் கிளர்ச்சியை மும்முர மாய் நடத்தினர். ஆனல்; ருசிகண்ட பூனைபோல், வெறுக்கத்தக்க மிருக உணர்ச்சியுடன் பிரிட்டிஷார் இந்த விஷத்தை இடைவிடாமல் சீனவுக்கு அனுப்பி அந்நாட்டு மக்களை உணர்ச்சியற்ற மயக்கக்காரர்களாக்கி விட்டனர். பிறகு ஸர்வதேச சங்கம் தோன்றியபின் நாகரிக உலகம் முழுமையுமே ஒரு முகமாக பிரிட்டிஷ் போக்கைக் கண்டித்தது. ஆகவே பிரிட்டன் இந்தியாவி லிருந்து அபினியை சீனவுக்கு அனுப்புவதில்லை என்ற கொள்கையை ஒத்துக்கொண்டு, படிப்படியாய் அதை நிறைவேற்றி வைத்தது. இந்தியாவிலிருந்து அபினி

போவது சில வருஷங்களுக்கு முன் அடியோடு நிறுத்தப்பட்டது.

சீன சர்க்காரின் செல்வாக்கைச் சீர்குலேத்து, தன் காரியத்தை எவ்விதத்திலும் சாதித்துக்கொள்ளவேண்டும் என்பதுதான் பிரிட்டிஷ் சர்க்கார் சீனு சம்பந்தமாய் அனுஷ்டித்து வந்த கொள்கையின் நோக்கம். தேசத்தின் பல பாகங்களில் அந்நியரின் தூண்டுதலின்பேரில், அதிருப்தியாளர் கலகம் செய்வது அதிகமாயிற்று.

## தைப்பிங் கலகம்

1850-ல் சக்ரவர்த்தி டாக்வாங் உயிர் நீத்தார். ஸின்பெங் என்ற அவருடைய நான்காவது புத்திரன் சக்ரவர்த்தியானுன். பத்தொன்பது வயதேயான இவ்விளைஞன் வெகு சீக்கிரத்தில் மாண்டுபோனுன். ஆயினும் அவனுடைய காலத்திலே பல முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்தன. ஹூங் என்ற ஒரு பேர்வழி ஒரு கனவு கண்டான். அதை நடத்தி வைக்கவேண்டுமென்று கடவுள் தனக்கு ஆணையிட்டிருப்பதாக நினைத்தான். அவன் காண்டனில் ஒரு படை திரட்டிக்கொண்டு ஒன்றன்பின் ஒன்ருக மூன்று வருஷங்களுக்குள் எழு மாகாணங்களைத் தன் வசமாக்கிக் கொண்டான். நான்கிங்கூட அவன் வசமாயிற்று. அவன் பிரகடனம் செய்துகொண்டு, தைப்பிங் பரம்பரை என்ற ஒரு பரம்பரையையும் ஸ்தாபித்தான். இந்த 'தைப்பிங்' கலகக்

காரர் பீகிங்மீது படையெடுக்கவும் துணிந்தனர். டீண்ட்ஸினை முற்றுகையிட்டனர். இந்தக்கலகக்காரருக்கு பிரிட்டிஷ் சர்க்காரின் மறைமுகமான ஆதரவும் அனு தாபமும் நிறைய இருந்தது என்பது சரித்திர பூர்வ மான உண்மை. இதைச் சற்று மறைத்து வைத்து, பிரிட் டிஷார் நடுநிலைமை வகித்தார்களென்று ஸர். ரிச்சார்ட் டெம்பிள் போன்ற சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர். சீன மத்திய சர்க்கார் தைப்பிங் கலகக்காரரை விரட்டி யடித்து தங்கள் செல்வாக்கை நிலைநாட்டத் துணிந்த வுடன் பிரிட்டிஷாரும் சக்ரவர்த்தியிடம் பரிவு காட்டி னர். தைப்பிங் தலைவரையே சீன சக்ரவர்த்தியென அங்கீகரிக்கலாமென்று பிரிட்டன் நினைத்திருந்த தருணத் தில், நிலைமையில் ஏற்பட்ட இந்த மாறுதல்தான் பிரிட் டன் திடீரென குட்டிக்கரணம் அடித்ததற்குக் காரணம். 1856-ல் ஆரம்பமான தைப்பிங் கலகம் 1861-ல்தான் முடிவடைந்தது. இவ்வளவு நீண்ட காலம் இது நீடித்த தற்குக் காரணம் பிரிட்டிஷ், பிரெஞ்சு ஆதரவுதான் என்பதைப்பற்றிச் சந்தேகமிருக்க முடியாது. சீன சர்க்காருக்குத்தான் வெற்றியென்ற நிலைமை ஊர்ஜித மானபின், பிரிட்டன் சக்ரவர்த்தியுடன் உறவாடத் தொடங்கியது. கலகத்தை அடக்க கார்டன் என்ற பிரிட்டிஷ் அதிகாரியின் உதவியும் கடைசித் தருணத்தில் தரப்பட்டது.

## இரண்டாவது சீன யுத்தம்

இதற்கிடையே 1856-ல் காண்டனில் சர்க்காருக்கு எதிராக பிரிட்டிஷ் சூழ்ச்சிகள் வலுக்கவே, ஒரு பிரிட்டிஷ் கப்பலைச் சீன அதிகாரிகள் சோதனை போட்டனர். உடனே பிரிட்டன் சீனுமீது துவஜம் கட்டிவிட்டது. இதுதான் இரண்டாவது சீன யுத்தத்தின் ஆரம்பமென்று கூறலாம். மேலே குறிப்பிட்டுள்ள சோதனைக்காக பிரிட்டன் நஷ்ட ஈடு கேட்டது. சீனு மறுக்கவே, ஸர் ஜான் பௌரிங் என்ற பிரிட்டிஷ் பிரதிநிதி போர் தொடுத்தார். கவர்னருடைய மாளிகையை பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்கள் அழித்தன. சீனர் உறுதியாக எதிர்த்துப் போரிட்டதால் பிரிட்டிஷ் கப்பல்கள் முதலில் பின் வாங்கவேண்டியதாயிற்று. ஆனால், சீக்கிரத்தில் லார்ட் எல்ஜின் ஏராளமான துருப்புகளுடன் அனுப்பப்பட்டார்.

1857-ல் இந்திய சுதந்திர யுத்தத்தை அடக்கிவிட்டபின் காண்டன் வந்த லார்ட் எல்ஜின், விரைவில் அந்நகரைப் பிடித்து கஜானுவையும் கைப்பற்றிக் கொண்டார். கவர்னர் யே கைது செய்யப்பட்டு கல்கத்தா அனுப்பப்பட்டார். அங்கு ஒரு சிறையில் அவர் மரித்தார். காண்டனைத் தாங்கள் பிடித்ததைக்கூட சீன மத்திய சர்க்காருக்கு பிரிட்டன் முதலில் தெரிவிக்கவில்லை. சீன சர்க்கார் பிரிட்டிஷ் அதிக்ரமத்தை அழுத்தமாய்க் கண்

டித்தனர். அவர்களுடன் பேரம் பேசக் கண்டிப்பாய் மறுத்துவிட்டனர். இதைக் கண்டு கோபங்கொண்ட லார்ட் எல்ஜின், வடசீனுவில் டாகு கோட்டையைக் கைப்பற்றிக்கொண்டு, டீண்ட்ஸின் அருகாமைக்குத் தன் கடற்படையைக் கொண்டுபோனூர். 1858-ல் சக்ர வர்த்தி உடன்படிக்கைக்கு இணங்கவேண்டியதாயிற்று. அதன்படி பழைய வர்த்தக ஒப்பந்தங்கள் மீண்டும் ஊர் ஜிதமாயின. டீண்ட்ஸினில் புதிய உரிமைகள் கிடைத் தன. பீகிங்கில் பிரிட்டிஷ் மந்திரி ஒருவர் இருப்பதை சீனு எற்றுக்கொண்டது. இத்துடன் பிரிட்டிஷ் தொந்தரவு முற்றுப்பெறும் என்று சீனர் நம்பினர்; ஆனூல் அது ஓய்ந்தபாடில்லை. பீகிங்கில் பிரிட்டிஷ் மந்திரி யிருப்பது பற்றி புதிய தகராறுகள் கிளம்பின. பிரான்ஸும் இதே சமயத்தில் இதே பாத்தியதையைக் கோரியது. அதுவும் மறுதளிக்கப்பட்டது. இதற்குள் பிரிட்டிஷ்-பிரெஞ்சு உறவுகள் சீர்திருந்தவே, சீனுவை ஒருமுகமாய் எதிர்ப்ப தென்று இருநாடுகளும் தீர்மானித்தன. 1859-ல் புரூஸ் என்ற பிரிட்டிஷ் மந்திரி பல யுத்தக் கப்பல்களுடன் டீண்ட்ஸினைத் தாண்டிப் போக முயற்சிக்கையில், அவ ருக்குச் சீனர் இடமளிக்க மறுத்தனர். மறைவிலிருந்த பீரங்கிகளிலிருந்து குண்டுகள் சரமாரியாய்க் கிளம்பின. பிரிட்டிஷார் பெருத்த நஷ்டத்துடன் பின்வாங்க வேண் டியதாயிற்று. சமாதான காலத்தில் தாங்கள் தாக்கப் பட்டதாக பிரிட்டிஷார் சிலுசிலுத்தனர். சீனுவை

எதிர்த்து ஒருமுகமாய்ப் போரிட பிரிட்டனும் பிரான்ஸும் ஆயத்தமாயின. ஜெனரல் ஹோப்-கிராண்ட் என்ற தளகர்த்தரின் கீழ் 13,000 ஆங்கிலேயர்களும், ஜெனரல் மாண்டபான் என்பவரின்கீழ் 7,000 பிரெஞ்சு வீரர்களும் பீகிங்கை முற்றுகையிட ஏற்பாடு செய்தனர். டாகு கோட்டைகளைப் பிடித்துக்கொண்டு டீண்ட்ஸினை நெருங்கினர். இரண்டு பெரிய யுத்தங்களில் சீனரை முறியடித்தபின் இந்தக் கூட்டு சைன்யம் பீகிங்கை வசப் படுத்தும் தருணத்தில், சக்ரவர்த்தியின் சகோதரர் குங் என்பவர், பழைய உடன்படிக்கைகளை ஊர்ஜிதம் செய்து விட்டார். இதன் விளைவாக ஹாங்காங்குக்கு எதிரிலுள்ள கௌலூன் நகரமும் அதைச் சார்ந்த பிரதேசங்களும் பிரிட்டிஷாருக்குக் கிடைத்தன. சக்ரவர்த்தி 1861-ல் காலமாய்விட்டார். அவருடைய மகன் நான்கே வயதான துங்சீ சக்ரவர்த்தியானன். இளவரசர் குங் ராஜப்பிரதிநிதியா யிருந்தார்.

1864-ல் தைப்பிங் கலகம்அடக்கப்பட்டது ஞாபக மிருக்கலாம். மேற்கு சீனவிலும் ஷென்ஸியிலும் யுன்னனிலும் முகம்மதியர்கள் அடிக்கடி கலகம் செய்தனர். அவையும் அடக்கப்பட்டன. 1872-ல் மெஜாரிடி யடைந்த சக்ரவர்த்திக்குத் திருமணம் நடைபெற்றது. ஆஹ்லூதா என்ற மஞ்சு மாதுதான் மணப்பெண். ஆனல் அவருடைய மணவாழ்க்கை மூன்றே வருஷங்களில் முற்றுப் பெற்றது. ஆஹ்லூதாவும் உயிர் நீத்தாள். ஆகவே

பழைய சக்ரவர்த்தியின் இரண்டு மனைவிகளும் குங்கின் உதவியுடன் ராஜ்யபாரம் வகித்து வரலாயினர். அவர்கள் வேறு ஒரு நான்கு வயதுக் குழந்தையை குவாங்ஷூ என்ற பெயருடன் சக்ரவர்த்தியாக்கினர். இந்திய சர்க்கார் யுன்னானுக்கு அனுப்பிய ஒரு பிரிட்டிஷ் அதிகாரி கொலை செய்யப்பட்டார். இதை ஒரு சாக்காக வைத்துக்கொண்டு இன்னும் பல சலுகைகளை பிரிட்டிஷார் பெற்றுக் கொண்டனர்.

மேற்கு சீனாவி லிருந்துவந்த கொந்தளிப்பைத் தங்கள் நாடுபிடிக்கும் ஆசைக்கு அனுசரணையாக மேல்நாடுகள் உபயோகித்துக்கொள்ள ஆரம்பித்தன. மேற்குசீனாவில், காஷ்காரில் முஸ்லிம்கள் கலாட்டாசெய்தனர். அவர்களைத் தங்கள் வசமாக்கிக் கொள்வதற்காக பிரிட்டிஷார் துருப்புகளுடன்கூட பிரதிநிதி கோஷ்டிகளை அனுப்பினர். இது 1871-ல் நடைபெற்ற சம்பவம். அதே வருஷத்தில் தங்கள் எல்லையை அடுத்துள்ள சிஹிலி என்ற மாகாணத்தை, தற்காலிகமாக ரஷ்யர் பிடித்துக்கொண்டனர். இதைச் சகிப்பதில்லை என்று சீன சர்க்கார் தீர்மானித்துவிட்டனர். ஏராளமான துருப்புகளை அனுப்பினர். முதலில் அங்குள்ள முஸ்லிம் தலைவர்களைப் பணியவைத்த பிறகு வெளிநாடுகளின் ஆக்ரமிப்பில் கவனம் செலுத்தப்பட்டது. ரஷ்யாவுடன் இது சம்பந்தமாய் ஓரளவுக்கு அனுகூலமான உடன்படிக்கை ஏற்பட்டது. ரஷ்யாவுக்குச் சில ஜில்லாக்கள் கிடைத்தன. இரண்டு ராணிகளும் சீனா

வின் ஐக்கியத்தை முதல் தரமாக்கினர் என்று கூறலாம்.

1884-ல் பிரான்ஸ் கிழக்கோடியில் நாடு பிடிக்கப் பேராவல் கொண்டது. இப்போதுள்ள இந்தோ-சீனுவில் ஒரு பாகம் அப்பொழுது சீனுவின் ஆதிபத்யத்துக்கு உட்பட்ட ஒரு சிற்றரசாயிருந்தது. பிரான்ஸ் போரிட்டு அந்தப் பிரதேசத்தைக் கைப்பற்றிக் கொண்டது. சீனத் துருப்புகள் அங்கிருந்து பின்வாங்கின. இப்போது ஜப்பானிடமுள்ள பார்மோஸா தீவு அப்போது சீனுவுடையது. அதைப் பிடிக்க பிரெஞ்சுக் கடற்படை பெருமுயற்சி செய்தும் பலிக்கவில்லை. பிரெஞ்சுக்காரர் எச்சரிக்கையின்றி பார்மோஸா அருகில் சீன யுத்தக் கப்பல்களை மூழ்கடித்தனர்.

1887-ல் சக்ரவர்த்தி குவாங்ஷூ பதவிக்கு வந்தார். சீனுவின் கடற்படை பலத்தைப் பெருக்கவேண்டியதன் அவசியத்தை உணர்ந்து, அந்த வேலையில் அவர் மும்முரமாய் ஈடுபட்டார்.

## ஜப்பானுடன் யுத்தம்

1894-96ல் கொரியா சம்பந்தமாக ஜப்பானுடன் சீனு செய்த போரைப்பற்றி எற்கனவே பிரஸ்தாபம் செய்யப்பட்டிருக்கிறது. இதில் சீனு தோற்றதற்குக் காரணம் நவீன தளவாடங்கள் இல்லாமையே. தவிர, ஐரோப்பிய முறையில் ஜப்பானிய ராணுவம் திருத்தியமைக்கப்பட்டிருந்தது. ஜெர்மன் குரூப் கம்பெனியாரிடமிருந்து வந்த யுத்த தளவாடங்கள் அவர்களிடம் யதேஷ்டமாயிருந்

தன. ஆனால் சீனரோ, பெரும்பான்மையும் தங்கள் விற்களையும் அம்புகளையுமே நம்பியிருக்க நேரிட்டது.

யுத்தத்தில் தோற்ற போதிலும், ராஜ தந்திரங்களின் மூலம், இழந்த இடங்களை மீண்டும் பெற சீனா முயற்சித்தது. பிரான்ஸும் ரஷ்யாவுமாகச் சேர்ந்து குறுக்கிட்டன. ஜெர்மனியும் அவர்களுடன் சேர்ந்து கொண்டது. இந்த பேரத்தின் போக்கை ஜாக்கிரதையாய்க் கவனித்து, பக்குவமான சமயத்தில் குபீரெனப் பாயலாமென்ற உத்தேசத்துடன் பிரிட்டன் சற்று ஒதுங்கி நின்றது. இந்த பேரத்தின் காரணமாக லியோடிங் பிரதேசத்தைச் சீனா மீண்டும் பெற்றது. இதன் விளைவாக சீன சர்க்காரை மேல் நாடுகள் தங்கள் தாக்ஷண்யத்துக்குக் கட்டுப்படுத்தி விட்டன.

## மேல்நாடுகளின் கோரிக்கைகள்

ஜப்பானுடன் யுத்தம் முடிவடைந்ததும் மேல் நாடுகள் பல கோரிக்கைகளை வற்புறுத்தலாயின. இந்தோ சீனாவிலிருந்து தென் சீனாவுக்கு ரயில் பாதை போட ஏகபோக உரிமை வேண்டுமென்றனர் பிரெஞ்சுக்காரர். ஜெர்மனியும் முஸ்தீபுகளைச் செய்துவந்தது. ரஷ்யா மேற்கேயிருந்து மஞ்சூரியா வழியாக, கிழக் கோடியிலுள்ள விளாடிவாஸ்டக் என்ற துறைமுகத்துக்கு ரயில்பாதை போடத் திட்டம் போட்டது. அதுமட்டுமல்ல. மஞ்சூரியாவில் முக்டெனுக்கும் போர்ட் ஆர்த

ருக்கும் ரயில்பாதை போடவும் அனுமதி கேட்டது. இவற்றை யெல்லாம் மறுதளிக்க சீன சர்க்காருக்குத் தைரியமில்லை. ரஷ்யா சிஹிலி விரிகுடாவில் அபிலாஷை வைப்பது தெரிந்ததும் பிரிட்டன் சினந்தது. ஷாண்டுங் மாகாணத்தில் சில ஜெர்மன் பாதிரிகள் கியாசோ என்ற விடத்தில் கொலை யுண்டனர். இதற்கு ஜெர்மனி நஷ்ட ஈடு கேட்டது. நஷ்ட ஈடு மறுக்கப்படவே, ஜெர்மன் கடற்படை கியாசோவைப் பிடித்துக்கொண்டது. பிற நாடுகளும் ஜெர்மனியைப் பின்பற்றுமோ என்று எல்லோரும் அஞ்சினர். பிரிட்டன் எச்சரிக்கையாக ஒரு அறிக்கை விடுத்தது. துறைமுகங்களில் தனக்குள்ள பாத்தியதைகளை ஆயுத பலத்துடன் காப்பாற்றுவது பிரிட்டிஷ் உத்தேசம் என்று அந்த அறிக்கை கூறியிது. சீனுவில் பிரிட்டிஷ் வர்த்தகத்துக்கு நிர்ப்பந்தம் இருக்கக் கூடாதென்பதுதான் இந்தக் கொள்கை. இதற்காக ஒரு பெரிய கடற்படையையும் பிரிட்டன் அனுப்பி வைத்தது.

சீனு, பெரிய தேசமாயிருந்த போதிலும், ஜப்பானுக்கு நஷ்ட ஈடு கொடுப்பதற்குப் போதிய பணம் கிடையாது. ஆகையால், வெய்-ஹை-வெய் என்ற துறைமுகத்தை பிரிட்டனுக்கு ஈடு காட்டிக் கடன் கேட்டது. பிரிட்டனும் சம்மதித்தது. இதனுல் பின்னர் பல சிக்கல்கள் நேரிடுமென்று உணர்ந்த ரஷ்யா, பிரிட்டன் கடன் கொடுப்பதைப் பலமாய் ஆட்சேபித்தது. உடனே சீனு, தன் 150 லக்ஷம் பவுன் கடன் மனுவை

வாபஸ் பெற்றது. ரஷ்யா கொடுக்க விரும்பிய கடனையும் மறுதளித்து விட்டது. பிறகு பிரிட்டன் பல சூழ்ச்சிகளைச் செய்து ஜெர்மனியுடன் சேர்ந்து கூட்டாக 160 லக்ஷம் பவுன் கடன் கொடுத்தது. இதனுல் ரஷ்யா கோபமடைந்தது. அதைத் திருப்தி செய்ய சீன சர்க்கார் போர்ட் ஆர்தர் என்ற பிரதான துறைமுகத்தை ரஷ்யாவுக்கு வாடகையாகக் கொடுத்தனர். வட சீனுவில் ரஷ்யாவுக்கு இது மிகவும் அனுகூலமாயிருக்கு மாகையால், பிரிட்டன் மர்மமான பேரங்களை நடத்தி சிஹிலி விரிகுடாவிலுள்ள வெய்-ஹை-வெய்யை வாடகையாகப் பெற்றுக்கொண்டது. தவிர, பிரிட்டிஷ் கடற்படையும் அருகாமையிலுள்ள செமுக்கு வந்துவிட்டது. தெற்கு சீனுவில் குவாங்டுங் மாகாணத்திலுள்ள லீன்சோ விரிகுடாவை, பிரான்ஸ் கைப்பற்றிக் கொண்டது. பிரிட்டனும் ஏற்கனவே கூறியுள்ளபடி, ஹாங்காங்குக்கு எதிரேயுள்ள கௌலூன் பிரதேசத்தைப் பிடித்துக்கொண்டது. சீனுவில் பற்பல பாகங்களில் இம்மாதிரி ராஜீய செல்வாக்குப் பிரதேசங்களை ஒவ்வொரு வெளிநாட்டு வல்லரசும் பிரத்தியேகமாய் ஸ்வீகரித்துக் கொண்டது. செழிப்பான யாங்ட்ஸீ பள்ளத்தாக்குடன் வியாபாரம் நடத்துவதற்கு அனுகூலமாக பர்மாவிலிருந்து யுன்னுன் எல்லை வரை ரயில்வேக்களை பிரிட்டன் போட ஆரம்பித்தது.

இம்மாதிரி வெளிநாடுகள் சீனுவை வகுத்துக் கொண்டதால், வர்த்தக ஒப்பந்தங்கள் எப்படிக் கவுரவிக்

கப்படும் என்ற சந்தேகம் கிளம்பியது. நிர்ப்பந்தமற்ற வர்த்தக உரிமைக்கு விக்கின மேற்படாமலிருக்க வேண்டும் என்பதில் மற்ற நாடுகளைவிடப் பிரிட்டனுக்கு அதிகமான சிரத்தையுண்டு. எந்த நிபந்தனையின் பேரிலும் யாங்ட்ஸீ பள்ளத்தாக்கை வேறு எந்த வல்லாசுக்கும் தருவதில்லை என்ற உத்தரவாதத்தைச் சின சர்க்கார் பிரிட்டனுக்கு அளித்தனர். சீனுவில் பிரிட்டிஷ் வர்த்தகம் உன்னத ஸ்தானம் பெற்றிருக்கும் வரையில், சின சுங்கவரி இலாகா தலைவர் ஒரு பிரிட்டிஷ் பிரஜையாக இருக்கவேண்டு மென்பதற்கும் சீனு சம்மதித்தது.

பிறகு எங்கும் ரயில்வேக்கள் மும்முரமாய்ப் போடப்பட்டன. மஞ்சூரிய ரயில்வே பிரதேசம் ரஷ்யாவுக்குக் கிடைத்தது. பீகிங்-டீண்ட்ஸின் ரயில்வே பிரிட்டிஷ் காண்ட்ராக்டாயிற்று. பிரான்ஸும் பெல்ஜியமுமாக மற்ருெரு முக்கியமான ரயில்வேக்குக் காண்ட்ராக்ட் பெற்றன. ஜெர்மனிக்கு வடகிழக்கு சீனுவிலும், பிரிட்டனுக்கு தெற்கு சீனுவிலும், ஷாங்ஹாயை அடுத்துள்ள பிரதேசங்களிலும் காண்ட்ராக்ட் கிடைத்தன. 1899-ல் மொத்தமிருந்த ரயில்வே 2, 270 மைல். இதில் சின சர்க்காருக்குச் சொந்தமானது 317 மைல்தான். அப்பொழுது வேலை பூர்த்தியாகாமலிருந்தது 2,507 மைல்.

## இந்த நூற்ருண்டின் ஆரம்பத்தில் சீனுவின் நிலைமை

சின சாம்ராஜ்யத்தில் மங்கோலியர்கள், மஞ்சுக்கள், முஸ்லிம்கள் போன்ற பல வகுப்பினர் இருக்கின்ற

னர். ஆயினும் அவர்களெல்லோரும் பேசுவது சீன பாஷைதான். அவர்களெல்லோரும் ஏறக்குறைய ஒரே விதமான பழக்க வழக்கங்களை அனுஷ்டிப்பவர்கள். சுறு சுறுப்பு நிறைந்தவர்களாயினும், எதிர் காலத்தில் சிரத்தை மிகுந்தவர்களல்லர். அவர்கள் 1800-ல் எந்த நிலைமையிலிருந்தார்களோ அதே நிலைமையில் தான் நூறு வருஷங்களுக்குப் பிறகும் இருந்தனர். இந்தியா வைப்போலவே சிறந்த இலக்கியங்களும் நாகரிகமும் அங்குள்ளன. ஆனால், பாமர மக்களுக்கும் அவற்றிற் கும் நெடுந்தூரம்.

அவ்வப்போதைய நிலைமைக்கேற்றவாறு விரை வில் மாறி வாராததால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசியில் சீனாவின் நிலைமை மிகவும் மோசமாயிருந் தது. ரஷ்யா, பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி, பெல்ஜியம், ஜப்பான், அமெரிக்கா ஆகிய எல்லா நாடுகளும் எத்தரு ணத்திலும் அதைப் பகிர்ந்து கொள்ளக்கூடிய நிலைமை யில் சீனா இருந்தது. அதைத் தடுக்க சீனாவால் கொஞ்ச மும் முடியாது. அவற்றிடையே இருந்துவந்த பரஸ் பர குரோதமும், மாத்சர்யமும், போட்டியுமே அதன் ஆதிபத்தியம் அடியோடு அற்றுப் போகாமலிருந்து வருவதற்குக் காரணம்.

சீனாவின் ராணுவ அமைப்பு 19-வது நூற்றாண் டின் கடைசியில்கூடச் சீராயில்லை. மாகாண கவர்னர்கள் எல்லோரும் தளபதிகள். மத்ய சர்க்காரிடமிருந்து

மான்யம் பெற்று ராணுவத்தை நிர்வகித்து வந்தனர். அவர்களுக்குள் விரோதமும் போட்டியும் அதிகம். துருப்புகளும் எப்பொழுதும் திறமையான நிலைமையில் வைக்கப்பட்டிருக்கவில்லை. சீன சர்க்காரின் பட்ஜெட்டும் பிரசுரிக்கப்படுவது வழக்கமில்லை. "கீழ்க்கோடியின் நோயாளி" என்று எல்லா நாடுகளும் சீனுவை ஏளனம் செய்து வந்தன.

## பாக்ஸர் கலகம் (முதல் விடுதலைப் போர்)

1899 இறுதியில் சீனு, மாலுமியற்ற, துடுப்பற்ற தோணிபோல், கொந்தளிப்பான கடலில் தத்தளித்துக் கொண்டிருந்தது. மாஜி சக்ரவர்த்தியின் மனைவி, அந்நிய ஆதிக்கத்திலிருந்து சீனுவை விடுவிக்கத் துணிச்சலுடன் கடைசியாக முயற்சித்துப் பார்த்தாள். 1898-ல் ஒரு தேச விடுதலைத் தொண்டர் படையை அவள் தேசமெங்கும் தோற்றுவித்தாள். ஆங்கிலத்தில் இதை 'பாக்ஸர்' படை என்று கூறுவார்கள். சீனுவிலுள்ள எல்லா ஐரோப்பியர்களையும் திடீரெனத் தாக்குவதும், அவர்களுடைய சொத்துக்களை அழித்துவிடுவதும் இந்தத் தொண்டர் படையின் வேலை. பீகிங்கில் இது அநேகமாய் வெற்றி பெற்றதென்றும் கூறலாம். ஐரோப்பிய நாடுகள் மண்ணுசை கொண்டு தலைவிரி கோலமாய் ஆடுவதாகவும், ஒரு புலியைப்போல் சீனுவைக் கிழித்து வருவதாகவும் அவளுடைய அறிக்கைகள் கூறின. ஆனுல், இதே

சமயத்தில் ஐரோப்பாவிலிருந்து ஏராளமான ஆயுதங்களும் நவீனப் போர்ச் சாதனங்களும் இறக்குமதி செய்யப்பட்டு வந்தன. 1899 கடைசியில் தேசமெங்கும் பாக்ஸர்கள் கிளம்பினர். பல ரயில்வேக்கள் வெட்டப்பட்டன. அந்நியர்களின் துருப்பு நடமாட்டங்களைத் தடுப்பதே இதன் நோக்கம். ஏராளமான அந்நியர்கள் கொலையுண்டனர். 1900 ஜுலை 16-ல் பீகிங்கில் நடைபெற்ற ஒரு தேசிய மந்திராலோசனையில் சக்ரவர்த்தினியின் யோசனை அங்கீகரிக்கப்பட்டது. எல்லா ஐரோப்பிய காரியாலயங்களும் தகர்க்கப்பட்டன. ஐரோப்பிய நாடுகள், தம் ஒற்றர் மூலம் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டிருந்தனர். கடற்படைகள் தயாராயிருந்தன. ஆனால், உட்பிரதேசங்களுக்குச் சென்று தாக்குவதற்கு வேண்டிய துருப்புகள் ரஷ்யா தவிர வேறு வல்லரசிடம் இல்லை. ரஷ்யாவோ, மஞ்சூரியாவில் தன் உரிமைகளைக் காப்பாற்றிக்கொள்ளப் போரிட்டுக் கொண்டிருந்தது.

பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து 16,000 துருப்புகளை வரவழைத்தனர். அவை வருவதற்குள் ஜப்பானியத் துருப்புகளின் உதவியைக் கொண்டு போரிட்டனர். அமெரிக்கத் தளபதி கவுண்ட் வான் வால்டெர்ஸீயின் தலைமையின் கீழ் எல்லா ஐரோப்பியப் படைகளும் ஒன்று சேர்ந்தன. கலகத்தை அடக்குவது தங்கள் கடமை யென்று சொல்லிக்கொண்டு போர் தொடுத்தன. டென்ட்ஸின் அவர்கள் வசமாயிற்று. சீனத் துருப்

புகளின் உறுதியான எதிர்ப்பு ஐரோப்பியர்களுக்கு ஆச்சர்யத்தை விளைவித்தது. வெளிநாட்டு ஸ்தானீகர் காரியாலயங்களைச் சீனத் துருப்புகள் எட்டு வார காலம் முற்றுகை போட்டன. இந்திய ரஜபுதனத் துருப்புகள் போனபிறகுதான் பீகிங்கிலுள்ள அந்நியர் ஆபத்தினின்று மீண்டனர். சக்ரவர்த்தினி பீகிங்கிலிருந்து வெளியேறினுள். 50,000 துருப்புகளைக் கொண்டு பீகிங்கை அந்நியர் பிடித்துக்கொண்டனர். லி ஹுங் சாங் அந்நியர்களுடன் சமாஸம் பேச அனுப்பப்பட்டார். பல பிரமுகர்களைத் தூக்கிலிட வேண்டுமென்றும், பீகிங்கில் ஒரு ஐரோப்பிய சைன்யத்துக்கு இடமளிக்கப்பட வேண்டுமென்றும் வெளி நாடுகள் கேட்டன. இதைச் சீன சர்க்கார் அனுமதித்தனர். எல்லா வெளிநாடுகளும் சீனுவில் மண்ணுசை கொள்வதில்லை என்றும், பிறர் அங்கு நாடுபிடிப்பதைச் சாத்தியமான வரை தடுப்பதாகவும், எல்லாச் சீனத் துறைமுகங்களிலும் நிர்ப்பந்தமற்ற வெளிநாட்டு வர்த்தகம் நடைபெற வேண்டுமென்றும் ஒப்பந்தம் செய்து கொண்டன.

## தேசீய இயக்கம் உதயம்

இவ்வளவு மோசமான நிலைமையிலிருந்த சீனுவை உய்விக்க முயற்சித்தவர் டாக்டர் ஸன்-யாட்-ஸேன். 19-வது நூற்றுண்டின் கடைசியில் கொரியாவில் சீன ஜப்பானிய யுத்தம் நடந்து கொண்டிருந்தபோது டாக்டர்

ஸன்-யாட்-ஸேன் என்ற சீன மகாத்மா காந்தி, தோன்றி அந்நாட்டில் ஒரு பெரிய தேசிய இயக்கத்தைத் தோற்றுவித்தார். அவருடைய வரலாற்றையும் இருபதாவது நூற்றாண்டில் சீனாவின் அபிவிருத்தியையும் பற்றிப் பிறகு கவனிப்போம்.



## இரண்டாவது அத்தியாயம்

### ஸன்-யாட்-ஸேனும் கோமிண்டாங் ஸ்தாபனமும்

### சீனு குடியரசாயிற்று

ஜப்பான், 1904-5-ல் ரஷ்யாவை முறியடித்து வட சீனுவில் தன் ஆதிக்கத்தை ஸ்திரப்படுத்திக்கொள்ள ஆரம்பிக்கையில், சீனுவில் பல தேசபக்தர்களும் சீர் திருத்தவாதிகளும் ஆங்காங்கு கிளம்பினர். 1908 நவம்பரில் பழைய சக்ரவர்த்தினியும், அவளுடைய மருமகனும் ஒரே தினத்தில் மாண்டனர். பாக்ஸர் கலகத்தின் போது ஹவாயி தீவிலிருந்த டாக்டர் ஸன்-யாட்-ஸேன், சீனப் புனருத்தாரண சங்கத்தை ஸ்தாபித்து, முதலில் சீனுவுக்கு வேண்டியது ஒரு குடியரசு தான் என்று இடைவிடாமல் கிளர்ச்சி செய்து வந்தார். தேசமெங்கும் அவருக்கு ஆதரவு வலுத்து வருகையில், 1908-ல் ஒரு சிசுவைக் கொண்டுபோய்ச் சிலர் சிம்மாசனத்தில் உட்கார வைத்தனர். ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு பார்லிமெண்ட் கூடவேண்டுமென்றும், முடியரசு ஒழியவேண்டுமென்றும் கிளர்ச்சி வலுத்து வந்தது. 1911-ல், டாக்டர் ஸன்-யாட்-ஸேன்

தம்முடைய ஸ்தாபனத்தின் பெயரை, "கோமிண் டாங்" (ஜனங்களின் தேசியக் கக்ஷி) என்று மாற்றி விட்டார். புரட்சிக்காரரை எதிர்க்கும் தைரியம் யுவான்-ஷி-காய் என்ற ஒரு மாகாண வைசிராய்க்கு மட்டுமே இருந்தது. அவருடைய ஆதிக்கத்தின் கீழ் தான் சின ராணுவம் வேலை செய்து வந்தது. ஆனல், மஞ்சு மன்னர்கள் அவரை நீக்கிவிட்டனர். ஆகவே, முடியரசைப் போரிட்டுக் காப்பாற்றக் கூடிய ஒரே நபரை யும் அவர்கள் இழந்தனர். 1911-அக்டோபரில், யாங்ட்ஸீ பள்ளத்தாக்கில் பெரிய புரட்சி கிளம்பியது. மத்திய சீனுவிலும், தெற்கு சீனுவிலும் பெரும்பாகத் தில் இது பரவியது. 1912-ல் கலகம் செய்த இந்த மாகாணங்கள் நான்கிங்கைத் தலைநகராகக் கொண்ட ஒரு குடியரசு சர்க்காரை ஸ்தாபித்துக்கொண்டன. டாக்டர் ஸன்-யாட்-ஸேன் அதன் தலைவராகத் தெரிந் தெடுக்கப்பட்டார். யுவான்-ஷி-காய் எப்பொழுது குறுக்கிடலாம் என்று நிலைமையை வெகு ஜாக்கிரதை யாய்க் கவனித்து வந்தார். 1911-ல் ராஜப்பிரதிநிதி யுவானுக்கு மீண்டும் சொல்லியனுப்பினர். யுவான் தன் நிபந்தனைகளை ராஜப்பிரதிநிதி எற்றுக்கொண்ட பிறகுதான் ஒரு மாதம் கழித்து பீகிங் சென்ருர். அதற்குள் புரட்சியின் வேகம் வளர்ந்து விட்டது. நிலைமையைத் தன்னுல் சமாளிக்க முடியாது என்று உணர்ந்த யுவான், மஞ்சு மன்னர் முடிதுறப்பதே சிலாக்

கியம் என்ற யோசனையைத் தந்தார். மஞ்சு மன்னருக்கு வேறுவழியில்லை. 1912-பிப்ரவரி 12உ யன்று பிரசுரிக் கப்பட்ட ஒரு பிரகடனத்தின்படி மன்னர் முடி துறந் தார். மஞ்சு பாரம்பரையானது இரண்டரை நூற்றாண்டு களுக்குப் பிறகு, தானே மறைய வேண்டியதாயிற்று. "புலிபோல் கர்ஜித்து வந்த அவர்கள், பாம்பின் வால் போல் மறைந்து விட்டனர்" என்று சீனர்களிடையே ஒரு பழமொழியும் வழங்குகிறது அவர்களைப்பற்றி.

பல வருஷங்களாக வெளியிலிருந்தும், உள்நாட்டி லும் சீன விடுதலைக்காக இடைவிடாமல் போரிட்டு வந்த டாக்டர் ஸன்-யாட்-ஸேனின் முயற்சிகள் கைகூடின. ஆனால் தன் வெற்றியை உருவாக்கி, சீனக் குடியரசை அசைக்க முடியாதவாறு பலப்படுத்தும் கஷ்டமான வேலையை டாக்டர் ஸன்-யாட்-ஸேன் செய்யவேண்டி யிருந்தது. மஞ்சுக்கள் முடி துறந்துவிட்டபோதிலும், யுவான் சும்மா இல்லை. வட சீனவைத் தன் ஆதிக்கத் துக்கு உட்படுத்திக் கொண்டார். அவருக்கும், புதிதாக ஸ்தாபிக்கப்பட்ட குடியரசுக்கும் துவந்துவ யுத்தம் நடக்கும்போல் தோன்றியது. ஆகவே நாட்டின் க்ஷேமலாபத்தையும் சமாதானத்தையும் உத்தேசித்து, டாக்டர் ஸன் குடியரசுத் தலைவர் பதவியிலிருந்து விலகிக்கொண்டு, யுவான்-ஷி-காயைத் தலைவராக்கினர். ஆனல், யுவானுக்கு குடியரசு உணர்ச்சி என்பது லவலேசமும் இல்லை. தன் சொந்த மதிப்பை

உயர்த்திக்கொள்வதிலேயே அவர் முழு கவனத்தையும் செலுத்தினர். அவர் வெளிநாடுகளிடமிருந்து ஏராள மான பணத்தைக் கடன் வாங்கி, தன்னைத் தலைவராக்கிய குடியரசை நசுக்க முற்பட்டார். பார்லிமெண்டைக் கலைத்துவிட்டு கோமிண்டாங் கக்ஷியையும் அவர் கலைத்துவிட்டார். அதன் விளைவாகச் சினவில் பிளவு எற்பட்டது.

## போட்டி சர்க்கார்

டாக்டர் ஸன்-யாட்-ஸேனைத் தலைவராகக்கொண்ட ஒரு போட்டி சர்க்கார் தெற்கே காண்டனில் ஸ்தா பிக்கப்பட்டது. தான் எவ்வளவோ முயற்சித்துப் பார்த்தும் பிளவைத் தவிர்க்க டாக்டர் ஸன்-யாட்-ஸேனல் முடியவில்லை. உலக யுத்தம் (1914-18) ஆரம்ப மானபோது, சினவில் இரண்டு சர்க்கார்கள் இருந்தன. யுவான், தன்னைச் சின சக்ரவர்த்தி யாக்கிக்கொள்ள முயற்சித்தார். அதற்குள் அவருக்கு மரணம் சம்ப வித்தது. யுவான்-ஷி-காய் காலமான பிறகு வடக்கு மாகாணங்களில் ஒவ்வொன்றிலும் ஒரு ராணுவத் தலை வர் தன் ஆதிக்கத்தை எற்படுத்திக் கொண்டார். இந்த ராணுவத் தலைவர்கள் டூசூன் என்று அழைக்கப் பட்டனர். சமீப காலத்தில் சினவை அலைக்கழித்து, ஐக்கியத்தைக் குலைத்து, அதைக் குட்டிச் சுவராக்கியது இவர்கள் தான். இந்த ராணுவத் தலைவர்கள் அடிக்கடி

தங்கள் சொந்த ஆதிக்கத்திற்காக ஒருவருடன் ஒருவர் சண்டைபோட்டு வந்தனர். ஏகாதிபத்திய வல்லரசுகள் சீனுவின் வேற்றுமையைப் பயன்படுத்திக்கொண்டு டுசூன்களிடையே குரோதத்தையும் மார்ச்சர்யத்தையும் வளர்த்து வந்தன. இந்தியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தன்னை நிலைநாட்டிக் கொண்டது இவ்வாறுதான்.

ஜப்பான் சென்ற மகாயுத்தத்தில் நேரடியாக ஈடுபடவில்லை. ஜெர்மனி மீது அது போர் தொடுத்ததற்குக் காரணம் சீனுவில் ஜெர்மனிக்குச் சொந்தமாயிருந்த கியான்சிலேப் பிடித்துக் கொள்ளவேண்டும் என்பதே. சென்ற 40 வருஷங்களாக ஜப்பானின் சீனக் கொள்கை ஆக்ரமிப்பாகத்தான் இருந்து வந்திருக்கிறது. தென் புறத்தில் ஜப்பானுக்குக் கட்டுப்பாடான விரோதம் இருந்து வந்திருப்பதால், வடசீனுவைச் சரிப்படுத்திக் கொண்டு கொஞ்சங் கொஞ்சமாய்த் தெற்கு நோக்கி முன்னேறுவது ஜப்பானின் ராணுவக் கொள்கை. சீனுவில் ஒரு குடியரசு தோன்றி தன் பிளான்களை யெல்லாம் கெடுத்துவிடும் என்று ஜப்பான் ஒருக்காலும் நினைத்ததேயில்லை. ஆகவே டாக்டர் ஸன்-யாட்-ஸேனின் வெற்றி ஜப்பானுக்குப் பெரிய அதிர்ச்சியாயிருந்தது. சீனு பலப்படும் ஏற்பாடுகளை யெல்லாம் ஜப்பான் ஆட்சேபித்து, மேல் நாடுகளுடன் சேர்ந்து கொண்டு டுசூன்களை ஒருவர் மீதொருவரை ஏவிவிட்டது. ஆனால் சீனுவின் சமூக அமைப்பும், தேசிய ஒற்றுமை

யின்மையுமே, ஏகாதிபத்தியங்களின் இந்தச் சூழ்ச்சிகள் வெகுவாக வெற்றி பெற்றதற்குக் காரணம்.

## மலை போன்ற வேலை

ஆகவே, சின்னஞ்சிறு சீனக் குடியரசு சமாளிக்க வேண்டிய பிரச்னைகள் மலைபோல் வளர்ந்தன. எப்பொழுதுமே சீனாவெங்கும் மத்திய சர்க்காரின் ஆதிபத்யம் அங்கிகரிக்கப்பட்டு வந்தபோதிலும், அவர்களுடைய அதிகாரம் எல்லா மூலை முடுக்குகளிலும் செல்லவில்லை. ஆகையால், சீனா முழுவதும், நல்ல பலமும், கட்டுப்பாடும், உண்மையான ஆதிபத்ய அதிகாரமுமுள்ள ஒரு மத்திய சர்க்காரின் கீழ் ஒன்றுபட வேண்டியது இன்றியமையாததென்பது தெரிந்தது. சீனக் குடியரசை அத்தன்மையதாக்க ஸன்-யாட்-ஸேன் விரும்பினார். போக்குவரத்து வசதிகள் மிகக் குறைவாயிருந்தது ராஜீய ஐக்கியத்துக்குப் பெரிதும் இடையூறாயிருந்தது. ஜப்பானைப்போல் தொழில்களைப் பெருக்கி, ராணுவத்தை நவீனமாக்கி, தேசத்தில் செல்வத்தைக் கொழிக்கவைக்க குடியரசு சர்க்கார் விரும்பிய போதிலும், தேசிய வேற்றுமையும், ஏகாதிபத்தியங்களின் ஆதிக்கமும் இதையெல்லாம் வெறும் கனவாக்கி விட்டன. தவிர ஜப்பானைப் போல் 'பெட்டி' யாக இராமல், இந்தியாவைப் போல் சீனா பரந்த நாடாயிருப்பதால் கஷ்டங்கள் அதிகரித்தன.

## 21 கோரிக்கைகள்

வட சீனுவில் ஷாண்டுங் என்ற மாகாணத்தில் ஜெர்மனி சில உரிமைகளைப் பெற்றிருந்தது. மகா யுத்தம் ஆரம்பமானவுடன் ஜெர்மனிமீது ஜப்பானும் சீறியது. கியான்சாவைப் பிடித்துக்கொண்டு அதை யடுத்துள்ள ஷாண்டுங் மாகாணத்துக்குள் ஜப்பானியத் துருப்புகள் பிரவேசித்தன. "இது ஜெர்மன் பிரதேசமல்ல, மரியாதையாய் வெளியேறுங்கள்!" என்று சீன சர்க்கார் கூறினர்.

"என்ன, சீனுவுக்கு இவ்வளவு திமிரா! இந்தாருங்கள் எங்களுடைய 21 கோரிக்கைகள். என்ன சொல்கிறீர்கள்?" என்று உறுமியது ஜப்பான். மஞ்சூரியா, மங்கோலியா, ஷாண்டுங் இவற்றில் பலதரப்பட்ட உரிமைகள் ஜப்பானுக்கு வழங்கப்பட வேண்டும் என்பதுதான் இந்த 21 கோரிக்கைகளின் சாராம்சம். வடசீன சர்க்கார் இதற்குச் சம்மதிக்கவில்லை. ஜப்பானியக் கோரிக்கைகளை அவர்கள் பிரசுரித்தனர். தேசமெங்கும் ஒரே கொந்தளிப்பு ஏற்பட்டது. சீனுவில் குடித்து ருசி கண்ட மேல்நாட்டுப் பூனைகளும் சிலுசிலுத்தன. ஆகவே, ஜப்பான், தன் நேசதேசங்களுக்குக் கோபம் வராமலிருப்பதற்காக, தன் கோரிக்கைகளில் சிலவற்றை மாற்றியமைத்தது. வேறு வழியின்றி, 1915-ம் ௵ மே மாதத்தில், சீன சர்க்கார் இவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. இதன்

விளைவாக, சீனாவெங்கும் ஜப்பானிடம் விரோதம் வலு வடையத் தொடங்கியது. நேச தேசங்களின் தயவைப் பெறுவதற்காக 1917-ல் சீனாவும் ஜெர்மனிமீது போர் தொடுத்தது. யுத்தம் முடிந்து, வெர்ஸேல்ஸ் சமாதான உடன்படிக்கை தயாரிக்கப்பட்டதல்லவா? அப்பொழுது, பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா-ஆகிய மூன்று நாடுகளும், ஜப்பானுக்கு இரகசியமாய் அளிக்கப்பட்டிருந்த ஒரு வாக்குறுதிப்படி, சீனாவிடமிருந்து ஷாண்டுங் மாகாணத்தைப் பிரித்து, அதை ஜப்பானிடம் ஒப்படைக்கத் தலைப்பட்டன. ஆனால், சீனாவில் இது பெரிய கிளர்ச்சியை ஏற்படுத்தியது. ஜப்பானிய பகிஷ்காரம் ஆரம்பமாயிற்று. பீகிங் சர்க்கார் சமாதான உடன்படிக்கையில் கையெழுத்துச் செய்ய முடியாதென்று மறுத்தனர்.

## வாஷிங்டன் ஒப்பந்தம்

இரண்டு வருஷங்களுக்குப்பின் 1922-ல் வாஷிங்டனில் கூடிய கிழக்கோடி விவகார மகாநாட்டில் ஷாண்டுங் பிரச்னை விவாதத்துக்கு வந்தது. இந்த மகாநாட்டில், ஷாண்டுங்கைத் திருப்பிக் கொடுக்க ஜப்பான் சம்மதித்தது. பிறகு சீனாவில் சிரத்தையுள்ள வல்லரசுகள் 'கிழக்கோடிப்' பிரச்னையை நிரந்தரமாய்த் தீர்க்கத் தலைப்பட்டன.

இந்த மகாநாட்டில் செய்து கொள்ளப்பட்ட இரண்டு உடன்படிக்கைகள் குறிப்பிடத் தக்கவை.

ஒன்று, பிரிட்டன்; அமெரிக்கா, ஜப்பான், பிரான்ஸ் நான்கும் செய்து கொண்ட நான்கு வல்லரசு ஒப்பந்தம். இதன்படி பஸிபிக் சமுத்திரப் பிரதேசத்தில் ஒப்பந்த நாடுகளுக்குள்ள பிரதேச உரிமைகளை (Territorial Integrity) கவுரவிப்பதாக நான்கு வல்லரசுகளும் ஏற்றுக்கொண்டன. அதாவது, ஒருவர் நாட்டை மற்றொருவர் அபகரிப்பதில்லை என்று இந்த நான்கு நாடுகளும் ஒப்பந்தம் செய்து கொண்டன.

இரண்டாவதுதான் ஒன்பது வல்லரசுகள் உடன்படிக்கை என்பது. அமெரிக்கா, பெல்ஜியம், ஹாலந்து, பிரிட்டன், பிரான்ஸ், இத்தாலி, போர்ச்சுகல், சீனா, ஜப்பான் இந்த ஒன்பதுந்தான் அசல் ஒப்பந்த நாடுகள். பிறகு இன்னும் 10 நாடுகளுக்கு மேல் ஒப்பந்தத்தில் சேர்ந்துகொண்டன.

சீனாவின் ஆதிபத்தியம், சுதந்திரம், பிரதேச உரிமை, நிர்வாக சுதந்திரம் இவற்றைக் கவுரவிப்பதாக ஒப்பந்த நாடுகள் உடன்படிக்கையின் முதல் ஷரத்தில் ஏற்றுக்கொண்டன.

சீனாவை, மேற்கொண்டு நேரிடக்கூடிய ஆபத்தினின்றும் காப்பாற்றுவதும், கீழ்க்கோடியில் ஏகாதிபத்தியங்கள் ஒன்றையொன்று மிஞ்சிவிடாமல் செய்வதுமே ஒப்பந்தத்தின் முக்கியமான நோக்கங்கள். ஜப்பானும், அப்போதுதான் ஒரு மகத்தான யுத்தத்திலிருந்து வெளிப்போந்த வல்லரசுகளின் எண்ணத்துக்கு

மாறாக நடந்துகொள்ளும் துணிச்சலையும் இறுமாப்பை யும் அன்று பெற்றிருக்கவில்லை. ஆகவே, சீனா சம்பந்த மாகத் தான் அதுவரை அனுஷ்டித்துவந்த கொள்கை களை யெல்லாம் கைவிட்டு, மனப்பூர்வமாய் ஒன்பது வல்லரசுகளின் உடன்படிக்கைக்கு இணங்குவதாய்த் தெரிவித்தது. ஆனால், வெகு சீக்கிரத்தில் நிலைமை மாறியது. அமெரிக்கா ஸர்வதேச சங்கத்தில் சேராத தும், மகாயுத்தத்தின் விளைவாக ஐரோப்பிய வல்லரசுக ளிடையே கிளம்பிய பல சிக்கலான பிரச்னைகளும் ஜப்பானுக்குத் தைரியத்தை யளித்தன. ஆனால், இந்த தைரியம் ஜப்பானுக்கு உடனே வரவில்லை. பல வருஷங்களாயிற்று.

இதற்கிடையே, சீனாவின் வடகோடி மாகாணமாகிய வெளி மங்கோலியா சீன சர்க்காரிடமிருந்து பல தனி உரிமைகளைப் பெற்று, ஸோவியத் ரஷ்யாவுடன் உறவு வைத்துக்கொண்டு, ஒரு ஸோவியத் குடியரசு நாடாகி விட்டது. ஜப்பானும், ஸோவியத் சர்க்காரை ஆரம்பத் தில் நசுக்கச் செய்யப்பட்ட முயற்சியில், ஏகாதிபத்திய வல்லரசுகளுக்கு உதவியளித்துப் பார்த்தது. ஆனால் அது பலிக்கவில்லை. 1922-ல் ஸோவியத் வெற்றி ஊர்ஜிதமாகவே ஸைபீரியாவிலிருந்து ஜப்பானியத் துருப்புகள் வாபஸாயின.

## ரஷ்யாவுடன் உடன்படிக்கை

வாஷிங்டன் மகாநாட்டுக்குப் பின், சீனுவுடன் ரஷ்யா உடன்படிக்கை செய்துகொண்டது குறிப்பிட வேண்டிய விஷயம். ஸோவியத் ரஷ்யாவுக்கு நாடு பிடிக்கும் ஆசை கிடையாதாகையால், நேசப் பான்மையில் வட சீனுவுடன் ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டது. 1924-ல் ஒப்பந்த நகல் தயாரானது தெரிந்தவுடன், பிரான்ஸ், ஜப்பான், அமெரிக்கா மூன்றும் கூச்சலிட்டன. பீகிங் சர்க்கார் பயந்து நடுங்கி ஒப்பந்தம் செய்து கொள்ளப்படவே இல்லை என்று அறிக்கை வெளியிட்டது. பிறகு, ரஷ்யப் பிரதிநிதி ஒப்பந்த நகலைப் பிரசுரித்துவிட்டார். இதன் விளைவாக எங்கும் பெரிய பரபரப்பு ஏற்பட்டது. பிறகு, வேறு வழியின்றி, வல்லரசுகள் எதிர்ப்பை நிறுத்தின. சீனு, ஒரு பெரிய வல்லரசுடன் தன் முதல் உடன்படிக்கையைச் செய்து கொண்டது. வட மஞ்சூரியாவில் தங்கள் விசேஷ உரிமைகள் சில நீங்கலாக வேறு எந்தக் கோரிக்கையையும் ரஷ்யா கேட்கவில்லை.

ஸோவியத் சர்க்கார், காண்டனைத் தலைநகராகக் கொண்ட, டாக்டர் ஸன்-யாட்-ஸேன் சர்க்காருடன் (தெற்கு சீனு) பேரங்களைப் பேசி, அவர்களுடனும் ஒரு ஏற்பாடு செய்துகொண்டனர். இத்தருணத்தில் தான் வட சீனுவில், டுசூன்கள் மண்டையை உடைத்துக் கொண்டிருந்தது. அது கொள்கைகளுக்கு அல்லது

வேலைத்திட்டங்களுக்காக நடைபெற்ற போர் அல்ல. அங்கே ஒரே குழப்பமான நிலைமைதான் இருந்தது. தெற்கு சீனாவில், சர்க்கார் ஒழுங்காகவும் சீராகவும் நடைபெற்றது. 1922-ல் டாக்டர் ஸன்-யாட்-ஸேன், கோமிண்டாங் கட்சியின் முதல் மகாநாட்டை நடத்தி வைத்தார். அதன் முன் சீன மக்களின் வேலைத் திட்டமொன்றைச் சமர்ப்பித்தார். இவைதான் இன்றும், சீனாவின் கொள்கைகளா யிருந்துவருகின்றன.

1923-ஜனவரி 10உ யன்று வெளியான கோமிண்டாங் அறிக்கையின் முக்கியமான அம்சங்களாவன:

(1) வெளிநாட்டு ஸ்தானிகர்களுக்குள்ள பிரத்தியேக அக்கிரம அதிகாரங்கள், சீனாவின் ஆதிபத்ய உரிமைக்கு விரோதமாய் வெளி நாட்டினருக்குள்ள ராஜீய அதிகாரங்கள் முதலியவற்றை ஒழித்து, பரஸ்பரம் சம உரிமைகளுடன் கூடிய ஒப்பந்தங்களைச் செய்து கொள்வது.

(2) சீனாவின் ஆதிபத்திய உரிமைகளுக்கு விரோதமாய்த் தாங்கள் அனுபவித்து வந்த உரிமைகளை விட்டுக் கொடுக்கும் நாடுகளுடன், விசேஷ வர்த்தகச் சலுகைகளை அளிக்கும் ஒப்பந்தங்கள் செய்து கொள்ளப்படும்.

ரஷ்யாவுக்கு இந்த உரிமை அளிக்கப்படுகிறது.

(3) சீனாவின் க்ஷேமலாபத்துக்கு விரோதமானதென்று சீன சர்க்கார் கருதும் உடன்படிக்கைகளெல்லாம் திருத்தியமைக்கப்பட வேண்டும்.

(4) சீனாவின் ராஜீய, பொருளாதார க்ஷேமலாபங்களுக்குப் பங்கம் நேரிடாத விதத்தில், சீனாவின் வெளி நாட்டுக் கடன்கள் தவணைகளாகச் செலுத்தப்படும்.

(5) லஞ்ச முறைகளின் மூலம் குடியரசுத் தலைவர் பதவிக்கு யாராவது வந்து பொறுப்பற்ற சர்க்காரை அமைத்து, வெளிநாடுகளிலிருந்து வாங்கக்கூடிய கடன்களை மறுதளித்துவிட சீன மக்களுக்கு அதிகாரமுண்டு.

## ஏகாதிபத்திய எதிர்ப்பு

கோமிண்டாங் கக்ஷியின் இந்த வெளிநாட்டுக் கொள்கை பிரிட்டனையும் ஜப்பானையுந்தான் அதிகமாகப் பாதித்தது. கோமிண்டாங் கக்ஷியைச் சேர்ந்த சென்-குங்-போ என்ற தீவிரவாதி இதைப்பற்றி விரிவான ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அதிலிருந்து ஒரு பாரா வைக் கீழே தருகிறோம்.

"உலக யுத்தத்தின் விளைவாக, சீனுவுக்கும் வெளிநாடு களுக்கும் இருந்து வந்த உறவில், முக்கியமான மாறுதல்கள் ஏற்பட்டன. மகாயுத்தத்துக்கு முன் பலாத்காரத்தின் மூலம் சீனுவின் போக்கை உருவாக்கி வந்த நாடுகள் பிரிட்டன், ஜெர்மனி, பிரான்ஸ், அமெரிக்கா, ஜப்பான், ரஷ்யா இவை தான். சீனுவை பலாத்காரத்தின் மூலம் கபளீகரம் செய்வ தற்கு நடைபெற்ற முயற்சியில், பிரிட்டன் தோற்றுப்போக வே, மகாயுத்தத்துக்குப் பின் சமரஸக்கொள்கையை அனுஷ் டித்துப் பார்க்க வாரம்பித்தது. அமெரிக்கா சீனுவில் போட் டிருக்கும் பணம் 7 கோடி; ஆகையால் வர்த்தகப் பொருள் களின் ஏற்றுமதி இறக்குமதிக்குத் தடையில்லாமல் பார்த் துக்கொள்வதில் மட்டுந்தான் அமெரிக்காவுக்குச் சிரத்தை யுண்டு. ஆகையால், அமெரிக்காவின் சீனக் கொள்கை,

நிதான ரீதியில் இருந்து வருகிறது. ஜப்பான் விஷயம் முற்றிலும் மாறுபட்டது. எங்கள் புரட்சி தங்களுக்கு மரண அடி யென்று ஜப்பானியர் கருதுகின்றனர். எங்கள் புரட்சி வெற்றியடைந்தால், மூன்று கிழக்கு மாகாணங்களில் மட்டுமின்றி, ஷாண்டுங் மாகாணத்திலும் அவர்கள் இதற்குமுன் சம்பாதித்துள்ள உரிமைகள் பறிபோம். அது மட்டுமல்ல. கொரியாவும் பார்மோஸாவும் சுதந்திர மடையும். ஜப்பானியப் பொருளாதார சுதந்திரத்துக்கு மட்டுமின்றி ஏகாதிபத்திய அமுலுக்கே சாவுமணி அடிப்பதுபோலாகும். சீனாவில் போல்ஷிவிக் செல்வாக்கைப் பரப்ப ரஷ்யா மும்முரமாய் முயற்சித்து வருகிறது. ஜப்பான், ரஷ்யா இரண்டும் உறுதியான கொள்கையை அனுஷ்டிக்கையில், பிரிட்டனும் அமெரிக்காவும் துடை நடுங்கிக் கொள்கையை அவலம்பித்து வருகின்றன.

"இப்போது நம்மீது திருஷ்டி வைத்துள்ள ஏகாதிபத்யங்கள் ஜப்பானும் பிரிட்டனுந்தான். இப்போது நாம் முக்கியமாக ஜப்பானைத்தான் தாக்கவேண்டும். பிரிட்டன் ஆக்ரமித்தால் தற்காப்பில் மட்டும் கவனம் செலுத்துவோம். நம் சம்பந்தமாக அமெரிக்கா நடு நிலைமை வகிக்குமாறு செய்ய முயற்சிக்க வேண்டும்."

கோமிண்டாங் இயக்கத்தின் விளைவாக, ஜப்பானிய எதிர்ப்பு சீனாவில் மும்முரமாகிக்கொண்டு வந்தது. மாணவர்களும் இளைஞர்களும் உறுதியா யிருந்துவந்தனர். ஜப்பானும் பிடிவாதம் சாதித்தது. இரண்டு நாடுகளுக்குமிடையே மனஸ்தாபம் வலுத்தது. சீன அதி

காரிகளும் சும்மா இருக்கவில்லை. ஜப்பானிடம் துவேஷம் தன் போக்கில் வளரட்டும் என்று நினைத்துவிட வில்லை. தீவிரமாய்ப் பிரசாரம் நடத்தினர். பள்ளிக்கூடப் பாடங் களில் கூட ஜப்பானிய எதிர்ப்பு ஒரு அம்சமாக்கப் பட்டது. 'சீனமீது திணிக்கப்பட்ட அக்கிரம ஒப்பந்தங் கள்', 'வெளிநாடுகளின் கொடுமை' முதலிய புஸ்தகங் களில் பிரதானமாகச் சேர்க்கப்பட்டன. வெளிநாட்டு விவகாரங்கள் சம்பந்தமான உரிமைகளையும் பாத்யதை களையும் மீண்டும் பெறவேண்டியது எவ்வளவு அவசிய மென்பது வற்புறுத்தப்பட்டது. எல்லாவற்றிலும் ஜப்பான்தான் முதல் எதிரி என்பது சந்தேகமறப் பச்சிளங் குழந்தைகள் மனதில் பசுமரத்தாணிபோல் பதியவைக்கப்பட்டது. சீனவில் ஜப்பான் ஸ்வீகரித்துக் கொண்டுள்ள விசேஷ உரிமைகள் ஒழிய வேண்டு மென்பதைத் தேசமக்கள் உணருவதற்காக, பல விசேஷ தினங்கள் நம் நாட்டில் நடைபெறுவதுபோல் அனுஷ்டிக் கப்பட்டன. 1915-மே 9உ யன்று ஏற்பட்ட 21 கோரிக் கைகள் ஒப்பந்த தினமும், 1925-மே 30உ ஷாங்ஹாயில் பிரிட்டிஷார் இழைத்த அதிக்கிரம தினமும் வருஷா வருஷம் மக்களுக்கு நினைவூட்டப்படுகின்றன.

ஜப்பானிய சாமான்களைப் பகிஷ்கரிக்குமாறு ஸாத் விகப் பிரசாரமும் இடைவிடாமல் நடந்துவருகிறது. 1908-ல் முதன்முதலாக இது அனுஷ்டித்துப் பார்க்கப் பட்டது. 'டாட்ஸுமாரு' என்ற ஜப்பானியக் கப்பலை

ஒரு சீன பீரங்கிப் படகு கான்டனில் கைப்பற்றி அதி லிருந்த சாமான்களைப் பறிமுதல் செய்தது. ஜப்பான் ஆட்சேபிக்கவே சீன சர்க்கார் மன்னிப்புக் கேட்டனர். இது தெற்கிலுள்ள தீவிர வாதிகளுக்கு மிகுந்த ஆத்திரத்தை உண்டுபண்ணியது. அவர்கள் தனியாக ஜப்பானிய சாமான் பகிஷ்கார இயக்கத்தை ஆரம்பித்த னர். இது மிகப் பெரிதாகி தேசமெங்கும் வியாபித்து, எட்டு மாதங்களுக்குப் பிறகு ஓய்ந்தது. இந்த முதல் பகிஷ்காரத்தினுல் ஜப்பானிய வர்த்தகம் பெரிதும் பாதக மடைந்தது. ஆகவே இந்த ஆயுதம் எவ்வளவு வலிமை யுள்ளது என்பதைச் சீனர் நன்குணர்ந்தனர். அது முதல் ஜப்பானிய சாமான் பகிஷ்காரம் பன்முறை அனுஷ்டிக்கப்பட்டது. அது சீன மக்களின் தேசியக் கொள்கையாகி விட்டது என்றுகூடக் கூறலாம். பகிஷ்காரப் பிரயோகத்துக்குக் காரணமான பல சம்பவங் களை அடுக்கிட்டுக்கொண்டுபோக இந்தச் சிறிய புத்தகம் போதாது. ராஜீயக் காரணங்களுக்காக ஒத்துழையாமை தீவிரமாய் அனுஷ்டிக்கப்பட்டது என்பது மட்டும் தெரிந்தால் போதும்.

டாக்டர் ஸன் 1925 - மார்ச்சில் ஒரு ஆயுட்காலம் முழுவதும் சீன விடுதலைக்காகச் செலவழித்தபின் உடல் நலங் குன்றி உயிர் நீத்தார். இன்றும் சீனுவின் மகாத்மா காந்தியாகிய அந்தப் பெருமானை அந்நாட்டு மக்களில் போற்றுதாரில்லை.

## போரோடின் சேவை

ஷாங்ஹாய், ஹாங்காங் போன்ற துறைமுக நகரங்களில், ஆயுத பலத்துடன்கூட நிலைத்த ஏகாதிபத்திய சர்க்கார்கள், சீனுவின் மர்ம ஸ்தானங்களைத் தம் ஆதிக்கத்தின் கீழ் வைத்துக் கொண்டன. சீனு, ஒரு நாட்டின் அடிமையாயில்லாமல் பல நாடுகளின் காலனியாயிருக்கும் துர்ப்பாக்கிய நிலைமைக்காக டாக்டர் ஸன் வருந்தினர். பிரிட்டன், அமெரிக்கா இரண்டு நாடுகளிடமும் கடன்வாங்கி, தேசத்தை அபிவிருத்தி செய்ய விரும்பினர். ஆனல், அவை சீனுவை சுயநலப் பற்றுடன் சுரண்டுவதில் சிரத்தை கொண்டிருந்தனவே ஒழிய, அதன் சுபிட்சத்தில் அல்ல. ஆகவே, 1924-ல் ரஷ்யாவின் உதவியை டாக்டர் ஸன் நாடவேண்டியிருந்தது. டாக்டர் ஸன்னுக்கும் பொதுவுடைமைக்கும் வெகு தூரம். ஆயினும் ஸோவியத் சர்க்கார் ஒளிவு மறைவின்றி நேர்மையாய் நடந்து கொண்டதால், சில ரஷ்ய நிபுணர்களை அவர் தமக்கு உதவியாக நியமித்துக் கொண்டார்.

மைகேல் போரோடின் என்ற போல்ஷிவிக் தலைவர் தான் அவர்களில் மிகவும் முக்கியமானவர். பாமர மக்களின் ஆதரவே உண்மையான பலம் என்பதை உணர்ந்து, கோமின்டாங்கைப் பாமர மக்களின் விடுதலைச் சாதனமாக்க அவர் பாடுபட்டார். ரஷ்யாவில் ஏற்பட்ட ஸோவியத் புரட்சியின் விளைவாகச் சீனுவிலும் பொது

வுடமை இயக்கம் தோன்றியது. பொதுவுடைமைக்காரர்களும் கோமிண்டாங்கில் அனுமதிக்கப்பட்டனர். தொழிலாளர் சங்கங்களும், கிருஷிகர் சங்கங்களும் எங்கும் வலுத்தன. கோமிண்டாங்கிலுள்ள சுயநல ராணுவத் தலைவர்களுக்கும், பணக்காரர்களுக்கும் பெரிய நிலச் சுவான்தாரர்களுக்கும் இது பெரிய பீதியை உண்டு பண்ணியது. ஆனால், அப்போது அவர்கள் பகிரங்கமாய் எதிர்க்கவில்லை. பாமர மக்களின் பின்பலம் வலுக்கவே கோமிண்டாங் சர்க்காருக்கு அபரிமிதமான செல்வாக்கு எங்கும் கிடைக்கலாயிற்று. கோமிண்டாங்கின் வளர்ச்சியும் வேலையும் நம் நாட்டில் இந்திய தேசிய காங்கிரஸின் வளர்ச்சியையும் வேலையையும் போன்றதே. இதற்குக் காரணம் இந்தியாவும், சீனாவும் பல அம்சங்களில் ஒரே மாதிரி யிருந்துவருவதே. போரோடின் கொடுத்த யோசனைப்படி, டாக்டர் ஸன் சர்க்கார், நில வரியை 25 சத விகிதம் குறைத்தனர். எட்டு மணி வேலைத்தினத் திட்டத்தைச் சட்டமாக்கினர். கிருஷிகர் சங்கங்கள் எங்கும் ஸ்தாபிக்கப்பட்டன. பாமர மக்கள் இந்தச் சீர்திருத்தங்களை யெல்லாம் உற்சாகத்துடன் வரவேற்றனர். காண்டன் சர்க்காரின் புகழ் சீனாவெங்கும் வியாபித்தது. ஆகவே, புது பலம் பெற்ற கோமிண்டாங் சர்க்கார், வீறு கொண்டெழுந்து, உள்நாட்டு யுத்தத்தில் ஈடுபட்டுத் தேசத்தைப் பாழாக்கிய டூசூன்களை ஒரு கை பார்த்துவிடுவதென்று தீர்மானித்தனர். அதற்

காக ராணுவப் பயிற்சி தளங்களும், பள்ளிக்கூடங்களும் நிறுவப்பட்டன. இவற்றிடையே 1925-மார்ச்சில் டாக்டர் ஸன்-யாட்-ஸேன் மறைந்தார்.

---

## மூன்ருவது அத்தியாயம்

### சியாங்-கே-ஷேக்

ஒன்பது வல்லரசுகளின் ஒப்பந்தம் ஏற்பட்டுங்கூட சீனத் தலைவர்களிடையே ஒற்றுமை என்பது ஏற்படவில்லை. 1922-ல் காண்டன் சர்க்காரின் செல்வாக்கு அவ்வளவாக இல்லை. ஷாங்ஹாய் இருக்கும் கியாங்ஸு மாகாணத்தைப் பீகிங் சர்க்காரின் ஆதீனத்துக்கு உட்பட்ட ஒருவர் ஆண்டுவந்தார். டாக்டர் ஸன்-யாட்-ஸேன், தேசிய ஐக்கியத்தை உத்தேசித்து தலைவராக்கிய லீ-யுவான்-ஹுங் செய்த நல்லமுயற்சிகளை யெல்லாம், ஜெனரல் கூன் என்ற ராணுவ தளகர்த்தர் தம் விஷமத்தினுல் நிஷ்பலனுக்கி வந்தார். ஆகையால் இருமுறை அவர் தம் பதவியை ராஜிநாமாச் செய்ய நேரிட்டது. பிறகு ஜெனரல் கூன் அந்தப் பதவிக்கு ஏராளமான லஞ்சங் கொடுத்துத் தெரிந்தெடுக்கப்பட்டார். சாங்-ஸொ-லின் என்ற ஒரு தளகர்த்தர் ரஷ்யர்களின் உதவியுடன் வட சீனவில் தம் ஆதிக்கத்தை 1924-அக்டோபரில் ஏற்றுக் கொண்டார். சாங்-ஸொ-லினுக்கும் டாக்டர் ஸன்-யாட்-ஸேனுக்கும் சம்பந்தம் உண்டு. வட சீனவுக்கு வருமாறு

ஸனுக்கு அழைப்பு வந்தது. ஆனால், உருப்படியாக அவர் ஏதாவது செய்யக்கூடுமுன் அவர் உயிரிழந்தார். ஸன்-யாட்-ஸேனின் நெருங்கிய நண்பர்கள் இருவர். ஹூ-ஹான்-மின், வாங்-சிங்-வேய் என்று அவர்கள் அழைக்கப்பட்டனர். சற்று பிற்போக்காளரான ஹூ-ஹான்-மின் காண்டன் கவர்னரா யிருந்தார். சீன சர்க்காரின் வெளிநாட்டு மந்திரியாகவு மிருந்தார். ஆனால் வாங்-சிங்-வேய் மேல் நாடுகளில் சுற்றி நல்ல அனுபவம் பெற்றவர். டாக்டர் ஸன் பீகிங்கில் உயிர் நீத்தபோது அவர்தான் அருகிலிருந்தார். சீன மத்ய நிர்வாகக் கமிட்டியின் தலைவராயு மிருந்தார். அவரிடம் தீவிரவாதிகள் மதிப்பு வைத்திருந்தனர். வாங்-சிங்-வேய்தான் ஸன்-யாட்-ஸேனுக்குப் பிறகு தலைவர் பதவிக்கு வந்திருக்க வேண்டும். ஆனால் பொரோடின் கொடுத்த யோசனைப்படி கமிட்டி முறைப்படி சர்க்கார் நடைபெற்றது.

## சியாங்-கே-ஷேக்

1925 - ஆகஸ்டில் பொதுவுடைமைக்காரரான நிதி மந்திரி யொருவர் கொல்லப்பட்டார். இத் தருணத்தில் தான் ராணுவக் கழகத்தின் தலைவராயிருந்த சியாங்-கே-ஷேக் பிரபலஸ்தரானார்.

சியாங்-கே-ஷேக் 1886-ல் பிறந்தவர். பாடிங்புவிலும் ஜப்பானிலும் ராணுவக் கல்வி பெற்றவர். 1911-ல் ஸன்-யாட்-ஸேன் கோஷ்டியில் சேர்ந்து, நான்கிங் பிர

தேசத்தில் ராணுவ சேவையில் ஈடுபட்டிருந்தார். 1917-ல் காண்டனில் டாக்டர் ஸன் தளபதியும் தலைவரு மானபோது, சியாங்-கே-ஷேக் அவருடைய பிரதம ஆலோசனையாளரா யிருந்தார். 1923-ல் ரஷ்யாவுடன் டாக்டர் ஸன் ஸ்நேகம் ஏற்படுத்திக்கொண்ட பிறகு சியாங்-கே-ஷேக், ரஷ்யா சென்று ராணுவ விஷயங் களைத் தெரிந்துகொண்டார். திரும்பி வந்தபின் சின ராணுவக் கழகத்தின் தலைவர் பதவி அவருக்கு அளிக்கப் பட்டது. இதனுல் அவருடைய செல்வாக்கு தேச மெங்கும் பரவலாயிற்று. நிதிமந்திரி லியா-சுங்-காய் கொல்லப்பட்டபோது பொரோடின் உதவிபெற்று, சியாங் அதிகாரத்தைக் கைப்பற்றினுர். ஹு-ஹான்-மின் மாஸ்கோவுக்கு விவசாயப் பயிற்சிக்கென்று அனுப்பப் பட்டார். வாங்-சிங்-வேய் பெயரளவில் சர்க்கார் நிர் வாகத்திலிருந்த போதிலும் கோமிண்டாங் தலைமைப் பதவி சியாங்-கே-ஷேக்குக்குத்தான் கிடைத்தது. டி. வி. ஸுங் என்ற அறிவாளி (டாக்டர் ஸன்-யாட்-ஸேனின் மைத்துனர்) வெளிநாட்டு மந்திரியானுர். அமெரிக்காவில் அவர் கல்வி பயின்றவர். 1924-ல் காண்டன் பாங்கின் தலைவர் பதவி அவருக்கு அளிக்கப் பட்டது. அவருடைய மற்ருெரு சகோதரி மெய்லிங்-ஸுங் என்ற மாது பிறகு சியாங்-கே-ஷேக்குக்கு மணம் செய்விக்கப்பட்டாள். இவர்களெல்லோரும் கிறிஸ்தவர் கள் என்பதும் குறிப்பிடத் தக்கது.

## ஏகாதிபத்திய எதிர்ப்பின் வளர்ச்சி

டாக்டர் ஸன் 1925-மார்ச்சில் காலமானார். ஆனால் பொரோடின் தன் வேலையைச் சுறுசுறுப்பாகவே செய்து வந்தார். பாமரமக்கள் தங்கள் உரிமைகளுக்காகப் போராடலாயினர். 1925 மேமீ, ஷாங்ஹாயில் பருத்தி மில்களில் பொது வேலை நிறுத்தம் நடைபெற்றது. வேலை நிறுத்த ஆர்ப்பாட்டங்களில் கலந்துகொண்ட ஒரு தொழிலாளி சுட்டுக் கொல்லப்பட்டான். மாணவர்களும் தொழிலாளரும் அவனது பிரேத அடக்கத்தை ஒரு பெரிய ஏகாதிபத்திய எதிர்ப்பு ஆர்ப்பாட்டமாக்கினர். அந்நியரின் ஆதிக்கம் அறவே ஒழிய வேண்டுமென்று ஆர்ப்பரித்தனர். இது பிரிட்டிஷ் குடியேற்றத்தில் நடந்தது. இந்திய சிக்கிய போலீசாரைக் கொண்டு, பிரிட்டிஷ் அதிகாரிகள் ஆர்ப்பாட்டக்காரர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். இதன் விளைவாகப் பல மாணவர்கள் உயிரிழந்தனர். சீனவெங்கும் பிரிட்டிஷார் மீது ஆத்திரம் அதிகரித்தது. அடுத்த மாதம் இதைவிட மோசமான மற்றொரு சம்பவம், காண்டனில் அன்னிய நாட்டினர் வசிக்கும் ஷாமீன் பிரதேசத்தில் நடைபெற்றது. இங்கு ஏகாதிபத்திய எதிர்ப்பு ஆர்ப்பாட்டத்தை நடத்திய ஒரு சீன மாணவர் கூட்டத்தின் மீது, பிரிட்டிஷ் மெஷீன் பீரங்கிகள் திருப்பப் பட்டன. ஏராளமான பேர்கள் காயமடைந்தனர். 52 பேர்கள்

உயிரிழந்தனர். ஜாலியன்வாலா பாக் படுகொலையுடன் ஒப்பிடக்கூடிய இந்தப் படுகொலையின் விளைவாக, பிரிட்டிஷ் சாமான்களைப் பகிஷ்கரிக்கவேண்டும் என்ற இயக்கம் தோன்றி அபரிமிதமான பலத்தைப் பெற்றது.

## போரோடின்-சியாங் வித்தியாசங்கள்

டாக்டர் ஸன் மரணத்துக்குப் பின், கோமின்டாங் கக்ஷியில் ஆதிக்கம் பெறுவது பற்றி பணக்காரர்களும் நிலச்சுவான்களும் சுயநல ராணுவ கோஷ்டிகளும் அடங்கிய பிற்போக்காளருக்கும், பாமர மக்களின் நலவுரிமையை வற்புறுத்தும் தீவிர வாதிகளுக்கும் பெரிய போராட்டம் ஆரம்பமாயிற்று. 1926-மத்தியில் மித வாதியான சியாங்-கே-ஷேக் தளபதியானர். அவர், பிற்போக்காளரின் ஆதரவு பெற்று வந்ததால், முதலில் பொதுவுடைமைக்காரர்கள் மீது பாணம் தொடுத்தார். பரஸ்பரம் அவநம்பிக்கையும் சந்தேகமும் இருந்த போதிலும் பொதுவுடைமைக்காரர்கள் போரோடின் மூலம் சியாங்-கே-ஷேக்குடன் கூடியவரை ஒத்துழைத்து வந்தனர். டூசூன்களை விரட்டி, வடமாகாணங்களிலும் சீனக் குடியரசின் ஆதிக்கத்தை நிலைநாட்ட அவர்கள் அரும்பாடுபட்டனர். வடசீனு மீது காண்டன் சைன்யங்கள் படையெடுத்து டூசூன்களைப் பணிய வைத்தது உலகமெங்கும் பிரமிப்பையும் பரபரப்பையும் உண்டு பண்ணியது. கிராமங்களில் எல்லாம் காண்டன் சைன்

யங்கள் போற்றப்பட்டன. எங்கனும் வெற்றி. 1926-க்குள் சின தேசியவாதிகளாகிய இந்தக் கோமிண்டாங் கக்ஷியினர், சீனுவில் பாதிக்குமேல் கடந்து, யாங்ட்ஸீ நதிக்கரையிலுள்ள ஹாங்கான் நகரைப் பிடித்தனர். காண்டனிலிருந்து தங்கள் தலைநகரை அங்கு மாற்றினர். அதற்கு ஊஹான் என்ற புதிய பெயர் அளிக்கப்பட்டது. பல டூசூனிகள் காண்டன் சர்க்கார் முன் பணிந்தனர்.

## பிரிட்டன் சிலுசிலுத்தது

1927 ஆரம்பத்தில் சீனருக்கும் பிரிட்டிஷாருக்கும் பெரிய தகராறு கிளம்பியது. ஹாங்கான் நகரிலிருந்த பிரிட்டிஷ் குடியேற்றத்தையும் கைப்பற்றச் சீனர் முயற்சித்தனர். இது சில்லறை விஷயமாகையால் பிரிட்டன் பிரமாதமாக எதையும் செய்யத் துணியவில்லை. சீன தேசிய சைன்யங்கள் தங்கள் வெற்றியைப் பரப்பி வந்தன. வெளி நாட்டினர் தங்களுடைய தாக்கிக்கொண்டிருந்த ஷாங்ஹாய் மீதும் அவர்கள் படையெடுக்கக்கூடும் என்ற பீதி வலுக்கவே, யுத்தக் கப்பல்களும் துருப்புகளும் கொண்டுவந்து குவிக்கப்பட்டன. பிரிட்டிஷ் சர்க்கார் 1927 ஜனவரியில், ஏராளமான இந்தியத் துருப்புகளை அங்கு முதற்படியாக அனுப்பினர். இந்த நிலைமையில், ஷாங்ஹாய் மீது படையெடுப்பதா, வேண்டாமா என்று தேசிய சர்க்கார் தயங்கிக் கொண்

டிருந்தனர். அதுவரை சுலபமாய்க் கிடைத்துவந்த வெற்றியை உருவாக்க, அந்நிய ஆதிக்கத்தின் உறைவிடமாகிய ஷாங்ஹாய் தங்கள் வசமாக வேண்டியது அவசியமென்று ஊஹான் (தேசிய) சர்க்கார் கருதினர். ஆனல், பிடித்த இடங்களில் தங்கள் ஆதிக்கத்தையும் நிர்வாக அதிகாரத்தையும் அவர்கள் ஸ்திரப்படுத்திக் கொள்ளவில்லை.

## ஒற்றுமை தகர்ந்தது

இந்த நிலைமையில் ஷாங்ஹாயைத் தாக்கினல், வெளி நாடுகளுடன் தவிர்க்க முடியாத தகராறுகளில் சிக்க நேரிடும் என்பதும் தெரிந்தது. ஜாக்கிரதையாக நிலைமையை உறுதிப் படுத்திக்கொண்டு முன்னேறுமாறு பொரோடின் யோசனை கூறினர். தேசியவாதிகள் ஷாங்ஹாய்மீது கைவைக்காமல் தெற்கு சீனுவில் தங்கள் நிலைமையைச் சீர்படுத்திக்கொள்வதே லக்ஷிய மென்று அவர் கருதினர். பிரசாரத்தின் மூலம் வட சீனுவை ஸ்வீகரித்துக் கொள்ளலாம் என்பது அவருடைய நினைப்பு. புரட்சிக்காரரான பொரோடின், தம் அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டு தந்த இந்த யோசனை கோமிண்டாங் தலைவர்களுக்கும், முக்கியமாக சியாங்-கே-ஷேக்குக்கும் பிடிக்கவில்லை. இதற்குக் காரணம், சியாங்-கே-ஷேக்கைப் பின்னலிருந்து ஆட்டி வைதத நிலச்சுவான்களும், தனகர்த்தர்களும், கோமிண

டாங்குக்குள் அதிகமான செல்வாக்குப் பெற்றுவந்த தொழிலாளர், கிருஷிகர் சங்கங்களை உடைத்துவிட வேண்டுமென்று விரும்பி, எல்லா விஷயங்களிலும் தீவிர வாதிகளுக்கு நேர்மாறாக, நடந்துகொள்ளும் சுபாவமே. தேசம் அந்நியர்களின் மாய வலையில் சிக்குண்டு தினறினும் சரி, தேசத்தில் தங்கள் செல்வாக்குக் குறைவது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. ஷாங்ஹாயி லுள்ள வெளிநாட்டு பாங்கர்கள், முதலாளிகள் போன் றோரின் உதவியை, இந்தப் புரட்சி எதிர்ப்பு இயக்கத் துக்குப் பெறலாமென்று கருதியே, ஷாங்ஹாய்மீது படையெடுக்க வேண்டுமென்று அவர்கள் கருதியது. ஷாங்ஹாய்தான் சீனப் பணக்காரர்களுக்கும், அதிகார வக்கத்தினருக்கும் உறைவிடம் என்பது தெரிந்தால், இதைப்பற்றி அவர்களுடைய மனப்பான்மை நன்கு புலப்படும்.

ஆகையால், 1927 மார்ச் 22உ ஷாங்ஹாய் மீது அவர்கள் படையெடுத்தனர். ஷாங்ஹாயில் சீனர் வசிக் கும் பேட்டைகள் எளிதில் அவர்கள் வசமாயின. வெளிநாட்டினரின் குடியேற்றங்களை அவர்கள் தாக்க வில்லை. எதிர்த் துருப்புகளும் தேசீயவாதிகளிடம் பணிந்து விட்டதால், ஷாங்ஹாய் சுலபமாய்க் கிடைத் தது. தேசிய வாதிகளுக்கு ஆதரவளிக்கும்பொருட்டு, ஷாங்ஹாயிலுள்ள தொழிலாளர் எல்லோரும் பொது வேலை நிறுத்தஞ் செய்து அவர்களுடைய வேலையைச்

பூர்த்தியாக்கினர். ஷாங்ஹாயிலிருந்த தனி சர்க்கார் கவிழ்ந்தது. அடுத்த இரண்டு தினங்களுக்குள் இப்போது சீனவின் தலைநகரா யிருந்துவரும் நான்கிங்கை யும் தேசிய ராணுவம் பிடித்துக்கொண்டது.

## மோசமான பிளவு

இத்தருணத்தில்தான் ஒற்றுமை யின்மையால், சீன தேசியத்தின் வெற்றி மீண்டும் சீரழியத் தொடங் கியது. ஹாங்கான் (ஊஹான்) சர்க்காரில் பலருடைய அபிப்ராயத்துக்கு மாருக, சியாங்-கே-ஷேக் ஷாங்ஹாய் மீது போர் தொடுத்தா ராகையாலும், அவர் ஏகாதி பத்தியங்களின் கையாளாகும் தருவாயி லிருப்பது தெரிந்ததாலும், ஹாங்கான் சர்க்காரிலிருந்தவர்கள் அவருடைய செல்வாக்கை ஒடுக்க முற்பட்டனர். அவ ரும் தன் ஹாங்கான் சகாக்களைக் குழிதோண்டிப் புதைக்கச் சதி செய்தார். ஷாங்ஹாயைப் பிடித்த ஒரு சில தினங்களுக்குள் இத்தனை அலங்கோலங்களும் நிகழ்ந்தன. சியாங்-கே-ஷேக், நான்கிங்கில், ஹாங்கான் சர்க்காருக்குப் போட்டியாக வேருெரு சீன மத்திய சர்க்காரையும் சிருஷ்டித்துவிட்டார். போட்டி விரோ தம் என்ருல் சொல்லவேண்டுமா? பணக்காரர்களும் இதர பராச்ரம ஜீவிகளும் அவரைத் தட்டிக்கொடுத்து சபாஷ் கூறினர். வெளிநாடுகளும் மறைமுகமாக அவ ருக்கு முகமன் கூறின. இந்தக் கர்வத்தில் அவர், அது

வரை தனக்கு உதவியாயிருந்து, தன் வெற்றிக்குப் பிரதான காரணமாயிருந்த பொதுவுடைமைக்காரர்மீது பாணம் தொடுத்தார். பொதுவுடைமைக்காரரல்லாத இதர தீவிரவாதிகளும் தொழிற் சங்க ஊழியர்களுங் கூட அவருடைய கோபத்திற்கு இலக்காயினர். தன்னை அந்தப் பதவிக்கு உயர்த்திய அதே தொழிலாளர்மீது அவர் தன் கைவரிசையைக் காட்டலானார். நூற்றுக் கணக்கான பேர்கள் சுட்டுக் கொல்லப்பட்டனர். பலர் சிரச்சேதத்துக்கு உள்ளாயினர். ஆயிரக்கணக்கில், உண்மைத் தேசிய வாதிகள் கைது செய்யப்பட்டு சிறைகளில் உழன்றனர். ஷாங்ஹாயில், சுதந்திரத்துக்குப் பதில், தேசிய வாதிகளின் ஆதிக்கத்தின் கீழ், பயங்கர இரத்தப் பெருக்கு எற்பட்டது. இதிலெல்லாம், சியாங்-கே-ஷேக்குக்கு உதவியாக இந்தியத் துருப்புகளை பிரிட்டிஷ் அதிகாரிகள் கொடுத்துதவினர் என்பதைக் கேட்டு நாம் வெட்கித் தலைகுனியாமலிருக்கமுடியாது.

## ஏகாதிபத்தியங்களின் சூழ்ச்சி

போல்ஷிவிக் ஆட்சியை ஸ்தாபிக்க இது ஒரு முயற்சி என்று கருதிய பிரிட்டிஷார், 1927 எப்ரலில் ஷாங்ஹாயில் இந்தப் படுகொலைகள் நடந்து வந்த சமயத்திலேயே, ஷாங்ஹாயிலும் பீகிங்கிலுமுள்ள ஸோவியத் ஸ்தானிகர் காரியாலயங்களுக்குள் புகுந்து சோதனை போட்டனர். பீகிங்கில் ஆதிக்கம் செலுத்தி வந்த சாங்ஸோலின் என்ற

ராணுவத் தலைவர்மீது போர்தொடுப்பதென்ற தேசீயக் கொள்கையையும் கைவிட்டு, அவருடன் உறவாடி அங்கும் கடுமையான பொதுவுடைமை வேட்டை ஆரம்பமாகும்படி செய்தது சியாங்-கே-ஷேக்தான். இதையெல்லாம் ஏகாதிபத்யங்கள் குதூகலமாய் வரவேற்றுக் கொம்மாளமடித்துக் கொண்டிருந்ததில் ஆச்சரியமில்லை. சீன தேசிய ஒற்றுமையை அவரே குலைத்து, தங்களுக்கு உதவியதற்காக இந்த நன்றிகூட அவர்களுக்கு இல்லாமலிருக்க முடியுமா? அவர்களுக்கும் சியாங்குக்கும் நெருங்கிய சம்பந்தம் இருந்து வந்ததாகப் பல சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர். அடுத்த மாதம் (1927-மே மீ) லண்டனிலிருந்த ஸோவியத் காரியாலயங்களைப் பிரிட்டன் முற்றுகை போட்டதும், ரஷ்யாவுடன் உறவுகளை ரத்துச் செய்துகொண்டதும் குறிப்பிடத்தக்கது. இதற்கும் சீன விவகாரங்களுக்கும் நெருங்கிய சம்பந்த முண்டென்று சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள் கூறுகின்றனர். வெற்றி மேல் வெற்றிபெற்று சீன தேசத்தின் பிரதிநிதியாக விளங்கிய கக்ஷியான கோமிண்டாங், பிளவுபட்டு இரண்டே மாதங்களில் அதிருஷ்டவசமான இந்த நிலைமைக்கு வந்ததால்தான், சீன சரித்திரத்தின் போக்கே வெகுவாக மாறிவிட்டதென்று கூறலாம். ஷாங்ஹாயில் தொழிலாளரின் வேலை நிலைமை படிப்படியாய் மோசமாயிற்று; பழைய சொக்கன் சொக்கனுய்விட்டான். தொழிற் சங்கங்களெல்லாம் அங்கீகாரத்தை இழந்தன.

நிலைமை இவ்வளவு மோசமாகும்படி விட்டதற்காக ரஷ்யப் பொதுவுடைமைக் கக்ஷியினர் பொரோடினைக் கடுமையாகக் கண்டித்தனர். 1927 ஜுலையில் அவர் மாஸ் கோவுக்குத் திரும்பவேண்டி நேரிட்டது. அவர் திரும் பிய பின் சியாங்-கே-ஷேக்கின் அடக்குமுறையை எதிர்த்து நிற்கமுடியாமல், ஹாங்கானிலுள்ள தீவிரவாதி களின் சர்க்கார் நிலைகுலைந்து சின்னுபின்னமாயிற்று.

கோமிண்டாங் கக்ஷிமீது நான்கிங் சர்க்காரே பூர்ண ஆதிக்கம் பெற்றனர். பொதுவுடைமைக்காரரும், தொழி லாளர் தலைவர்களும் நான்கிங் சர்க்காரின் பாணங்களுக்கு விசேஷ இலக்காயினர். அவர்களில் பலர் சீனுவை விட்டு ஓடினர். சீனக் குடியரசை ஸ்தாபித்த டாக்டர் ஸன்-யாட்-ஸேனின் மனைவியும் சியாங்-கே-ஷேக்கின் மைத் துனியுமான ஸ்ரீமதி ஸன்-யாட்-ஸேன் உட்பட பலர் வெளியேற்றப்பட்டனர். தம் கணவனின் தேச விடு தலைத் திட்டம் சின்னுபின்னமாகி, சீனு இந்தப் பரிதாப கரமான நிலைமைக்கு வந்தும், டாக்டர் ஸன் கொள்கை களையே தாங்கள் இனியும் பின்பற்றி வருவதாக கோமிண்டாங் தலைவர்கள் சொன்னது கேட்டு அந்த அம்மையார் கண்ணீருங் கம்பலையுமாய்க் கதறினர்.

## மீண்டும் அலங்கோலம்

சீனுவெங்கும் மீண்டும் டூசூன்களின் போட்டியும் போராட்டமும் தாண்டவமாடின. சீன ஐக்கியம்

சிதறுண்டுபோகத் தொடங்கியது. காண்டனில் தள கர்த்தர்கள் ஆதிக்கம் வைத்துக்கொண்டு நான்கிங் சர்க்காரை மதிக்க மறுத்தனர். ஆனுல் 1928-ல் ஏகாதி பத்தியங்களின் ராஜதந்திர உதவிபெற்று பீகிங்கை சியாங்-கே-ஷேக் நான்கிங்கின் ஆதிக்கத்துக்கு உட் படுத்தினுர். அதன் பெயரை பீபீங் என்று மாற்றினுர். பீகிங் கிடைத்தும் உள்நாட்டு யுத்தம் ஓயவில்லே. வடக்கில் எல்லா மாகாணங்களிலும் ராணுவத் தலேவர் கள் நான்கிங் ஆதிபத்தியத்தை ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டனர். ஆனுல் பெயரளவில், தெற்கே காண்டன் நீங்கலாக, சீனுவின் மற்ற பாகங்கள்மீது நான்கிங் சர்க்காரின் ஆதிபத்தியம் இருந்துவருவதாகத் தான் கருதப்பட்டது. ஆனுல் கிரியாம்சையில், கடற் கரை யோரமுள்ள மாகாணங்களில் மட்டுமே அவர் களுக்குச் செல்வாக்கு இருந்தது. மேற்கிலும், வட மேற்கிலும், தெற்கிலும், பொதுவுடைமைக்காரர்கள் தங்கள் ஆதிக்கத்தை மீண்டும் ஸ்திரப்படுத்திக்கொள்ள முயற்சித்து அதில் நல்ல வெற்றி பெறலாயினர்.

சீன சர்க்காருக்கும் ரஷ்யாவுக்கும் தகராறு எற் பட்டு, 1927 டிசம்பரில் இரண்டு நாடுகளும் ராஜதந்திர உறவுகளே ரத்துச் செய்துகொண்டன. அதுமுதல், ஏகாதிபத்தியங்களின் ஆதீனத்தின் கீழ், ஸோவியத் ரஷ்யாவுக்கு விரோதமான தீவிரக் கொள்கையை நான்கிங் சர்க்கார் கடைப்பிடிக்கலாயினர். ரஷ்யா,

தன் சமாதானக் கொள்கைக் கேற்ப, ஆக்கிரமூட்டத் தக்க சந்தர்ப்பங்களில்கூடப் பொறுமையை இழக்காம லிருந்தது குறிப்பிடத்தக்கது. 1929-ல், சீன சர்க்கார், மஞ்சூரியாவிலிருந்த ஸோவியத் ஸ்தானீகர் காரியா லயத்தைச் சோதனை போட்டனர். ரஷ்யாவுக்குச் சொந்த மான ரயில்வேயில் வேலைசெய்த பல ரஷ்ய அதிகாரிகள் பலவந்தமாய் நீக்கப்பட்டனர். கொஞ்ச காலம் கழிந்து பழைய ஏற்பாட்டுக்குச் சீன சர்க்கார் இணங்கினர்.

## ஜப்பானுக்குக் கொண்டாட்டம்

சீனா இந்த நிலைமையிலிருந்த போதுதான் ஜப் பான் துணிச்சலுடன் ஆக்கிரமிப்பில் இறங்க வாரம்பித் தது. இதற்குக் காரணம் சீனாவின் சீரழிவும், மேல்நாடு களில், வல்லரசுகள் வர்த்தகமந்தத்திலும், பரஸ்பர பயத் திலுமிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளும் வேலையில் பூர்ணமாய் ஈடுபட்டிருந்ததுந்தான். மற்றொரு முக்கிய மான காரணம் பிரிட்டனுக்கும் கோமிண்டாங் கக்ஷிக் கும் இருந்துவந்த நெருங்கிய உறவும், அதன் விளைவாக கிழக் கோடியில் ஸ்திரமாய் நிலைக்கக்கூடுமென்று தோன்றிய பிரிட்டிஷ் ஆதிக்கமுமே.

## தேசீய சர்க்காரின் நிர்வாகம்

சீனா முழுவதையும் குடியரசின் ஆதீனத்தின் கீழ்க் கொண்டுவந்ததாகப் பெருமையுடன் கூறி சியாங்-

கே-ஷேக் 1928 அக்டோபர் 10-உ நான்கிங்கில், முதல் தேசிய சர்க்காரை ஆரம்பித்தார். சியாங்-கே-ஷேக் குடியரசுத்தலைவரும், தளபதியும், முதல் மந்திரியுமானர். அவருடைய மைத்துனர் டி. வி. ஸுங், சகலை எச் எச். குங், ஹு-ஹான்-மின், ஸன்-போ, பெங்-ஹு-ஸியாங், வி. டி. வாங், போன்ற பிரமுகர்கள்-எல்லோரும் சர்வதேசிய அனுபவமுள்ளவர்கள்-முதல் சர்க்காரில் சேர்ந்தனர். கொஞ்சகாலத்துக்கு வூஹானிலிருந்து பொதுவுடைமைக்காரர் சியாங் சர்க்காருக்குத் தொந்தரவு கொடுத்து வந்தனர். ஜப்பானை ஷாண்டுங்கில் எதிர்க்கவும் துணிந்தனர். ஆனல், சியாங் அவர்களை அடக்கிவிட்டு ஜப்பானிடம் வருத்தம் தெரிவித்துக் கொண்டார். பிறகு 1929 மார்ச் 28-உயன்று ஜப்பானும் சீனுவும் சேர்ந்து ஒரு கூட்டு அறிக்கையை வெளியிட்டன.

## சீனு-ஜப்பான் கூட்டு அறிக்கை

"சம்பிரதாயமாகச் சீனுவுக்கும் ஜப்பானுக்கும் இருந்து வந்த நேசப்பான்மையை உத்தேசித்து, இனியாவது அது மிகவும் சிறந்திருக்குமென்ற நம்பிக்கையுடன் எல்லா விரோத எண்ணங்களையும், இரண்டு சர்க்கார்களும் மனதிலிருந்து அகற்றுகின்றனர்" என்று அந்தக் கூட்டு அறிக்கை கூறியது.

பின்னல் நடைபெற்ற சம்பவங்களிலிருந்து ஜப்பான் என்ன துரோகம் செய்திருக்கிறது என்பது நன்கு விளங்கும். வடசீனுவைத் தன் ஆதினத்தின் கீழ்க் கொண்டு வருவதற்கு சியாங்-கே-ஷேக் அடிக்கடி

போரில் ஈடுபடவேண்டியிருந்தது. முதலில் சர்க்காருக்கு அரும்பாடு பட்ட வாங்-சிங்-வேய், தன் பொதுவுடைமை அனுதாபத்துக்காக 1930 மார்ச்சு மாதத்தில் வெளியேற்றப் பட்டார். அவர் சாங்-ஸு-லியாங் என்ற பிரபல தளகர்த்தருடன் டீண்ட்ஸினில் சின சர்க்காருக்கு எதிராகக் கலகம் செய்யலானுர். நிலைமை இவ்வளவு மோசமாயிருந்தபோது நம்பிக்கை பிறந்தது. வாங்-சிங்-வேய் தோற்றுப்போய் காண்டனுக்கு ஓடினுர்.

---

## நான்காவது அத்தியாயம்

## கோமிண்டாங்கும் ஸோவியத் சீனுவும்

### சீன சர்க்கார் ஆக்ஷி முறை

சீனுவை முதல்தரமான ஜனநாயக குடியரசாக்குவதே டாக்டர் ஸன்-யாட்-ஸேனின் நோக்கம். சியாங்-கே-ஷேக்கும் அதே இலட்சியத்தைத்தான் வைத்துக் கொண்டிருந்தார். ஆனுல் பல சந்தர்ப்பங்களின் விளைவாக அவர் சீன ஜனநாயகத்தைப் பரிபூர்ணமாக்கக் கூடவில்லை. தன்னுடன் போரிட்ட சகாக்களை வெருட்டி, எகாதிபத்தியங்களின் உறவை அவர் நாடியதும் இதற்கு முக்கியமான தடைகளில் ஒன்ருயிருந்தது.

மைக்கேல்| |பொரோடின் உதவியால் சியாங் அமைத்த அரசியல் முறை வருமாறு :

# தேசிய அசெம்பிளி.

மத்திய சர்க்கார்.




மாகாண சர்க்கார்.

ஜனநாயக முறைப்படி ஆங்காங்கு அமைக்கப்பட்டுள்ள ஸ்தல சர்க்கார் தொகுதிகள்.
(இவற்றின் அதிகாரங்கள் வருமாறு)




ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் தேசிய அசெம்ப்ளிக்கு ஒரு பிரதிநிதி.

சென்ற 50 வருஷங்களில் சீனுவிடமிருந்து வெளிநாடுகளால் அபகரிக்கப்பட்ட நிலப்பரப்பு 24 லக்ஷம் சதுரமைல். ஆனம் சிற்றரசு இந்தோ-சீனுவாக பிரெஞ்சுக்காரரிடம் போயிற்று. கொச்சின் சைனுவையும் சேர்த்து பிரான்ஸ் பிடித்தது 1,14,000 சதுரமைல். 1886-ல் பிரிட்டன் பர்மாவைப் பிடித்துக்கொண்டது. பிறகு, நேபால், பூடான், ஸிக்கிம் முதலியவற்றிலிருந்தும் சீன ஆதிக்கத்தைப் பிரிட்டிஷாரே விரட்டினர். இவ்வாறு சீனு இழந்தது 3-லக்ஷம் சதுரமைல். கொரியா, பார்மோஸா, பெஸ்காடோரிஸ் முதலியவற்றை (ஒரு லக்ஷம் சதுர மைல்) பிறகு ஜப்பான் பிடித்தது. 7 லக்ஷம் சதுரமைலுள்ள திபேத் பிரிட்டிஷ் பாதுகாப்பின் கீழ் வந்துவிட்டது. 1921 முதல் வெளி மங்கோலியா ஸோவியத் ஆதீனத்துக்கு உட்பட்ட தனிக் குடியரசாயிற்று. இப்படிப் போனது 9 லக்ஷம் சதுரமைல். 1931ல் ஜப்பான் மஞ்சூரியா ஜிஹோல் மூலம் எடுத்துக்கொண்டது 5 லஷம் சதுர மைல். 1935-ல் ஜப்பான் சூழ்ச்சி செய்து, ஹோபெய் ஷான்ஸி, ஸூயுவான், ஷாண்டுங், சாஹார் ஆகிய ஐந்து மாகாணங்களேயும், ஒரு தனி ராஜ்யக் கவுன்சிலின் ஆதிக்கத்துக்கு உட்படுத்திக்கொண்டது. இன்று இந்த மாகாணங்களில் மூன்று பூராவாகவும், இரண்டில் ஓரளவுக்கும் ஜப்பானியர் வசமாய்விட்டன. உட்புற மங்கோலியாவும் துரோகம் செய்து ஜப்பானிய ஆதீனத்

தின் கீழ், ஒரு தனி சர்க்காரைக் கிளப்பியிருக்கிறது. 1935-ல் தெற்கே எழும்பிய கிளர்ச்சியை ஒடுக்கி, கான்டனிலிருந்து வந்த போட்டி அதிகார வர்க்கத்தை சியாங்-கே-ஷேக் ஒழித்துவிட்டார். 1936-ல் ஸோவியத் சீனு, சீன மத்ய சர்க்காருடன் ஒத்துழைக்க ஆரம்பித்து 1937ல் பூர்ணமாய் ஐக்கியமாகி விட்டது. இவ்வாறு இப்போதுதான் தேசிய ஒற்றுமை ஜப்பானிய ஆக்ரமிப்பின் முன் ஏற்பட்டுள்ளது. "ஆசியாவின் நோயாளி" என்று குறிப்பிட்டு சீனுவின் வியாதிகள் இன்னின்னவை என்று டாக்டர் லிம்-பூன்-கெங் என்ற ஸர்வ கலாசாலே ஆசிரியர் பின்வருமாறு விவரித்துள்ளார்:

சீனுவின் வியாதிகள்

"தேசிய உணர்ச்சி முடக்கம். நியாய வாதமாய் யோசிப்பது அலட்சியம் செய்யப்பட்டுள்ளது.

ஜனங்களிடையே ஒத்துழைப்பு இல்லாமை.

திறமையற்ற சர்க்கார்; பேராசை, சுயநலம் நிறைந்த அதிகாரிகள்.

பொருளாதார வீழ்ச்சி: பாமர மக்களின் வறுமை.

ஒழுங்கான தலைமை யில்லாமை. அதன் காரணமாக உள்நாட்டு யுத்தம்; ராணுவ அதிகாரத்தின் துர்விநியோகம்.

தேசபக்தியின் சீரழிவு—கல்வியிலுள்ள கோளாறுகள்—சர்க்காருக்கும் ஜனங்களுக்கு மிடையே ஒத்துழையாமை.

போதிய தற்காப்பு பலமில்லை யென்று தெரிவதால் ராஜதந்திர போக்களில் கண்டிப்பாயிருக்க முடியாமை."

இந்த நிலைமையை மாற்றி, நோயாளியை சொஸ்தப் படுத்தப் பெரு முயற்சிகள் நடைபெற்றன. பொதுவுடைமைக்காரர்மீது போர் தொடுத்திராவிடில், நிலைமை இன்னும் சீர்திருந்தியிருக்கும். அப்படியிருந்தும், சீன சர்க்கார், ஓரளவுக்குச் சாதிக்க முடிந்த சிலவற்றை இங்கே குறிப்பிடுகிறோம்.

நிலக்கரிச் சுரங்கங்கள் வேலை செய்யப்படுகின்றன. ஏதோ பெயரளவுக்குக் கொஞ்சம் ரயில்பாதைகள் உண்டு. நகரங்களெல்லாம் நாகரிக வசதிகள் படைத்துள்ளன. நான்கிங், உலகத்திலேயே மிகப்பெரிய கோட்டை நகரமாக்கப்பட்டது. தொழில் வளர்ச்சி, கல்வி அபிவிருத்தி, சுகாதாரம், ரயில்வேக்களும் ரோடுகளும், கிராமப் புனருத்தாரணம்-இவற்றில் கவனம் செலுத்தப்படுகிறது. சீனுவின் பொருளாதார அபிவிருத்தி, ஒரு தேசியப் பொருளாதார சபையிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. ஜனங்களைத் திடகாத்திரர்களாக்கும் இயக்கம் 1934 முதல் முடுக்கிவிடப்பட்டது.

1. வாழ்க்கை சம்பந்தமாய்ச் சரியான மனப்பான்மை கொள்வது.

2. வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் ஸத்யத்தை அனுஷ்டிப்பது.

3. கௌரவமாகவும் கண்யமாகவும் நடந்து கொள்வது.

4. நல்லொழுக்கம்.

இவற்றைத் தேச மக்களெல்லாம் அனுஷ்டிக்க வேண்டுமென்று 1934 முதல் சியாங் பலத்த பிரசாரம் செய்தார். இதுதான் இன்று காணப்படும் தேசிய ஒற்றுமைக்கு முக்கியமான காரணம் என்று பல அறிஞர்கள் கூறுகின்றனர்.

சீனுவில், பெரிய தொழில்கள் ஆரம்பமாகி 65 வருஷங்களாகின்றன. ஆனால் தொழிலபிவிருத்தி மிக மிகக் கொஞ்சம் என்று தான் சொல்லவேண்டும். மெஷின்களை வெளியிலிருந்து இறக்குமதி செய்தாக வேண்டியிருக்கிறது. முக்கியமான இரும்புச் சுரங்கங்களெல்லாம் ஜப்பானிய ஆதீனத்தின் கீழ் இருக்கின்றன. கொஞ்ச காலமாக, ஜவுளிகள், மின்சார சாமான்கள், உருக்கு, முதலியன ஏராளமாய்த் தயாரிக்கப் படுகின்றன. மொத்த வருமானத்தில் 31% ராணுவத்துக்காகச் செலவழிக்கப்படுகிறது. சிமிட்டித் தொழில் வளர்ந்து வருகிறது. பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு ஏராளமான பணம் செலவழிக்கப்பட்டுள்ளது. மோட்டார்கள் போகக்கூடிய ரோடுகள் 47,000 மைலுக்கு இருக்கின்றன. 1930 முதல் 1934 வரை 4 வருஷங்களில் 9000 மைல் புதிய ரோடுகள் அமைக்கப்பட்டன. 25 வருஷங்களுக்குமுன் ஆரம்பமான காண்டன் ஹாங்கோ-ரயில்வே 1936-ல் பூர்த்தியாக்கப்பட்டது. இன்னும் 2,000 மைல் ரோடு போட ஏற்பாடாயிருந்தது.

## வர்த்தக மந்தமும் சீனுவும்

உலகமெங்கும் 1928-ல் வர்த்தக மந்தம் தலை தூக்கியது. ஆனால் சீனுவை அது இரண்டு வருஷங்கள் கழித்தே பாதித்தது. இதற்குச் சீனுவின் வெள்ளி நாணய முறையே முக்கியமான காரணம் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். எது எவ்வாறாயினும், வர்த்தக மந்தம் ஆரம்பமானவுடன் ஏகாதிபத்தியங்களின் சுரண்டலும் அதிகமாயிற்று. தங்களுடைய நஷ்டங்களைக் கூடிய வரையில் பிறர் மீது சுமத்தப் பார்ப்பதே அவற்றின் தொழிலாகையால், அதற்குச் சீனு முக்கியமான பிணையாயிற்று. மத்திய சீனுவிலும், மேற்கு சீனுவிலும் ஸோவியத் சபைகளின் செல்வாக்கு மிகுந்திருந்ததால், ஏகாதிபத்தியங்களின் கைவரிசை அங்கெல்லாம் பலிக்கவில்லை. பிரிட்டனும் அமெரிக்காவும், சீன சர்க்காருக்குக் கடன் கொடுத்தும், நல்லுறவு கொண்டாடியும் இதர பாகங்களில் தம்முடைய வர்த்தக ஆதிக்கத்தைப் பெருக்கிக்கொள்ளப் போட்டி போட்டன. பிரிட்டன் தங்க நாணயத் திட்டத்திலிருந்து விலகியதால், அமெரிக்காவும் டாலரின் மதிப்பைக் குறைத்துவிட்டது. இந்த இரண்டு நாடுகளும் இம்மாதிரி போட்டி போடுகையில், ஜப்பான் அதிலெல்லாம் நம்பிக்கையை இழந்து, சீனுவைக் கொஞ்சங் கொஞ்சமாக விழுங்குவதென்று தீர்மானித்தது. ஆகவே 1930 செப்டம்பரில் மஞ்சூரியாவை முதற்படியாக விழுங்கி, அங்கு தன் ஆதிக்கத்

துக்கு உட்பட்ட ஒரு பொம்மை சர்க்காரை ஸ்தாபித்துக் கொண்டது.

இதற்கிடையே, சீனவில் ஸோவியத் செல்வாக்கை உடைக்கும் நோக்கத்துடன், எல்லா ஏகாதிபத்தியங்களுமாகச் சீன சர்க்காரைத் தூண்டிவிட்டன. அதற்கு அனுகூலமாக 1931-33-ல் அமெரிக்கா ஆறு கோடி டாலர் வரை கடன் கொடுத்தது. சீன ஸோவியத்துகளை எதிர்த்து சர்க்கார் நடத்திய இந்தப் போராட்டத்தில் செலவானது 100 கோடி டாலர். மரித்த சீனத் துருப்புகள் 6 லக்ஷம். ('மஞ்சூரியன் ரெவ்யூ'-ஜன. 12,1935). ஸோவியத் சீன கடுமையான பொருளாதார பகிஷ்காரத்துக்கு உட்படுத்தப்பட்டது. ஆயினும் அதை ஒடுக்க சீன சர்க்காரால் முடியவில்லை. கடைசியில் 1936-ல் ஸோவியத் சீனவுடன் சீன சர்க்கார் தேசிய ஐக்கிய ஒப்பந்தம் செய்துகொள்ளுமாறு நேரிட்டது.

1934-ல் சீனவின் பொருளாதாரநிலைமை, ஏகாதிபத்தியங்களின் சுரண்டல் காரணமாகப் படுமோசமாய் விட்டது. பண்டங்களின் உற்பத்தியும் விலை வாசிகளும் மிகவும் குறைந்துவிட்டன. 1933-ல் உற்பத்தியான தான்யங்களில் மூன்றில் இரண்டு பங்கு கூட 1934-ல் விளையவில்லை. தொழில்கள் நசித்தன. மில்களில் செய்யக் கூடிய வேலையில் 20%கூட நடைபெறவில்லை. பட்டுத் தொழில் தான் சீனவின் தொழில்களில் முக்கியமானது. அது ஒரே வருஷத்தில் 75% அழிந்துவிட்டது.

ஆனல் வெளிநாட்டுக் கடன்கள் மட்டில் விஷம் போல் ஏறிவந்தன. இதற்கெல்லாம் இயற்கையின் கூத்து ஒரு காரணமாயிருந்த போதிலும், ஏகாதிபத்தியங் களின் அக்கிரமத் தூண்டுதலே முக்கியமான அடிப்ப டையான காரணம். தவிர, ஸோவியத் சீனுவைத் தன் பிரதான எதிரியாக மதித்து, சீன சர்க்கார் ஜப்பானு டன் மீண்டும் சமரசம் செய்துகொண்டு, மஞ்சுகோவுக் கும் வடசீனுவுக்கும் 1934-ல் ரயில் போக்குவரத்தை மீண்டும் திறந்து விட்டதால் பேராபத்து ஏற்பட்டது. மஞ்சுகோ போலவே சீன முழுவதிலும் தன் ஆதிக்கத் தை உறுதியுடன் செலுத்துவது அசாத்தியமல்ல என்ற எண்ணம் ஜப்பானுக்கு ஏற்பட்டதற்கு, சியாங்-கே-ஷேக்கின் இந்த சமரஸ மனப்பான்மையே காரணம். இந்த நிலைமையில் சீன மத்திய சர்க்காருக்கு எதி ராக, மாகாணங்களில் ஆதிக்கம் செலுத்திய ராணுவ கவர்னர்களை ஜப்பான் கிண்டிவிடுவது சுலபமாயிற்று. இதன் விளைவாகச் சீன சர்க்கார் இரண்டு யுத்தங்களையும் நடத்திவைக்க வேண்டியதாயிற்று. சீனுவின் பொரு ளாதார வாழ்க்கை எல்லாத் துறைகளிலும் சீரழிந்து வந்தது. பல மில்கள் மூடப்பட்டன. லக்ஷக்கணக் கான பேர்கள் பிழைக்க வழியற்றுப் போயினர். வேலைசெய்யக்கூடிய 120 லக்ஷம்பேர்கள் 1934-ல் வேலை யற்றிருந்ததாக ரென்-ஹை-பெங் என்ற நிபுணர் கணக் கெடுத்திருக்கிறார்.

1935ல் தொழிலாளர், மோசமாய்க் கொண்டுவந்த தங்கள் தொழில் நிலைமையை எதிர்த்துப் போர் தொடுத்தனர். தேசிய சுதந்திரத்தை அவர்கள் தங்கள் தொழில் முறைப் போராட்டங்களிலும் வற்புறுத்தினர். டாங் ஷான் என்ற இடத்தில் 30,000 சுரங்கத் தொழிலாளர் வேலை நிறுத்தம், ஷாங்ஹாயில் பல்லாயிரக் கணக்கான நெசவுத் தொழிலாளர் வேலை நிறுத்தம் முதலியன வெற்றிகரமாய் முடிந்தன. இவற்றால் அனுகூலமடைந்தவர்கள் 3,59, 151 தொழிலாளர். ஸோவியத் சீனவின் ஆதாவே, சீனவெங்கும் பாமர மக்களுக்குக் கிடைத்த இந்த வெற்றிக்குக் காரணம். ('ஷாங்ஹாய்-சுங்ஹவா என்பா'-பிப். 13, 1935.)

அதே வருஷத்தில், 14 மாகாணங்களில், 283 ஜில்லாக்களில், வெள்ளத்தின் கொடுமை ஒருபுறமும், பயங்கரமான வரட்சி ஒரு புறமுமாகச் சேர்ந்து, 15 கோடிப் பேர்களை மனதிலும் நினைக்கமுடியாத அவ்வளவு கஷ்டத்துக்கு உள்ளாக்கின. சொந்தச் சாகுபடிக்கு நிலமில்லாமல் பிறரிடம் அண்டி வாரச் சாகுபடி செய்வோரின் விகிதாசாரம் 1934-ல் 36% இருந்தது. குடியானவர்களில் 62%க்கு மேல் மீளமுடியாதவாறு கடனில் மூழ்கியிருந்தனர். அவர்களில் ஏராளமான பேர்கள், தங்கள் வீடு வாயில்களையும் கிராமங்களையும் விட்டு, நகரங்களுக்குப் போய் ஏதாவது ஒரு வகையில் காலந்தள்ளுவது அவசியமாயிற்று. மாகாணங்களில் லேவாதேவிக்

காரர்கள், நிலச்சுவான்கள் போன்ற பாச்ரம ஜீவிகள் தான் அதிகாரத்தில் செல்வாக்குள்ளவர்கள். ஆகை யால், அவர்கள், கிருஷிகர்களைக் கசக்கிப் பிழிந்து தங் கள் பாக்கிகளை வசூலித்ததில் ஆச்சரியமொன்றுமில்லை. இந்த அக்கிரமங்களை எதிர்த்துக் குடியானவர்கள் பல விடங்களில் கலகம் செய்தனர். கைது செய்யப்பட்ட வர்கள் கட்டாய ராணுவசேவைக்கும், அடிமை நிலைமை யை ஒத்த வேலைகளுக்கும் அனுப்பப்பட்டனர். கியாங்ஸு என்ற ஒரு மாகாணத்தில் மட்டும் இம்மாதிரி 1,60,000 பேர்கள் சாதாரண வாழ்க்கையிலிருந்து அப கரிக்கப்பட்டனர். 1934-ன் இரண்டாவது பகுதியில் கிருஷிகர் கலகங்கள் 111 நடந்திருப்பதாகப் பத்திரி கைகள் கூறுகின்றன. பட்டினி மிகுதியால், பல விடங் களில் கொள்ளைகள் நிகழ்வது சகஜமாய் விட்டது. பல விடங்களில், பட்டினிப் பட்டாளங்கள், சர்க்காரின் ஆயு தம் தாங்கிய துருப்புகளை எதிர்த்துப் போரிட்டன.

சீன நகரங்களில் போடப்பட்டுள்ள மூலதனத் துக்கு ஆபத்து வராதென்று ஏகாதிபத்தியங்கள் கனவு கண்டு கொண்டிருந்தன. ஆனல், வர்த்தக மந்தம் வியாபிக்கவே, பல பெரிய வர்த்தக ஸ்தாபனங்களையும் தொழிற்சாலைகளையும் மூடிவிட வேண்டியதாயிற்று. வடசீனுவில், ஷான்ஸி என்ற மாகாணத்தின் தலைநகரா கிய டாயுவானில் மட்டும் ஒரு வருஷத்தில் 4,000 கடைகள் மூடப்பட்டன. அவற்றில் பல ஒரு நாற்

ருண்டுக்கு மேல் தொழில் நடத்தியவை. தெற்கு சீனா விலும் நிலைமை இதேமாதிரித்தான். தலை நகரான நான் கிங்கிலும், ஷாங்ஹாயிலும் அதே பாடந்தான். ஷாங் ஹாயில் மட்டும் 40% கடைகள் மூடின. 7 லக்ஷம் பேர் வேலையிழந்தனர்.

## வறுமைப் படலம்

1935 இறுதியில், முக்கியமான ஜப்பானிய நகரங் களின் ஜன சங்கியையும், அவற்றில் தங்க இடமின்றித் தவித்த அநாதைகளின் விவரமும் கீழே தரப்படு கின்றன.

| நகரங்கள். | ஜனசங்கியை. | அநாதைகள். | அநாதை வீதாசாரம். |
|---|---|---|---|
| ஷாங்ஹாய் | 3,416,000 | 10,00,000 | 33⅓% |
| டீண்ட்ஸின் | 13,91,000 | 4.50,000 | ஷை |
| ஹாங்கோ | 7,43,000 | 5.00,000 | 66 |
| காண்டன் | 9,54,000 | 20,000* | ... |
| பீகிங் | 15,49,000 | 12,00,000 | 80 |
| நான்கிங் | 7,46,000 | 50,000* | |
| ஹாங்சோ | 4.67,000 | 1,00,000* | |
| யாங்சோ | 3,00,000 | 94,000 | 33⅓% |
| நான்சாங் | 2,68,000 | 11,000* | |

* பிச்சைக்காரர்கள்.

இதிலிருந்து, சீனாவின் நிலைமை, நகரங்களிலும் சரி, கிராமங்களிலும் சரி, 1935 இறுதியில் மிகவும் மோசமாய் விட்டதென்பது நன்கு விளங்கும்.

ஆனுல், மொத்தமாகப் பார்க்குமிடத்து, கல்வித் துறையில் சர்க்கார் முயற்சியால் நல்ல அபிவிருத்தி எற்பட்டுள்ளது. 1912-ல் 86,316 ஆக இருந்த எலிமெண்டரி பாடசாலைகள் 1931-ல் 2,61,264 ஆயின. செகண்டரி பாடசாலைகள் 373 லிருந்து 1892 ஆயின. 1,200 தொழிற் பள்ளிக்கூடங்கள் எற்பட்டன. கட்டாய ஆரம்பக் கல்வி சர்க்காரின் கொள்கை. ஆனுல் இது பூர்த்தியாக வில்லை. 1932-ல் 120 லக்ஷம் குழந்தைகள் பள்ளிகளில் படித்தன. சர்வகலாசாலை மாணவர்கள் 1934-ல் 44,000 பேர் இருந்தனர்.

மாதரியக்கம் வளர்ந்து வருவதால், நகரங்களில், பெண்களின் வாழ்க்கையில் பெரிய புரட்சிகள் எற்பட்டுள்ளன. டாக்டர்கள், சைத்ரிகர்கள், சாண்டோக்கள், எழுத்தாளர், பாங்கர், உபாத்தியாயர்கள், வக்கில்கள், சினிமா நட்சத்திரங்கள் என்று எல்லாத் தொழில்களுக்கும் பெண்கள் வந்துவிட்டனர். மணவாழ்க்கை முறையிலும் பெரிய மாறுதல்கள் எற்பட்டு விட்டன.

சீனுவின் பெரிய எதிரி கொள்ளை நோய்களே. காலரா, பிளேக், மூளைவியாதி, முதலியன லக்ஷக் கணக்கில் உயிர்களைச் சாப்பிடுகின்றன. சுகாதார வசதிகளைப் பரப்ப சர்க்கார் செய்துவரும் முயற்சிகளை உள்நாட்டு, யுத்தங்களும் அந்நியப் படையெடுப்புக்களும். இயற்கையின் கூத்துக்களும் சிரம சாத்தியமாக்கி விட்டன.

சீனவில் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளோர், நம் நாட்டைப்போலவே 80%. கிராமப் புனருத்தாரண வேலையில் சர்க்கார் மிகுந்த கவனம் செலுத்திவருகின்றனர். ஆனால், வெள்ளங்கள் எல்லாவற்றையும் அழித்துவிடுகின்றன. சீன விவசாய அபிவிருத்தி முறைப்படி ஒழுங்கா யில்லாமலிருந்தது. உள்நாட்டிலேயே விளையும் பண்டங்களில் பல இறக்குமதி செய்யப்பட்டன. சீன கிருஷிகர்கள், நம் கிருஷிகர்களைப் போலவே, ஒவ்வொரு வருஷமும் பொறுமையுடன் ஏதோ பயிரொன்று அறுவடை செய்து, ஏகாதிபத்தியங்களைக் கொழுக்க வைத்து, தாங்கள்மட்டும் நித்திய தரித்திரர்களாய் வாழ்கின்றனர். வரி விதிக்கும் திட்டமும் ஏழைகளுக்குப் பிரதிகூலமே. இந்த வரிப்பளுவே அவர்களுடைய வறுமையின் கோரத்தை மிகமிக அதிகமாக்கிவிட்டது. தவிர, சர்க்காரின் செல்வாக்கு எங்கும் நிலைநாட்டப் படாமலிருந்ததால், ஆங்காங்குள்ளவர்கள், தடியெடுத்தவன் தண்டல்காரன் என்ற முறையில் தம் மனம் போனவாறு பணம் வசூலித்து வந்தனர். நிலங்களின் பாத்தியதைகளைத் தெளிவாகக் காட்டும் பதிவுகளோ சர்க்காரிடம் கிடையாது. இவையெல்லாம் கழுகுகளைப் போல் ஜனங்களிடம் பிடுங்கித் தின்று, சர்க்காருக்குச் சொற்பமாகக் கப்பம் கட்டிவரும் பெரிய நிலச்சுவான்களிடந்தா னிருக்கின்றன. 200 வருஷங்களுக்கு முன்னால் விதிக்கப்பட்ட வரியைத்தான்

அவர்கள் சர்க்காருக்குச் செலுத்துகின்றனர். ('டைம்ஸ்' 1936 ஜூன் 22உ)

## சீர்திருத்தத் திட்டங்கள்

1934-ல் 27 பலதரப்பட்ட வரிகள் ஹூபே மாகாணத்தில் ரத்துச் செய்யப்பட்டன. செகியாங் மாகாணத்தில் அநாகரிகமான 280 வரிகள் ரத்தாயின. நில பாத்தியதை வரிவிதிப்பு முதலியவற்றை நிர்ணயித்து, சிரான கணக்குகளை வைக்க முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. சென்ற சில வருஷங்களாகக் கிராமாபிவிருத்திக்கு இன்றியமையாத நாட்டுப்புற ரோடுகள் அமைக்கப்பட்டு வருகின்றன. விவசாயத்தை நவீன முறைகளில் நடத்தப் பயிற்சி அளிக்கப்படுகிறது. விவசாயப்பிரச்னைகளின் ஆராய்ச்சிக்குச் சீனுவெங்குமாக 750 ஸ்தாபனங்கள் உள்ளன. இவற்றிற்காக வருஷந்தோறும் 5 லக்ஷம் பவுன் செலவழிக்கப்படுகிறது. கூட்டுறவு முறையில் பண்டங்களை வாங்கவும் விற்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. 1931-ல், சீன கிராமங்களில் 1,576 கூட்டுறவு சபைகள் இருந்தன. 1936-ல் இவை 20,000 ஆயின. வருஷந்தோறும் 5000 புது சபைகள் விதம் நிறுவப்படுகின்றன. கிருஷிகர்கள் இவற்றை அதிகமாய்ப் பயன்படுத்திக் கொள்கின்றனர். பட்டுத்தொழில் அபிவிருத்தி, காடுகளின் புனருத்தாரணம், நீர்ப்பாசனத் திட்டங்கள் முதலியவற்றிற்காக

ஒரு மூன்றுவருஷத் திட்டம் சமீபத்தில்தான் ஆரம்பிக்கப்பட்டு நடந்துவருகிறது. கல்வியறிவு படைத்த பல சீன இளைஞர்களும் யுவதிகளும் கொஞ்சகாலமாக கிராமங்களில் குடியேறி மக்களின் முன்னேற்றத்திற்காக, தங்கள் வாழ்க்கையையே அர்ப்பணம் செய்து வருகின்றனர். இவர்களால் சீன தேசத்துக்கு நற்கதி பிறக்குமென்ற நம்பிக்கை பரவி வந்தது. சீன மக்கள் கடலோர மாகாணங்களில்தான் பெருவாரியாய் வசிக்கிறவர்கள். ஆகையால் ஸூயுவான், மங்கோலியா, திபேத், சீன துருக்கிஸ்தானம் போன்ற மாகாணங்கள், சீன சர்க்காருடன் அநேகமாய்ச் சம்பந்தமில்லாமலே இருக்க நேரிட்டது. 1932-ல் வடமேற்கு சீனுவிலிருந்து ரஷ்யாவுக்கு 135 லக்ஷம், இந்தியாவுக்கு 28 லக்ஷம் ரூபாய் பெறுமான பண்டங்கள் ஏற்றுமதியாயிருக்கையில், சீனுவுக்கு அங்கிருந்து வந்தது 7 லக்ஷந்தான். ஆகவே, அந்த மாகாணங்களிலும் சீன மக்கள் குடியேறி, நிலங்களைப் பண்படுத்தி வாழ்வதற்கு வேண்டிய வசதிகளும் செய்து தரப்படுகின்றன. சீன மக்களில் 83% வரை 17% நிலப் பரப்பில் வசிக்கின்றனர். 65% கிராமவாசிகள் சொந்த நிலமின்றித் தவிக்கின்றனர்! ஆகையால் அவர்களுக்கு நிலம் கிடைக்குமாறு செய்வதில் சர்க்கார் மிகுந்த கவனம் செலுத்தி வந்ததில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை. வடமேற்கு மாகாணங்களிலெல்லாம் நீர்ப்பாசனத்

திட்டங்கள் ஏற்பாடாகி வருகின்றன. இப்போது நடந்துவரும் யுத்தம் ஆரம்பமாகுமுன், சீன சர்க்கார் ஒரு சீன எஞ்சினீரை இந்தியாவுக்கு அனுப்பினர். செங்கற்பட்டு ஜில்லாவில் பல்லவர் காலத்தில் அமைக்கப் பட்ட சரித்திரப் பிரசித்தமான ஏரிகளடங்கிய நீர்ப் பாசனத் திட்டத்தை ஆராய்ந்து கண்டுபோக அவர் வந்திருக்கிறர். இதையெல்லாம் சீன சர்க்கார் செய்து கொண்டிருக்கையில் சீனப் பிரதேசத்திலேயே துரோகி களைக் கிளப்பிவிட்டு, அவர்களுடைய உதவியுடன் சீனுவை அடிமைப் படுத்தும் விமான நிலையங்களையும், குருப்பு விடுதிகளையும் ஜப்பானியர் ஜருராய் அமைத்து வந்திருப்பதும் குறிப்பிடத்தக்கது.

## சீனு இருப்பதா, ஒழிவதா?

1926 முதல் 1936 வரை சீன அபிவிருத்தியை மொத்தமாகப் பார்க்குமிடத்து, அது வியப்பூட்டுவ தாகத்தா னிருக்கிறது. உள்நாட்டு யுத்தம், வெளியி லிருந்து ஆக்கிரமிப்பு, பிடுங்கித் தின்னும் ஏகாதிபத் தியங்கள், வர்த்தக மந்தம், இவற்றிடையே, சீனு இவ் வளவாவது செய்ய முடிந்தது ஆச்சரியமே. ஆனுல், ரஷ்யரைப் போன்ற இலட்சிய புத்தியும் தியாக உணர்ச் சியும் இருந்திருந்தால், சீனர் இன்னும் எவ்வளவோ சாதித்திருக்கமுடியும். கட்டுப்பாடின்மை, பொதுவுடை மைக்காரர் மீது தொடுத்த அக்கிரமப்போராட்டம் இரண்

டுமே சீனுவின் அபிவிருத்திக்குப் பெரிய இடையூறு கள். இந்த நிலைமையில், சீனு பெரிய திட்டங்களை வகுத்துக்கொண்டு, அவற்றை நடத்தி வைக்கையில், ஜப்பான் கிளம்பி, சீனு இருப்பதா அல்லது ஒழிவதா என்ற பெரிய பிரச்னையைக் கிளப்பிவிட்டிருக்கிறது.

## ஸோவியத் சீனு

ரஷ்யாவில் பொதுவுடைமை ஆதிக்கம் ஸ்திரப்பட்ட வுடன், வெளிநாடுகளிலுள்ள பாமர மக்களின் போராட் டங்களில் ரஷ்யப் பொதுவுடைமைக் கக்ஷி கவனம் செலுத்த ஆரம்பித்தது. அங்கு ஸோவியத் ஆதிக்கம் ஏற்படுமுன் இருந்த ஜார் மன்னர்களின் ஆட்சி ஏகாதி பத்தியமுறையில் இருந்தது. ஸோவியத் சர்க்காருக்கு வெலேசமும் நாடுபிடிக்கும் எண்ணம் கிடையாது. ஜார் ஆக்ஷியின் கீழ் ரஷ்ய சர்க்கார் மண்ணாசையுடன் சீனுமீது திருஷ்டி வைத்தது. ஸோவியத் சர்க்கார் தங்கள் கொள் கைக்கேற்ப சமாதானத்திலேயே நாட்டமாயிருந்து வரு வது உலகப் பிரசித்தமான விஷயம். ஆனுல், கிழக் கோடியில் ராணுவ வெறிகொண்ட ஜப்பானிய ஆதிக்கம் இருந்து வருவதால், தங்கள் எல்லைப்புறத்தின் பந்தோ பஸ்தை உத்தேசித்துச் சீனுவுடன் நேசப்பான்மையில் இருந்துவர ரஷ்யா விரும்பியது இயற்கையே. சீன தேசியக் கக்ஷியாகிய கோமின்டாங் ஏகாதிபத்திய எதிர்ப்புக் கொள்கையை உறுதியுடன் நிடித்து அனுஷ்

டிக்கத் தவறியதால், உடன்படிக்கைகளின் பேராலும் ஒப்பந்தங்களின் பேராலும், சீன மக்களை மேல்நாடுகள் சுரண்டிப் பிழைப்பது வளர்ந்து வந்தது. இதன் விளைவாக பாமர மக்களிடையே அதிருப்தியும் கொந்தளிப்பும் கலக உணர்ச்சியும் வளர்ந்து வந்தன. சில வருஷங்களுக்கு முன் வரை, ஸோவியத் சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கை, பிறநாட்டுப் பாமர மக்களின் போராட்டங்களுக்கு நேரடியான உதவியளிப்பதா யிருந்தது. அதை யொட்டி சீனுவுக்கும் பொதுவுடைமைப் பிரசாரகர்கள் ஏராளமாய் வந்தனர். பொரோடின் செய்த வேலை அவர் திரும்பியதுடன் நிற்கவில்லை. வெகு சீக்கிரத்தில் சீனுவில் பொதுவுடைமை இயக்கம் பரவியது. தெற்கிலும் மத்திய சீனுவிலும் வடமேற்கு சீன மாகாணங்களிலும் இது விரைவில் பரவியது. சீன மத்திய சர்க்காரின் செல்வாக்கும் அதிகாரமும் எவ்வளவு மேலெழுந்தவாறு இருந்தன என்பது இதிலிருந்து தெரிகிறது. ரஷ்யாவிலுள்ள சபைகளைப்போன்ற ஸோவியத்துகள் இந்தப் பிரதேசங்களிலெல்லாம் கிளம்பின. சீனுவில் வளர்ந்து வந்த இந்தப் புதிய புரட்சி இயக்கத்தைப்பற்றி ரஷ்ய முதல் மந்திரி எம். மாலடோவ், 1932-ல் மாஸ்கோவில் கூடிய பொதுவுடைமைக் காங்கிரஸில் விவரித்திருக்கிறுர். ஸோவியத் சீனு என்றழைக்கப்படும் இந்தப் பிரதேசத்தின் விஸ்தீர்ணம் சுமார் 50,000 சதுரமைல் இருக்கும். சீனுவில் மொத்த முள்ளவை 638 ஜில்லாக்கள். அவற்

தில் 241 ஜில்லாக்கள் 1932-க்குள் ஸோவியத் சீனவில் சேர்ந்துவிட்டன. இவை 19 ஸோவியத் பிரதேசங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஒழுங்கானபொதுவுடைமை ஸைன்யங்கள் பதினைன்கு நிறுவப்பட்டன. கியாங்ஸு, ஹுபே, ஹுனன், ஆன்வே போன்ற மாகாணங்களிலுள்ள ஸைன்யங்களிடம் நவீன யுத்த தளவாடங்களும் விமானங்களும் கூட இருக்கின்றன. 1932-ஜுன் மாதத்தில் பொதுவுடைமை ஸைன்யத்தில் குறைந்தது 2-லக்ஷம் முதல்தரமான துருப்புகள் இருந்ததாகக் கணக்கிடப்படுகிறது. ஸோவியத் சீனவின் பிரதான லட்சியம் சீனவை எல்லா வெளிநாட்டு ஆதிக்கங்களினின்றும் விடுவிப்பதுதான். ஆகையால், எல்லா வெளிதேசங்களும் அதை யடக்க முற்பட்டதில் ஆச்சரிய மொன்றுமில்லை. சீக்கிரத்தில் சீனவெங்கும் பொதுவுடைமை ஆதிக்கம் ஏற்பட்டுவிடுமோ என்று சீன மத்திய சர்க்கார் அஞ்சினர். அந்நியர்களின் மாயவலையிலிருந்து, விடுபட முடியாமல் தத்தளித்துக்கொண்டிருந்த சியாங்-கே-ஷேக், அவர்களுடைய கோரிக்கைகளுக்குச் செவிசாய்ப்பது சுலபமாயிற்று. ஸோவியத் சீனவை ஒடுக்க வேண்டுமென்று வெளிநாடுகள் சீன சர்க்காரை பலமாய் வற்புறுத்தின. ஏற்கனவே விவரித்துள்ளபடி, சீன பஞ்சத்திலும் பிணியிலும் மூழ்கிக் கிடந்த போதிலும், பொதுவுடைமை இயக்கத்தை வேட்டையாடுவதே தன் முக்கியமான வேலை என்று சியாங்-கே-ஷேக் கருதினர்.

வெளிநாட்டு ஆதிக்கத்தை வேரறுக்கப் பொதுவுடைமைக்காரர் ஒத்துழைக்க முன்வந்தும், சியாங்-கே-ஷேக் அதை ஏற்கவில்லை. ஜெர்மனியிலிருந்து வரவழைக்கப்பட்ட ராணுவ நிபுணர்கள், அமெரிக்காவும், பிரிட்டனும், ஜப்பானும் கொடுத்த கடன்கள் முதலியவற்றைக் கொண்டு ஸோவியத் சீனு மீது அடுத்தடுத்துப் போர் தொடுத்தனர். சீனுவைத் தாங்கள் இறுதியாகப் பங்கிட்டுக் கொள்வதற்கு உறுதியான இடையூறு ஸோவியத் சீனுதான் என்று ஐரோப்பிய, அமெரிக்க, ஜப்பானிய ஏகாதிபத்தியங்கள், சரித்திர திருஷ்டியுடன் உணர்ந்து கொண்டதால், அதை அழித்து விடுவதற்கு எந்தப் பிரயத்தனத்தையும் பெரிதென அவர்கள் மதிக்கவில்லை. சீன சர்க்கார் ஸோவியத் சீனு மீது ஏழுதடவை படையெடுத்தனர். ஆனுல், ஒவ்வொரு தடவையும் சீன சர்க்காருக்குத் தோல்வியே கிடைத்தது. இதற்குக் காரணம் ஸோவியத் சீனுவிலுள்ள கிருஷிகர்களெல்லாம் சீன மத்திய சர்க்கார் துருப்புகளை எதிர்த்துப் போரிட முன் வந்ததுதான். 1927-ல் மட்டும், சீன சர்க்கார், தங்களுடைய விரோதிகளெனக் கருதப்பட்ட பத்து லக்ஷம் சீன மக்களை ஸம்ஹரித்தது குறிப்பிடத் தக்கது. சீனச் சிறைகளில் பொதுவுடைமைக்காரர் என்னென்ன கோரமான சித்திரவதைக்கெல்லாம் உள்ளாக்கப்பட்டனர் என்பதைச் சமீபத்தில் அங்நாட்டுக்குச் சென்று வந்த பிரிட்டிஷ் தொழிற் கக்ஷி மெம்பர் 'லார்ட் மார்லி

என்பவர் விவரித்திருக்கிறார். கோமிண்டாங் செல்வாக்கு எவ்வளவுதூரம் கனிந்துபோய் விட்டது என்பதை லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகையும் ஒப்புக்கொண்டிருக்கிறது. சீன சர்க்காரிடமுள்ள பிரதேசங்களைவிட, ஸோவியத் சீனுவின் நிர்வாகத்தில் லஞ்ச ஊழல்கள் மிகவும் குறைவாயிருப்பதாக அப்பத்திரிகையே ஒப்புக் கொண்டிருக்கிறது.

இத்தகைய சீன ஸோவியத் குடியாசை நசுக்குவதென்பது சாத்தியமான விஷயமாயில்லை. 1931-1932ல் சீன-ஜப்பானியத் தகராறைப்பற்றி விசாரிக்க சங்கம் நியமித்த லிட்டன் கமிஷன்கூட கிழக் கோடியில் பொதுவுடைமைப் போராட்டத்தைச் சமாளிக்கவேண்டியதன் அத்தியாவசியத்தை முக்கியமாய் வற்புறுத்தியது.

லிட்டன் கமிஷன் அறிக்கையிலிருந்து எடுக்கப்பட்டுள்ள கிழ்க்கண்ட பாராக்கள் நிலைமையை நன்கு விளக்கும்:

"பொதுவுடைமைச் செல்வாக்கின் கீழிருந்துவரும் ஜில்லாக்களில் மீண்டும் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்துவதென்று சீன தேசிய சர்க்கார் உறுதி கொண்டிருக்கின்றனர். ஆனல், அதன் ராணுவ இயக்கங்கள் வெற்றி பெருமைக்குக் காரணம், வேண்டிய பணம் இல்லாமையும், போக்கு வரத்து வசதிகள் இல்லாதிருப்பதுமே. ஆகையால், சீனுவில் பொதுவுடைமைப் பிரச்னை தேசியப் புனருத்தாரணம் என்ற பெரிய பிரச்னையுடன் இணைக்கப்பட்டிருக்கிறது.

“சீனாவில் இப்போது ஸ்திரமற்ற நிலைமை இருந்து வருவது, ஜப்பானுடன் சீனா ஸ்நேகமாயிருப்பதற்கு இடையூறாயிருக்கிறது. உலகிற்கே இது கவலையைக் கொடுத்து வருகிறது. கீழ்க்கோடியில் சமாதானத்தை நிலை நாட்டுவது ஒரு ஸர்வதேச விவகாரம். சீனாவில் பலம் பொருந்திய ஒரு மத்திய சர்க்காரில்லாமல் இவை சாத்தியமில்லை. ஆகையால் சீனாவின் புனர் நிர்மாணத்துக்கு தாற்காலீகமாக ஸர்வ தேசிய ஒத்துழைப்பு அளிக்கப்பட வேண்டும். சீனாமீது பலமான நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமென்று ஜப்பானிய இளைஞர் விடாமல் கூச்சலிட்டு வருகின்றனர். தற்போதைய சீனாவின் ராஜ்ய அபிவிருத்தியைக் கண்டு ஜப்பானுக்குக் கவலை ஏற்பட்டிருக்கிறது. அதன் எதிர்காலம் எப்படியிருக்குமோ என்று அவர்கள் அஞ்சுகின்றனர். சீனாவில் அந்த அபிவிருத்தியைத் தளைப்படுத்தி ஜப்பானின் பொருளாதார க்ஷேமலாபங்களுக்கும் ராணுவ வசதிகளுக்கும் உத்தரவாதம் பெறுவதற்காகத்தான், ஜப்பான் சீனாமீது நடவடிக்கை எடுத்திருக்கிறது.

“சீனாவில் ஏற்பட்டுள்ள தேசிய உணர்ச்சியை ஜப்பான் அங்கீகரித்து, அனுதாபத்துடன் அதை வரவேற்கக்கூடும். சீனாவுடன் ஸ்நேகம் செய்து கொள்ளக்கூடும். வேறிடங்களிலிருந்து சீனா உதவியைக் கோரவில்லை என்று தெரிந்தால், ஜப்பான் சீனாவுக்கு உதவி யளிக்கவுங்கூடும். ராஜ்ய பொருளாதார விஷயங்களில் முக்கியமான எல்லா வல்லரசுகளின் ஒத்துழைப்பும் சீனாவுக்குத் தேவை. புதிதாய் விழித்தெழுந்துள்ள அதன் தேசியத்தின் இதர அபிலாஷைகள் உள்நாட்

டின் புனர் நிர்மாணத்துக்கு அடுத்தபடியாகத்தான் கவனிக்கப்பட வேண்டும்."

சீனுவுக்கு உதவியளிப்பதுபற்றி சிபார்சு செய்ய டாக்டர் ராஜ்ஷமான் என்பவரைச் சங்கம் நான்கிங்குக்கு அனுப்பியது. சீன ஸோவியத் ஆதிக்கத்தை முறியடிக்க ராணுவ ரயில்வேக்களை அமைப்பதற்கு வல்லரசுகள் கடன் கொடுத்தன. அமெரிக்கா மட்டும் 5 கோடி டாலர் கடன் கொடுத்தது. சீனுவுக்கு ஒரு ஸர்வதேச கடன் கொடுக்கப்படவேண்டும் என்று ஏற்பாடாயிற்று. அதைக் கொடுக்க பிரிட்டன், அமெரிக்கா, ஜப்பான் மூன்றும் பலமாய்ப் போட்டி போட்டன. இதற்காக ஸென்ஸர் பிரெடரிக் லீத்-ராஸ் என்பவரைப் பிரிட்டன் அங்கு அனுப்பியது. அவருடைய சிபார்சுகளின் படி உதவியும் அளிக்கப்படுகிறது.

இதற்கிடையே கோமின்டாங் கக்ஷியினரின் உறுதியின்மை மோசமாய்க் கொண்டு வந்தது. சீன சர்க்கார் ஸோவியத் சீனுவுடன் உடன்படிக்கை செய்து கொண்டு தேசத்தின் எதிரிகளுக்கு ஐக்கிய முன்னணியைக் காண்பிப்பதைவிடுத்து, மாற்றானிடம் மீண்டும் உறவாடினர்; ஜப்பானுடன் ஒருவிதமான சமாஸம் செய்து கொள்வது நல்லதென்று கூட நினைத்தனர். அதற்குக் காரணம் கோமின்டாங் கக்ஷியின் அப்போதைய நிலைமையும், ஜப்பானிய ராஜதந்திரத்தின் உத்தேசங்களை அவர்கள் நன்கு உணராததுமே.

## ஜப்பானுடன் சமரச முயற்சி

1934-ல் ஜப்பான் சம்பந்தமாக சீனு சமாஸ மனப்பான்மை காட்டியது என்பதை முன்னமேயே விளக்கியுள்ளோம். மஞ்சுகோ தன் ஏகபோகம் தான் என்று ஜப்பான் செய்த பிரகடனத்தை சீனு ஒரு தினுசில் அங்கீகரித்துக் கொண்டது. மஞ்சுகோ ஜப்பானுடையது தான் என்பதைக் காரியாம்சத்தில் இதர வல்லரசுகளும் ஒப்புக்கொண்டாய்விட்டது. அவற்றின் கையாளாயிருந்த சியாங்-கே-ஷேக் வேறு வழியில் செல்லத் தைரியம் பெற்றிருக்கவில்லை.

சீனு முழுவதுமே ஜப்பானின் பாதுகாப்புக்கு உட்பட்டதென்று 1934 எப்ரல் 17உ யன்று ஜப்பான் ப்ரகடனம் செய்தது. இதை ஆட்சேபித்து கோமிண்டாங் சர்க்கார் எந்த மறுப்பையும் உத்தியோக முறையில் வெளியிடவில்லை.

1934 ஜூலை 2உ யன்று சின சர்க்கார் தங்கள் சுங்க வரி விகிதங்களை மாற்றி யமைத்தனர். ஜப்பானிய சாமான்கள்மீது விதிக்கப்பட்டுவந்த இறக்குமதி வரி, இதன் மூலம் 8 முதல் 40% வரை குறைக்கப்பட்டது. மஞ்சூரியாவில் பிரிட்டன் போட்டிருக்கும் மூலதனத்துக்கு ஜப்பான் உத்தரவாதமளித்துவிடவே, பிரிட்டனும் ஜப்பானும் கூடிக் குலாவின. ஆகையால், பிரிட்டிஷ் இறக்குமதிகள் மீதும் வரிகள் குறைக்கப்பட்டன. அமெ

ரிக்க சாமான்கள் மட்டில் அதிகமான விகிதவரியைச் செலுத்தவேண்டி யேற்பட்டது.

1934 ஜுலையில் ஜப்பானின் கோரிக்கைப்படி பெரிய மதிலின் சமீபத்தில், மஞ்சுகோ எல்லையை அடுத்தாற்போல் 20 சுங்கச் சாவடிகளைச் சீனு அமைத்தது. இதன் மூலம் மஞ்சூரியா, தன் ஆதிக்கத்துக்குப் புறம்பானது என்பதைச் சீனு ஒப்புக்கொண்டாற் போலாயிற்று.

பெரிய மதிலுக்கு வடபுறம் கொண்டு போகும் சாமான்களுக்கும் ராணுவ சப்ளைகளுக்கும் வரி விதிப்பதில்லை என்று சீன சர்க்கார் ஏற்றுக்கொண்டிருப்பதாக 1935 ஜனவரி 12 உ 'மஞ்சூரியன் ரெவ்யூ' என்ற ஜப்பானியப் பத்திரிகை தெரிவித்தது. இதன் மூலம் ஜப்பானிய சாமான்கள் ராணுவ சப்ளைகள் என்ற பெயரால் வடசீனுவில் குவிக்கப்படுவது சுலபமாக்கப்பட்டது.

ஜப்பானிய ஆக்ரமிப்பைக் கண்டிக்கும் முறையில் பீகிங்-முக்டென் ரயில்வே சர்விஸை சீன சர்க்கார் 1932 முதல் நிறுத்திவிட்டிருந்தனர். ஆனால் 1934 ஜுலை 1 உ முதல் அது மீண்டும் அனுமதிக்கப்பட்டது. வெகு சீக்கிரத்தில் ஜப்பானியத் துருப்புகள் பீகிங்-முக்டென் ரயில்வேயில், பெரிய மதிலை அடுத்துள்ள பாகத்தைக் கைப்பற்றிவிட்டன. இதன் மூலம் பீகிங்-ஹாங்கோ, பீகிங்-ஸுயுவான், டீன்ட்ஸின்-பூகோ ரயில்வே போக்குவரத்து ஜப்பானுக்கு மிகவும் எளிதாயிற்று.

சீனவிலிருந்து மஞ்சூரியாவுக்கு 1000 பேர்கள் சென்ற ஒரு ரயில்வேயை 1935 மார்ச் 14-உ யன்று ஜப்பான் தடுத்துவிட்டது. ஆனல். மஞ்சூரியாவிலிருந்து ரயில்கள் வருவதைச் சீன தடுக்கவில்லை.

1935 ஜனவரி 10 உ யன்று மஞ்சூரியா சம்பந்தமாக, ஜப்பானுக்கும் சீன சர்க்காருக்கும் தபால் போக்குவரத்தை மீண்டும் ஏற்படுத்துவது பற்றி இரகசியமான ஒப்பந்தம் ஏற்பட்டது.

1934-ல் டீண்ட்ஸினில் இறக்குமதியான ஜப்பானிய சாமான்கள் 1931-ல் இறக்குமதியானவற்றைப் போல் 4 மடங்கு இருக்கும் என்று சீன சர்க்கார் அறிக்கையே கூறுகிறது. அதாவது வடசீன மார்க்கெட்டில் 70 முதல் 80% வரை ஜப்பானுடையதாகிவிட்டது. இதைத் தவிர, 3 கோடி டாலர் பெறுமான சாமான்களைக் கள்ளத்தனமாய் ஜப்பான் இறக்குமதி செய்தது. இதை அடக்க சீனசர்க்கார் என்ன முயற்சித்துப் பார்த்தபோதிலும், ஜப்பான் கொஞ்சங்கூட இடங் கொடுக்கவில்லை. சீன ஸோவியத்துகள்மீது போர் நடத்த 20கோடி டாலர் கொடுப்பதாக ஜப்பான் வாக்களித்தது.

1934 வரை 320 கோடி டாலர் மூலதனம் வெளிநாடுகளிலிருந்து சீனவுக்குள் வந்தது. சீனவில் மொத்தம் பிரிட்டிஷ், அமெரிக்க, ஜப்பானிய மூலதனம் 4,34 கோடி டாலர். 1914-ல் இத்தொகை 1,61 கோடியாகத்தான் இருந்தது. 1934-ல் பிரிட்டிஷ் மூலதனம் 116 கோடி

| | | |
|---|---|---|
| 1934-ல் | ஜப்பானிய மூலதனம் | 254 கோடி |
| | அமெரிக்க ,, | 34 ,, |

இவை தவிர, சென்ற சில வருஷங்களாகத் தம் செல்வாக்கை அதிகரித்துக்கொள்ள ஏகாதிபத்தியங்கள் சீனுவுக்கு ஏராளமான கடனைக் கொடுத்திருக்கின்றன. 1933-ல் 5 கோடி டாலர் பெறுமான பருத்தி ஜவுளியையும், கோதுமையையும் அமெரிக்கா சீனுவுக்குக் கடன் கொடுத்தது. இத்தாலி அடுத்த வருஷம் 4 கோடி டாலர் கொடுத்தது. 2 கோடி டாலருக்கு மேல் இத்தாலியிலும் ஜெர்மனியிலும் யுத்த தளவாடங்களை வாங்குவதற்காகச் செலவழிக்கப்பட்டது என்று அமெரிக்க ஆயுத விற்பனை விசாரணைக் கமிட்டியின் அறிக்கையிலிருந்து தெரிகிறது. இத்தாலியக் கடன் பூராவும் ஸோவியத் சீனுவுக்கு எதிராகத்தான் செலவழிக்கப்பட்டது. பிறகு 5 கோடி பவுனைக் கடன் வாங்கவேண்டுமென்று அமெரிக்காவுடனும், பிரிட்டனுடனும், இத்தாலியுடனும் சீனு தனித்தனியாக பேரம் நடத்திப்பார்த்தது. கடைசியாக அமெரிக்கா, பிரான்ஸ், ஜப்பான் மூன்றுடனும் சேர்ந்து கடன் கொடுக்கத் தயார் என்று 1935 மார்ச் ஆரம்பத்தில் பிரிட்டிஷ் சர்க்கார் அறிவித்தனர். ஆனால், இதுவும் நிறைவேறவில்லை. அமெரிக்கா அசிரத்தை காட்டியதும், ஜப்பான் எதிர்த்ததுமே இதற்குக்காரணம். கடைசியாக வேறுவழியின்றி சீன சர்க்கார் பகிரங்க மார்க்கெட்டில் 100 கோடி டாலர் கடன் வாங்குவதென்று தீர்மானித்தனர்.

## ஜப்பானின் கோபம்

இதற்குள் கோமின்டாங் கக்ஷி மீது மக்களுக்கு ஆக்கிரம் அதிகரித்தது. வடக்கே, மஞ்சூரியாவுக்குத் தென்புறமுள்ள சின மாகாணங்கள் மீது ஜப்பான் திருஷ்டி வைக்க ஆரம்பித்தது. வடமேற்கு சீனுவில் முக்கியமான மாறுதல்கள் ஏற்பட்டன. ரஷ்யாவை அடுத்தாற்போலுள்ள வெளிப்புற மங்கோலியா என்ற வடகோடி சின மாகாணம் (வெகு காலத்துக்கு முன்னமேயே சுதந்திரம் கொண்டாடிய பிரதேசம்) ஸோவியத் குடியரசு நாடாய்விட்டது. அதைச் சின மத்திய சர்க்காரும் ஆட்சேபிக்கவில்லை. பிறகு, ஸோவியத் சர்க்கார், மங்கோலிய சர்க்காருடன் அனுக்ரமிப்பு ஒப்பந்தத்தையும், பரஸ்பர உதவி ஒப்பந்தத்தையும் செய்து கொண்டனர். மங்கோலியாவை யாராவது ஆக்ரமித்தால் ஆக்ரமிக்கும் நாட்டைத் தாக்குவதாக இந்த உடன்படிக்கையின் மூலம் ரஷ்யா தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டது. வெளி மங்கோலியாவை அடுத்துள்ள உட்புற மங்கோலியாவுடன் ஜப்பான் இடைவிடாமல் பேரம் நடத்தி வந்தது. சினு மீது மீண்டும் பாயப் பக்குவமான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. இந்த சமயத்தில்தான், 1935-ல் வடசினுவில் ஹோபெய்-சாஹார் மாகாணங்களில் ஜப்பான் ஏராளமான பணத்தை வாரியிறைத்தது. அங்கு தன் கையாட்

களை ஏராளமாகச் சேர்த்தது. கள்ளத்தனமாய் வர்த்தகப் பொருட்களை அங்குகொண்டுபோய் அந்தத் துரோகிகளுக்குக் கொள்ளை லாபம் கொடுத்தது. அவர்களைக் கொண்டு, அங்கு ஒரு 'சுதந்திர இயக்கத்தை'க் கிண்டிவிட்டது. அதன் விளைவாக சீன சர்க்கார், அந்த மாகாணங்களுக்கு ஒரு ராஜீயக் கவுன்சிலை நியமித்தனர். அந்த ராஜீயக் கவுன்சிலுக்கு ஓரளவுக்கு சுதந்திரமுண்டு. ஆயினும் அது சீனுவின் ஆதிபத்ய அதிகாரத்துக்கு உட்பட்டதே. இதற்கு சீன மத்ய சர்க்கார் இணங்கியதால் தான் இன்று அந்தப் பிரதேசம் சுலபமாய் ஜப்பானியர் வசமாய்விட்டது என்பதைப்பற்றி சந்தேகமில்லை. ராஜீயக் கவுன்சிலுடன் ஜப்பான் பிறகு பேரம் நடத்தியது. அதுவரை, பொதுவுடைமை எதிர்ப்புப் போராட்டத்தை வெளிநாடுகள் நேராக நடத்தியதில்லை. ஜப்பான் அதற்கும் துணிந்துவிட்டது. மேல்நாடுகளாகிய ஜெர்மனியும், இத்தாலியும் பொதுவுடைமையை ஒழிப்பது தங்கள் தர்மம் என்று கொக்கரிக்கின்றன அல்லவா? சீனு சம்பந்தமாக ஜப்பானும் அப்படியேதான் நினைத்தது. ஜப்பானிய எதிர்ப்பு இயக்கத்தை மும்முரமாய் நடத்துகிறவர்கள் சீன ஸோவியத் அதிகாரிகள்தானுகையால், ஹோபெய்-சாஹார் ராஜீயக் கவுன்சிலுடன் ஜப்பான் ஒரு பொதுவுடைமை-எதிர்ப்பு ஒப்பந்தம் செய்துகொண்டது. இதன்படி, பொதுவுடைமையை எதிர்ப்பதில், அந்த ராஜீயக் கவுன்சிலுடன் ஒத்துழைப்

பதாக ஜப்பான் ஏற்றுக்கொண்டது. ஸுயுவான், ஷான்ஸி ஆகிய மாகாணங்களின் எல்லே யருகாமையிலும், ஹோபெய்-சாஹாரில் பல முக்கியமான இடங்களிலும் இதற்காகத் துருப்புகளைக் கொண்டுவரத் தனக்கு உரிமை உண்டு என்பதை ஜப்பான் நிர்த்தாரணம் செய்துகொண்டது. சீனுவை விழுங்குவதற்கு முன்னேற்பாடாக அங்கு துருப்புகளைக் குவிப்பதற்காகவே ஜப்பான் இந்த உரிமையைப் பெற்றது என்பது உலகமறிந்ததே. அப்பொழுதும் சீன சர்க்கார் பலமான நடவடிக்கை எடுக்கவில்லை. இந்த அதிக்கிரமம் இழைக்கப்பட்டு வருகையில், சீனு சங்கத்துக்கு மனுச் செய்துகொள்ளக் கூட இல்லை. அப்பொழுதுதான், சங்கம் அபிசீனியா விஷயத்தில் செய்துவிந்த துரோகம் சீனுவுக்கு வெட்ட வெளிச்சமாய்ப் புலப்பட்டது. இந்த நிலைமையில், ஜப்பானுக்கு மேலும் மேலும் விட்டுக்கொடுத்துப் பின்வாங்குவதால் ஏற்படக்கூடிய பேராபத்தைச் சீன மக்கள் நன்கு உணர ஆரம்பித்தனர். பிரிட்டனைக்கூட நம்பமுடியாது என்பதையும் அவர்கள் அப்பொழுது சந்தேகமறத் தெரிந்து கொண்டனர். ஜப்பானியரை எதிர்த்துப் பெரிய பகிஷ்கார இயக்கம் அநேகமாய் நீடித்து நடந்து வந்ததென்றே கூறலாம். சில மாதங்களுக்குப் பின், தெற்கு சீனுவில், தீவிரக் கொள்கைகளை அவலம்பிக்கும் சீன மாகாண அதிகாரிகள், சீன ஸோவியத்துகளின் பின்பலத்துடன் கூடிய ஒரு பெரிய கிளர்ச்சியை ஆரம்பித்தனர். ஜப்பானை

எதிர்த்து சீன மத்திய சர்க்கார் போரிட வேண்டு மென்று வற்புறுத்தினர். ஒரு குறிப்பிட்ட தேதியை வாய்தாவாக வைத்து, அதற்குள் சீன சர்க்கார் நடவடிக்கை யெடுக்காவிடில், தாங்கள் வடக்கு நோக்கி முன்னேறப் போவதாக எச்சரிக்கை செய்தனர். எச்சரிக்கை கவனிக்கப்படவில்லை. ஆகவே, 'தென்புற மாகாணத் துருப்புகள் வடக்கு நோக்கி முன்னேறின. சீன மத்திய சர்க்கார் மீண்டும் அவர்களை எதிர்த்துப் பார்த்தனர். அதற்குள் ஏற்பட்ட பல சந்தர்ப்பங்களின் விளைவாக இந்த உள்நாட்டு யுத்தம் தீர்ந்து போய்விட்டது.

## தேசிய ஐக்கியம்

ஸோவியத் ருஷ்யாவை ஆளும் பொதுவுடைமைக் கக்ஷியின் வெளிநாட்டுக் கொள்கையில் இத்தருணத்தில் முக்கியமான ஒரு மாறுதல் ஏற்பட்டது. உலகத்தின் பல பாகங்களில், சுயநலக்காரர்களான பணமுட்டைகளும் முதலாளிகளும், பாஸிஸ்ட் இயக்கங்களைப் பயங்கரமாய்ப் பரப்பி வந்ததுதான் இந்த மாறுதலுக்குக் காரணம். சுதந்திர நாடுகளில், பாஸிஸத்தை எதிர்க்க, முற்போக்குள்ள இதர கக்ஷிகளுடன் ஒத்துழைத்து, ஐக்கிய முன்னணியை நிறுவ வேண்டும் என்பது இதன் முதற்பகுதி. ஏகாதிபத்தியங்களின் அடிமைகளாயிருந்துவரும் இந்தியா, சீனு போன்ற நாடுகளில், தேசிய விடுதலைக்காக உழைக்கும் தேசியக் கக்ஷிகளுடன் பொதுவுடைமைக்காரர் ஒத்துழைக்க வேண்டுமென்பது

இரண்டாவது பகுதி. இதை யனுசரித்து, சீனவிலுள்ள பொதுவுடைமைக்காரரும், சீனவை அந்நிய ஆதிக்கத்தின் தூங்குப் பிடியிலிருந்து விடுவிப்பதற்கு மிகுந்த உற்சாகத்துடன் உழைக்கலாயினர். ஆகவே, ஜனங்களிடையே அவர்களுடைய செல்வாக்கு மிகவும் வளரலாயிற்று. பல வருஷங்களுக்கு முன் சியாங்-கே-ஷேக் பொதுவுடைமைக்காரரையும் சேர்ப்பதாக நடித்து, பிறகு அவர்களுடைய இயக்கத்தை உடைத்துப் பல பொதுவுடைமைத் தலைவர்களைப் பலியாக்கினர். இப்பொழுதோ சியாங்-கே-ஷேக்கின் செல்வாக்கை விட, சீன ஸோவியத்துகளின் செல்வாக்குத்தான் ஜனங்களிடையே அதிகமாயிருந்தது. ஆனால், வெளிநாடுகள் சியாங்-கே-ஷேக்கைத்தான் அங்கீகரித்து வந்ததாலும், தேசத்தின் நன்மையை உத்தேசித்தும், ஸோவியத் சீன அதிகாரிகள் சீன மத்ய சர்க்காருக்கு எதிர்ப் பிரசாரம் செய்வதை நிறுத்தினர். இதற்கிடையே, சியாங்-கே-ஷேக்கும் மாகாணம் மாகாணமாகச் சென்று, தேசிய இயக்கத்தை ஐக்கியப்படுத்தலானர். இவ்வாறு அவர் வடமேற்கு சீனவிலுள்ள ஷென்ஸி மாகாணத்துக்குச் சென்றிருக்கையில், சாங்-ஸு-லியாங் தலைமையின் கீழ், பொதுவுடைமைக்காரர்கள் அவரைக் கைது செய்துவிட்டனர். ஜப்பானிய ஆக்ரமிப்புக்கு இடமளிப்பதில்லை என்றும், ஜப்பானை எதிர்த்துப் போரிடுவதாக வாக்களிக்க வேண்டுமென்றும் அப்படிச் செய்தாலொழிய அவரை விடுவிப்ப

தில்லையென்றும் பிடிவாதம் சாதித்தனர். சீன மத்திய சர்க்காரும் துருப்புகளை அனுப்பினர். ஒன்றிரண்டு போராட்டங்கள்கூட நடைபெற்றன. ஆனால், இருதரப்பினருக்கும் வேண்டியவரான ஸ்ரீ டோனல்ட் என்ற ஆஸ்ட்ரேலியர் சமரஸம் செய்ததன் பேரில், சியாங் விடுவிக்கப்பட்டார். சியாங்கைக் கைது செய்த தலைவரும் அவருடன்கூட நான்கிங் திரும்பிவந்து ஒத்துழைத்தார். அவருக்கு ராணுவக் கோர்ட்டார் விதித்த தண்டனையை சியாங் பிறகு மன்னித்துவிட்டார்.

## சியாங் கண்விழிப்பு

ஆனால், இந்தச் சம்பவங்களின் விளைவாக ஒரு விஷயம் சியாங் - கே - ஷேக்குக்கு நன்கு புலப்பட்டது. எல்லா ஏகாதிபத்தியங்களையும் சீனுவிலிருந்து வெளியேற்றினாலன்றி சீனு உய்ய முடியாது. அவற்றில் மிகவும் ஆபத்தானது, எந்த அநீதிக்கும் அதிக்ரமத்துக்கும் அஞ்சாத ஜப்பானிய ஏகாதிபத்தியம். ஆகையால் அதன் கொட்டத்தை அடக்க வேண்டியது முதற் கடமை. ஏகாதிபத்தியங்களுடன் சமரஸம் செய்வது சாத்தியமில்லை என்பது சரித்திர பூர்வமான உண்மை. அது மட்டுமல்ல, இந்தப் போராட்டத்தை நடத்துவதில் உண்மையான ஒத்துழைப்பையும் உதவியையும் பொதுவுடைமைக்காரர்கள் அளிக்க முடியும். ஆகையால் அந்நியர்களின் பேச்சைக் கேட்டு அவர்களை

ஒடுக்க முயற்சித்ததெல்லாம் தவறு என்பது சியாங்-கே-ஷேக்குக்குத் தெரிந்தது. ஆகையால், அவர் மிகுந்த தைரியத்துடனும் உற்சாகத்துடனும் தேசிய ஒற்றுமையில் கவனம் செலுத்தினர். ஜப்பான் சகல விதங்களிலும் சீனுவைவிட பலம் பொருந்தியது; ஆகையால் ஜப்பானே வலுச்சண்டைக்கு அழைக்க சீனு தயாராயில்லை. வெளிநாடுகளையும் நம்புவதற்கில்லை என்பதை அபிசீனிய யுத்தமும், ஸ்பெயினில் நடந்துவரும் போராட்டமும் நிரூபித்துவிட்டன. ஆகையால் இனி ஜப்பானிய ஆக்ரமிப்புக்கு இடங்கொடுப்பதில்லை என்ற உறுதியுடன் சீன சர்க்கார் தேசிய ஐக்கியத்தைப் பலப்படுத்துவதிலும், தற்காப்பு எற்பாடுகளைச் செம்மையாக்குவதிலும் மட்டில் உஷாராய்க் கவனம் செலுத்தி வந்தனர்.

சில மாதங்களுக்கு முன் ஜப்பானியப் பொதுத் தேர்தலில் ராஜீயக் கக்ஷிகளுக்கு மிக்க மெஜாரிட்டி கிடைத்த போதிலும், அவை மந்திரி சபையை அமைக்க ராணுவம் சம்மதிக்கவில்லை. வடசீனுவை விழுங்கி, சமயம் பார்த்து ரஷ்யாவைத் தாக்க ஜப்பானிய ராணுவம் எற்கனவே பிளான் வகுத்திருந்தது. அதை நிறைவேற்றி வைப்பதற்கு அனுசரணையா யிருப்பதற்காக வேண்டி, ராணுவத்துக்குப் பிடித்தமான இளவரசர் கோனேய் என்பவரை முதன் மந்திரியாகச் சக்ரவர்த்தி நியமித்தார். பிறகு நிலைமை தெரிந்தவுடன், மற்ற ராஜீயக் கக்ஷிகளும் மந்திரி சபையை முற்றிலும் ஆதரித்

தன. ஜப்பான் வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்து முடித்து, ஏராளமான துருப்புகளையும் வட சீனவுக்கு அனுப்பிய பிறகுதான், வேண்டுமென்றே, இப்போதைய யுத்தத்துக்கு மூலகாரணமென்று கூறப் படும் லுகோசியோ ராணுவ ஒத்திகை சம்பவத்தைச் சிருஷ்டித்தது.

---

## ஐந்தாவது அத்தியாயம்

## ஜப்பான் வளர்ந்த கதை

ஜப்பானியச் சக்ரவர்த்தியின் பெயர் மிகாடோ. அவர் கடவுளின் பாரம்பரை என்பது ஜப்பானியரின் நம் பிக்கை. அவரே தான் ஜப்பானில் இருந்துவரும் மதங் களின் ரக்ஷகர். அரசியல் விவகாரங்களிலும் அவருக் குத்தான் ஸர்வாதிகாரம் உண்டு. அவர் தம்முடைய அதிகாரத்தைப் பிறருக்கு விட்டுக் கொடுத்த போதிலும், அவருடைய பெயரால்தான் துரைத்தனம் நடைபெறு கிறது. ஜப்பானில் பல புரட்சிகள் நடந்த போதிலும், பல உள்நாட்டு யுத்தங்கள் நடந்த போதிலும், அவை எதுவும் சக்ரவர்த்தியையோ அல்லது அவருடைய அதி காரத்தையோ எக்காலத்திலும் பாதித்ததே இல்லை. ராஜ்யம் ஜில்லாக்களாகப் பிரிக்கப்பட்டு நிர்வாகம் நடந்து வருகிறது. இந்த ஜில்லா அதிகாரியின் பெயர்

டாய்ம்யோ. அத்தகைய அதிகாரிகள் 300 பேர்களுக்கு மேல் இருக்கின்றனர். ராஜ்யத்துக்கு வேண்டிய துருப்புகளையும் பணத்தையும் இதர உதவிகளையும் அளிக்க வேண்டிய பொறுப்பு அவர்களுடையதுதான். ஒவ்வொரு டாய்ம்யோவின் கீழும், தேசத்தின் தற்காப்பு வேலையைச் செய்யும் ஒரு கூட்டம் உண்டு. இவர்களுக்கு ஸாமுராய் என்று பெயர். இவர்கள்தான் நம் நாட்டில் இருந்த க்ஷத்ரிய பரம்பரையைப் போன்றவர்கள். இவர்களுடைய பழக்க வழக்கங்களும் உரிமைகளும் மிகவும் பூர்விகமானவை. இவர்கள் எல்லோரும் இரண்டு பட்டாக் கத்திகளைத் தாங்கிச் செல்லும் உரிமைகளைப் பெற்றிருந்தனர். எப்பொழுதுமே இவர்கள் கர்வம் மிகுந்தவர்கள், அகங்காரம் நிறைந்தவர்கள். ஆனால், இவர்கள் தான் முதன் முதலாக மேல்நாடுகளுக்குச் சென்று அவர்களிடமிருந்து பல விஷயங்களைக் கற்றுவந்து ஜப்பானை இப்போதைய நிலைமைக்குக் கொண்டுவர உதவியாயிருந்தனர்.

## ராணுவ ஆதிக்கத்தின் சரித்திரம்

பல ஜில்லாக்களைச் சேர்த்து மாகாணங்களாக்கி, ஒவ்வொன்றுக்கும் ஒரு கவர்னர் இருந்து வந்தார். இவர்கள் கி. பி. 1150-வரை சக்ரவர்த்தியிடமிருந்து நேரிடையாக உத்தரவுகளைப் பெற்றுவந்தனர். ஆனால், 12-வது நூற்றாண்டில் ஒரு முக்கியமான மாறுதல் ஏற்பட்டது.

யோரிடோமோ என்ற டாய்ம்யோ பல ஸாமுராய்களைத் துணை சேர்த்துக்கொண்டு கடலிலும், தரையிலும் சக்ர வர்த்தியின் ஸைன்யங்களை எதிர்த்துப் போரிட்டு அதி காரத்தைத் தன் வசமாக்கிக் கொண்டார். சக்ரவர்த் தியை அவர் க்யோடோ என்ற விடத்தில் பேட்டி கண் டார். அவர், மதகுருக்களின் மாயவலையில் சிக்குண்டு ஆண்மையற்றுக் கிடப்பதைக் கண்டு, யோகஹாமாவுக்கு அருகில் காமகூரா என்றவிடத்தில் தம்முடைய தலைமை ஸ்தாபனத்தை அமைத்துக் கொண்டார். ஒவ்வொரு மாகாணத்துக்கும் அவர் ஒரு ராணுவ கவர்னரை அனுப் பினர். பழைய கவர்னர்களின் அதிகாரங்களெல்லாம் காலடைவில் இந்த ராணுவ கவர்னர்களின் கைகளுக்கு வந்துவிட்டது. இன்று ஜப்பானில் தலைவிரித்தாடும் ராணுவ ஆதிக்கம், 12-வது நூற்றாண்டில் இந்தச் சமயத் தில்தான் ஆரம்பமாயிற்று. சில வருஷங்களுக்குப் பின் சக்ரவர்த்தி அவருக்கு ஸேயி-யி-டாய்-ஷோகன் என்ற மகோந்நதமான ராணுவப் பட்டத்தை வழங்கினர். 1868-வரை ஜப்பானை உண்மையிலேயே ஆண்டுவந்த வர்களுக்கு ஷோகன் என்ற இந்தப் பட்டந்தான் இருந்து வந்தது. யோரிடோமோவின் சந்ததியாரே கடைசிவரை இந்தப் பட்டத்தை வகிக்கவில்லை. அவ் வப்பொழுது போட்டிக்காரர்கள் கிளம்பி, பலாத்காரமாக இந்தப் பதவிக்கு வந்ததுமுண்டு. 1596-ல் டைகோ ஹிடியோஷி என்ற ஒரு சாதாரண சிப்பாய், தன் திற

மையைக் கொண்டு அப்போதைய ஷோகனை விரட்டி, அந்தப் பதவியில் அமர முடிந்தது. அவருடைய மரணத்துக்குப் பின் வந்த அயாஸு என்ற சிப்பாய், 1600-ல் ஸேகி-கா-ஹறா என்ற விடத்தில் நடைபெற்ற பெரிய யுத்தத்தில் தனக்குப் போட்டியா யிருந்தவர்களை யெல்லாம் விரட்டி யடித்தார். 1603-ல் சக்ரவர்த்தி அவரை ஷோகனாக நியமித்தார். அவர்தான் டோகு காவா என்ற ஷோகன் பரம்பரையை ஸ்தாபித்தது. அயாஸு ஜப்பானிய சமூக அமைப்பில் புரட்சிகரமான பல மாறுதல்களைச் செய்தார். சமூகத்தை அவர் நான்கு பிரிவுகளாகப் பிரித்தார்.

(1) ஸாமுராய் என்ற க்ஷத்ரிய வகுப்பினர்.
(2) கிருஷிகர்கள்.
(3) கைத்தொழில்காரர்கள்.
(4) வியாபாரிகள்.

மத குருக்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. ஆயினும் அயாஸு, புராதன புத்த மதத்தையும், கன்பியூஷியஸ் என்ற சின வேதாந்தியின் தத்துவத்தையும், ஷின்டோ மதத்தையும் சமமாகவே பாவித்தார். ஆனால், கிறிஸ்தவ மதப்பிரசாரம் அவருக்குப் பிடிக்கவில்லை. கிறிஸ்தவ மதப்பிரசாரம் பலாத்காரத்தின்மூலம் தடுக்கப்பட்டதாகவும், அதன் விளைவாகத்தான்புத்த மதம் மட்டில் ஜப்பானில் தழைத்தோங்க முடிந்ததென்றும் மேல்நாட்டுச் சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர்.

ஜப்பானிய சக்ரவர்த்தி சூர்ய வம்சத்தைச் சேர்ந்தவ ரென்று கூறுகிறார்கள். 13-வது நூற்றாண்டு முதல் புத்த மதந்தான் சீனுவில் மதமாக இருந்து வருகிறது. பின்னல், அதில் பல சீர்திருத்தங்களைச் செய்யவேண்டி, ஷின்-ஷின் என்ற கோஷ்டியினர் கிளம்பினார்கள்.

## விவசாய வளர்ச்சி

விவசாயம் தான் சமீப காலம்வரை ஜப்பானின் பிர தானத் தொழிலா யிருந்து வந்திருக்கிறது. கிருஷிகர்கள் நில வரியை டாய்ம்யோக்களுக்கு நேரடியாகச் செலுத்தி வந்தனர். அப்பொழுதெல்லாம் ஜப்பானியர், கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன் என்ற கொள்கையை அனுஷ்டித்தனர். தங்கள் தேசத்துக்கு வெளியே நடை பெறும் விஷயங்கள் ஒன்றுமே அவர்களுக்குத் தெரி யாது. ஆனுல், உள்நாட்டுத் தொழில்களில் ஈடுபட்டிருந் தோர் மட்டும் புதுப்புது மாதிரிகளில், கவர்ச்சியான, நேர்த்தியான சாமான்களைச் சுறுசுறுப்புடனும், சாதுர்ய மாகவும் தயாரிப்பதில் உறுதியான மனப்பான்மை காட்டி வந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

இப்போது ஜப்பானுக்குச் சொந்தமாயிருக்கும் கோரியா என்ற தீபகற்பம், முன்னர், சீன சாம்ராஜ்யத் தின் ஒரு பகுதியாக இருந்துவந்தது. அதை ஜெயிக்க 16-வது நூற்றாண்டின் கடைசியில் ஜப்பான் செய்த முயற்சி பலிக்கவில்லை. தோல்வியுற்ற ஜப்பானிய தள

பதி திரும்புகாலில் நிபுணர்களான 17 குயவர் குடும்பங்களைக் கொரியாவிலிருந்து அழைத்துப்போனார். அவர்கள்தான் பீங்கான், அரக்கு, தங்கம், மரம் போன்ற தொழில்கள் ஜப்பானில் விருத்தியடைவதற்கு மூல காரணமா யிருந்தார்கள்.

## பாதிரிகள் வேட்டை

கிறிஸ்தவ மதப் பிரசாரகர்களை முன்னால் அனுப்பி அவர்களுக்கு ஐரோப்பியர் உதவியனுப்புவது, தம்முடைய ராஜீய ஆதிக்கத்தை நிலைநாட்டுவதற்காகத்தான் என்பதை ஜப்பானிய அதிகார வர்க்கம் உணராமல் இல்லை. ஆகையால்தான் 16-வது நூற்றாண்டு முதல், அதற்குக் கொஞ்சமும் இடங்கொடுக்காமல் அவர்கள் முனைந்து போரிட்டது.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஷோகன்களின் செல்வாக்கு கங்குகரையின்றி இருந்தது. 1800முதல் 1850வரை எவ்விதத் தகராறுமின்றி தேசம் அமைதியாயிருந்தது. உள்நாட்டிலோ வெளியிலிருந்தோ எவ்விதத் தொந்தரவும் ஏற்படவில்லை. நாட்டில் சந்தோஷம் தாண்டவமாடியது. பல சக்ரவர்த்திகள் நீண்டகாலம் அதிகாரம் செலுத்தி வந்திருக்கின்றனர். 1630 முதல் 1696 வரை மியோஷோ என்ற ஒரு சக்ரவர்த்தினியும், 1763 முதல் 1813 வரை கோ-ஸகூராமாசி என்ற ஒரு சக்ரவர்த்தினியுங்கூட அரசு செலுத்தி வந்திருக்கின்றனர்.

1836-ல், 59 வருஷகாலம் ஷோகன் பதவியை வகித்த பிறகு, அய்ஞரி என்பவர் ராஜிநாமாச் செய்தார். அவருடைய ஸ்தானத்திற்கு அவருடைய மகன் அயோஷி வந்தார். காலக்கிரமத்தில், ஷோகன்கள் சுகபோகங்களில் ஆசைவைத்து, சோம்பேறிகளாகி விட்டனர். ஆகையால், அவர்களுடைய செல்வாக்கும் கவுரவமும் குறைய ஆரம்பித்தன.

தங்கள் தொழில் வன்மையைக் கண்டு ஜப்பானியர் எப்போதுமே பெருமை கொள்ளுவதுண்டு. தவிர, அவர்கள் பரம ரஸிகர்கள். அங்குள்ள எரி மலைகள், விசித்திரமான பாறைகள், கம்பீரமாய் ஓங்கி வளர்ந்த நெடுமரங்கள்,எல்லாம் அவர்களுடைய கலையை வளர்த்து உருவாக்குவதில் பெரும் பங்கெடுத்துக்கொண்டன. ஜப்பானியத் தொழில் வன்மையைக் கண்டு இன்னம் மேல் நாடுகள் வியப்படைவதில் ஆச்சர்யமொன்றுமில்லை.

## ஹாலந்துக்கு ஒரு சலுகை

“ஷோகன்கள் ஒரு விதத்தில் சுயநலமிகள். “ஜப்பானிலிருந்து வெளியே ஒன்றும் போகக்கூடாது. வெளியிலிருந்து ஜப்பானுக்கு ஒன்றும் வரவேண்டிய தில்லை” என்பது அவர்களுடைய கொள்கையாயிருந்து வந்தது. ஆகையால் ஷோகன்களும் டாய்ம்யோக்களும் ஐரோப்பியர்கள் அடியெடுத்து வைக்க இடமளிக்க வில்லை. டச்சுக்காரர் மட்டில் நாகஸாகி என்ற துறை

முகத்துக்கு வந்து போகலாம். அதற்கும் சில விசேஷ நிபந்தனைகள் விதிக்கப்பட்டன. ஆகையால், நெடுங்காலம் வரை டச்சுக்காரர் மூலமாகத்தான் ஜப்பானியரைப் பற்றிய செய்திகள் மேல்நாடுகளுக்கு எட்டிவந்தன.

"மதிப்புயர்ந்த நம்முடைய தங்கம், வெள்ளி, தாமிரம், இரும்பு போன்ற சாமான்களை அனுப்பி, ஆட்டுமயிர், கண்ணாடி போன்ற உபயோகமற்ற சாமான் களை வாங்குவதா?" என்று பல டாய்ம்யோக்கள் புகார் கூறிவந்ததுண்டு. கல்வி ஒரு தினுசாக அளிக்கப்பட்டு வந்தது. தொழில்களில் விற்பன்னர்களா யிருந்த போதிலும் ஜப்பானியர் விக்ஞான முறைகள் ஒன்றும் தெரியாதவர்களாகத்தான் இருந்தனர்.

உலகத்திலிருந்து ஜப்பானை ஷோகன்கள் தனித்து வைத்திருந்த போதிலும், அவ்வப்பொழுது அங்கே பிரவேசித்து, தங்கள் சாமான்களை விற்க மேல்நாடுகள் விடாமுயற்சி செய்துவந்தன. இந்த முயற்சிகள் பன் முறை தோற்றன. அருகாமையிலுள்ள ரஷ்யர்கள்தான் ரொம்ப காலம் வரை விடாப்பிடியா யிருந்தனர். 1811-ல் காப்டன் காலோடீன் என்ற ரஷ்யர் சிறைப்பட்ட பிறகு தான் அவர்கள் இந்த முயற்சியைக் கைவிட்டது.

## அமெரிக்காவுடன் சம்பந்தம்

1837-ல் அயோஷி என்ற ஷோகன் காலத்தில்தான் அந்த ஸ்தாபனத்தையே அஸ்திவாரத்தைப் பிடித்தாட்

டும் சம்பவங்கள் நடைபெற்றன. மேல்நாட்டு வல்லரசு களின் வர்த்தகப் போட்டி ஜப்பானில் மும்முரமாய்க் குறுக்கிட்டது இக்காலத்தில் தான். 1837-ல் மாரிஸன் என்ற அமெரிக்கர் முதல்முதலாக ஜப்பானில் அடி யெடுத்து வைத்தார். அவருக்கு வெற்றி கிடைக்க வில்லை. அதற்குப் பிறகு 1845-ல் "ஸமராங்" என்ற பிரிட்டிஷ் வேவுக் கப்பலில் காப்டன் கூபர் என்பவரும், 1848, 1849-ல் இன்னம் பல பிரிட்டிஷ் கப்பல்களும் வந்தன. ஷோகன் சர்க்காருடன் உறவுகொண்டாட அவர்கள் செய்த முயற்சியெல்லாம் பலிக்கவே யில்லை. நாகஸாகிக்கு அப்பால், அவர்களால் பிரவேசிக்க முடிய வேயில்லை. புதிய போட்டியைக் கண்டு ஹாலந்து திகி லடைந்தது. டச்சு வர்த்தகத்துக்கு விசேஷச் சலுகை கள் அளிக்கப்பட வேண்டும் என்று ஹாலந்து மன்னர் 1844-ல் ஷோகனுக்கு ஒரு கடிதம் எழுதினார். இந்தக் கோரிக்கை மறுதளிக்கப்பட்டது. இந்தியாவிலும் மற்ற விடங்களிலும் மேல்நாட்டினரின் நாடுபிடிக்கும் சூழ்ச்சி யைப்பற்றி அவ்வப்பொழுது கிடைத்துவந்த தகவல் களே ஜப்பானியரின் உறுதியான பிடிவாதத்துக்குக் கார ணம் என்று சில அறிஞர்கள் அபிப்ராயப்படுகின்றனர்.

மேல்நாடுகளின் ஆயுத பலத்தைப் பற்றிய செய்திக ளும் ஷோகனைத் திடுக்கிடச் செய்தன. அவற்றுடன் ஒத் திட்டுப் பார்க்குமிடத்து ஜப்பானிய ஆயுதங்களும் தற் காப்பு வசதிகளும் எவ்வளவு புராதனமானவை என்பது

அவர்களுக்குப் புலப்பட்டது. அந்நியர் ஒருக்கால் தங்கள் ஆயுத பலத்தைக் கொண்டு ஜப்பானை அடிமைப்படுத்தி விடக்கூடும் என்ற திகிலும், அதன் விளைவாகச் சஞ்சலமும் ஏற்பட்டன. 50-வருஷ காலத்திற்கு மேல் சமாதானம் தொடர்ந்தாற்போல் நிலைத்திருந்ததால், ஜனங்கள் ராணுவ உணர்ச்சி யற்றுப்போய் கோழைகளாய்விட்டதாகவும், இந்த நிலைமை மாறவேண்டுமென்றும் பல பிரபலஸ்தர்கள் அபிப்பிராயப் பட்டனர். இந்த நெருக்கடியான நிலைமையில் 1853-ல் ஷோகன் அயோஷி காலமானார்.

விக்ஞான அறிவில்லாமல் கலையில் மட்டும் கவனம் செலுத்துவது, ஸ்தாபன அமைப்பு இல்லாது பொதுஜன உற்சாகம் கட்டுப்பாடாக இல்லாமல் தனிப்பட்டவர்கள் மட்டும் தைரியம் காட்டுவது, முற்போக்கு முறையில் இல்லாத யுத்த தளவாடங்கள், எதிர்காலத்தைப்பற்றி சிந்தியாமல், பழைய பெருமையைப் பேசிக் காலந்தள்ளுவது போன்றவைகளால் எந்தத் தேசமும் ஒருக்காலும் உருப்பட முடியாது என்ற உண்மை அவர்களுக்கு நிதர்சனமாகப் புலப்பட்டது.

அப்போது ஜப்பானில் திறன் படைத்த தலைவர்கள், தீரம் நிறைந்த சோல்ஜர்கள், தேசபக்தி மிகுந்த ஜனங்கள் இருந்தனர். ஆனால், நவீன யுத்தக் கப்பல்களோ பீரங்கிகளை எதிர்த்து நிற்கக்கூடிய கோட்டை கொத்தளங்களோ குறி தவறாமல் நெடுந்தூரம் சுடக் கூடிய பீரங்கிகளோ, ஒன்றுமே அவர்களிடம் இல்லை.

இந்த சந்தர்ப்பத்தில்தான், 1853 ஜூலை 8-ந் தேதி யன்று ஜப்பானின் சரித்திரத்தையே அடியோடு மாற்றி யமைப்பதற்குக் காரணமான முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்தன. பேர்ரி என்பவர் தலைமையின் கீழ் யேடோ விரிகுடாவுக்குள் நான்கு அமெரிக்க யுத்தக் கப்பல்கள் பிரவேசித்தன. ஷோகன் அயோஷா அப்பொழுது மரணப் படுக்கையிலிருந்து ஒரு மாதத்திற்குள் காலமானார். அவருடைய மந்திரிகளும் டாய்ம்யோக்களுந்தான் மிகுந்த கலவரத்துடன் இப்பிரச்னையைப் பற்றிக் கவனிக்கலாயினர். ஆகஸ்ட் 25உ அயோஷி காலமானார். அவருக்குப் பின்வந்த இஸேதா என்பவர்தான் கொஞ்சம் செல்வாக்குப் பெற்றிருந்த கடைசி ஷோகன்.

## ஷோகன் சகாப்த முடிவு

ஏற்கனவே கூறியதுபோல், சுகபோகங்களில் ஆழ்ந்து கிடந்த ஷோகன்களின் ஆட்சி, தேசத்தைப் பலவீனப் படுத்தியது. சக்ரவர்த்திகளின் பழைய ஆட்சி முறையைப் போன்ற மோசமான நிலைமை ஏற்பட்டது. ஷோகன் என்ற தனி அதிகாரி இனி அவசியமா என்றுகூடப் பலர் விவாதிக்கத் தொடங்கினர். ஷோகன் இல்லாமலேயே, சக்ரவர்த்தியுடன் நேரடியான உறவை வைத்துக்கொள்ள பல ஸாமுராய்கள் விரும்பினர். டாய்ம்யோக்களும் இந்த யோசனைக்கு ஆதரவு தந்தனர்.

இஸேதா என்ற அந்தப் பதின்மூன்ருவது ஷோகன் அற்பாயுளாக மாண்டார். அவருடைய பதவிக் காலம் நான்கே வருஷந்தான். ஆனல், அந்த நான்கு வருஷங் களுக்குள் தேசமெங்கும் அதிருப்தி வளர்ந்தது. இரண் டரை நாற்ருண்டுகளாக இருந்துவந்த ஷோகன் முறை, மேற்கொண்டு நீடிப்பதை இது அசாத்தியமாக்கி விட்டது.

இதற்கிடையே பேர்ரி என்ற அந்த அமரிக்க காப் டன் வந்து போய்விட்டார். யேடோ விரிகுடாவில் அவர் யுத்தக் கப்பல்களை வரிசையாக நங்கூரம் பாய்ச்சி ஞர். கரையிலிருந்து அதன் பீரங்கிகளை ஜனங்கள் கண்டு கதிகலங்க வேண்டுமென்பது அவருடைய எண்ணம். அங்கிருந்து நாகஸாகி சென்று, அவ்விடத்தி லுள்ள அதிகாரிகளிடம் முறையிட்டுக் கொள்ளுமாறு பசப்பாக ஜப்பானிய அதிகாரிகள் பேசினர். ஆனல், ஜப்பானுடன் எப்படியாவது ஒரு வர்த்தக உடன்படிக்கை யைச் செய்துகொண்ட பிறகே திரும்புவதென்ற திட சித்தத்துடன் வந்திருந்த பேர்ரி இதையெல்லாம் கேட்டு நகைத்தார். ஷோகனிடம் கொடுப்பதற்காக அமெரிக்கத் தலைவர் ஒரு கடிதத்தைத் தன்னிடம் தந்திருப்பதாகவும், அவரைக் காணுமல் தான் திரும்ப முடியாதென்றும் அவர் தெரிவித்துவிட்டார். பிறகு அந்தக் கடிதத்தைப் பெற்றுச் செல்ல ஷோகனிடமிருந்து ஒரு பிரதிநிதி வந்தார். சீக்கிரத்தில் பதிலைப் பெறுவதற்குத் திரும்பு

வதாகக் கூறிவிட்டு, ஜூலை 17ஆ யன்று, பேர்ரி தன் கப்பல்களுடன் கிளம்பினார்.

பேர்ரி புறப்பட்டுச் சென்ற பிறகு என்ன செய்வ தென்று ஷோகன் சர்க்காருக்கும் புலப்படவில்லை. பீரங்கி முனையில் ஒரு ஒப்பந்தத்தை நிர்ப்பந்தமாய்ப் பெற அவர் முயற்சிக்க மாட்டார் என்பது அவர்களுக்குத் தெரியும். ஆனால், ஜனங்கள் விரோதப் பான்மையுடன் ஏதாவது செய்துவிட்டால், அவர் பதிலுக்கு நட வடிக்கை எடுக்கக் கூடும். அப்படிச் செய்தால் எதிர்த்து நிற்க ஜப்பானிடம் போதிய பலம் இல்லை. ஆகையால் என்ன செய்யலா மென்பதைப்பற்றி, ஷோகன் அதி காரிகள் எல்லா டாய்ம்யோக்களின் அபிப்ராயத்தையும் சுற்றறிக்கை மூலம் கேட்டனர். அந்நிய நாட்டை எதிர்க்க வேண்டுமென்றே பலர் பதிலளித்தனர். ஸாமுராய் களில் பலர் யேடோவுக்கு அனுப்பப்பட்டனர். மடங் களிலிருந்த அழகிய மணிகளை உருக்கி, பீரங்கிகளாக வார்த்து, பலருக்கு மும்முரமாய் ராணுவப்பயிற்சி அளித் தனர். மேல் நாடுகளை எதிர்த்து நிற்க முடியாதென்பது அவர்களுக்குத் தெரியும். ஆனால், அதற்காகத் தூங்கிக் கொண்டிருக்க அவர்கள் விரும்பவில்லை.

## அமெரிக்காவுடன் உடன்படிக்கை

வட பஸிபிக் சமுத்திரத்தில் ஸாகலீன் என்ற ஒரு தீவு இருக்கிறது. இதில் தென்பாகம் ஜப்பானுக்கும்

வடபாகம் ரஷ்யாவுக்கும் சொந்தமானது. இந்த எல்லைப் புறத்தை நிர்ணயிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று வற்புறுத்துவதற்காக ஒரு ரஷ்யக் கடற்படை அதிகாரி வந்தார். அடுத்த வருஷம் அமெரிக்க கடற்படை அதிகாரி ஸ்ரீ பேர்ரி மீண்டும் யேடோ விரிகுடாவுக்கு வந்தார். இம்முறை அவர் பத்து யுத்தக் கப்பல்களைக் கொண்டுவந்திருந்தார். இப்போது யோகஹாமா இருக்குமிடத்தில் அப்போது ஒரு சிறிய கிராமம் இருந்தது. இந்தக் கிராமத்தில், அமெரிக்க சர்க்காருடன் ஷோகன் ஒரு உடன்படிக்கையில் கையெழுத்திட்டார். கையெழுத்திடுவது தவிர வேறு வழியில்லை. அதை ஒரு வர்த்தக உடன்படிக்கை என்று சொல்வதற்கில்லை. ஆனால், அதை வர்த்தக உடன்படிக்கைக்கு ஒரு முன்னேற்பாடு என்று கூறலாம். 1854 மார்ச்சில் ஏற்பட்ட இந்த உடன்படிக்கை தான் ஜப்பான் ஒரு வெளிநாட்டுடன் செய்துகொண்ட முதல் உடன்படிக்கை. அடுத்த அக்டோபர் மாதத்தில் பிரிட்டனுடன் இது போன்ற ஒரு உடன்படிக்கையைச் செய்துகொள்ள வேண்டி நேரிட்டது. 1855-ல் ரஷ்யாவுடனும், 1856-ல் ஹாலந்துடனும் ஒப்பந்தங்கள் ஏற்பட்டன. முதலில் அமெரிக்காவுக்காக விட்டுக்கொடுத்ததால் மற்ற வல்லரசுகளுக்கும் விட்டுக்கொடுக்க வேண்டி நேரிடும் என்று பலர் ஆட்சேபித்தது உண்மையாயிற்று. ஒவ்வொரு வல்லரசும் இரண்டு துறைமுகங்களில்

தங்கள் சரக்குகளை இறக்கலாமென்பது உடன்படிக்கையின் முக்கியமான கருத்து. ஆனல், எல்லா வல்லரசுகளும் ஒரே இரண்டு துறைமுகங்களைக் கோரவில்லை. சுமார் 5 முக்கியமான துறைமுகங்களில் தங்கள் சரக்குகளை இறக்க வெளிநாடுகள் இம்மாதிரி அதிகாரம் பெற்றன.

இந்த உடன்படிக்கைகளெல்லாம் ஜப்பானெங்கும் மிகுந்த அதிருப்தியையும் தாபத்தையும் உண்டு பண்ணின. வெளிநாடுகள் வியாபாரம் செய்வதை அனுமதிக்கவேண்டுமென்று ஒரு ராஜீயக் கக்ஷியும், அந்த "மிலேச்சர்களை" வெளியேற்ற வேண்டுமென்று வற்புறுத்திய பலம் மிகுந்த மற்றொரு கக்ஷியும் தோன்றின. இந்த இரண்டாவது கக்ஷியின் தலைவர் மிடோ என்ற ஜில்லாவின் அதிகாரி. அவரிடம் தீரர்களான பல ஸாமுராய்கள் இருந்தனர்.

## வர்த்தக உடன்படிக்கைகள்

அமெரிக்கா இந்த ஒப்பந்தத்தைக் கொண்டு திருப்தியடையவில்லை. ஒரு வர்த்தக உடன்படிக்கை ஏற்பட வேண்டுமென்று அவர்களுடைய ஸ்தானிகர் கேட்டார். ஆனல் தேசமெங்குமுள்ள கொந்தளிப்பை உத்தேசித்து ஷோகன் முதலில் தயங்கினர். இதற்குள், பிரிட்டிஷார், தங்கள் யுத்தக் கப்பல்களுடன் வருவதாகச் செய்தி கிட்டியது. பிறகு வேறு வழியில்லாமல், வர்த்தக

உடன்படிக்கைகளைப் பல நாடுகளுடன் 1858-ல் செய்து கொள்ளவேண்டி நேரிட்டது. ஜப்பானில், வெளிநாட்டினர், வாதிகளாகவோ அல்லது பிரதிவாதிகளாகவோ வரும் வழக்குகள் அந்தந்த ஸ்தானீகரால் விசாரிக்கப்பட வேண்டுமென்ற கொள்கைக்கும் ஜப்பான் இணங்க வேண்டியதாயிற்று. ஸ்தானீகர்கள் யேடோவைத் தங்கள் தலைமை ஸ்தாபனமாக்கிக் கொண்டனர்.

## அதிருப்தி வளர்ந்தது

இந்த ஒப்பந்தங்கள் அதிருப்தியை உச்ச ஸ்தாயிக்குக் கொண்டுவந்து விட்டன. 1857-ல் ஷோகன் காலமானார். அவருக்குப் பின் வந்த ஐமோசி மைனர். ஆகையால் ஐ நாஸுகே என்பவர் அவருக்காக ராஜரீகத்தை நடத்தினார். ஒப்பந்தங்கள் ஏற்பட்டுவிட்டதால், இனி அவற்றை எதிர்ப்பதால் பயனில்லை என்பது அவருடைய கக்ஷி. ஆனால், ஜனங்கள் அவ்வாறு கருதவில்லை. 1861-ல் அவர் கொலை செய்யப்பட்டார்.

இந்தக் குழப்பத்திடையே பணக்காரர்களும் ஸாமுராய்களும் தங்கள் கிளர்ச்சியைப் பலமாய் நடத்தினர். பிரஸ்தாப ஒப்பந்தங்கள் ஷோகனுடன் தான் செய்யப்பட்டவை யாதலாலும், சக்கரவர்த்தி அவற்றிற்கு எப்பொழுதுமே சம்மதமளிக்கவில்லை யாகையாலும் அவை செல்லத்தக்கவை யல்ல என்று அவர்கள் வாதித்தனர். வெளிநாட்டினர் இதை மதிக்கவில்லை. ஆனால் ஜப்பானிய

மக்கள் உண்மையிலேயே இதற்குச் செவிசாய்த்தனர். பல ஸாமுராய்கள் முதலில் அமெரிக்கர்களையும், பிறகு குறிப்பாக பிரிட்டிஷாரையும் தாக்க வாரம்பித்தனர். இந்த அதிக்கிரமங்களைத் தடைசெய்யத் தங்களால்முடிய வில்லை என்று ஷோகனுடைய மந்திரிகள் கூறிவிட்டனர். ஆகவே பிரிட்டிஷார் ஹாங்காங்கிலிருந்து தங்கள் கடற்படை வீரர்களை வரவழைத்துத் தங்கள் ஸ்தானீகர் காரியாலத்தைக் காத்தனர். யேடோவில் ஒரு ஆங்கிலேயனை ஒரு ஸாமுராய் கொன்றுவிட்டான். அப்போது சோஷூ ஜில்லா அதிகாரி, யேடோவுக்குக் கப்பல்கள் வரவொட்டாமல் தடுக்க முயற்சித்தார். அவருடைய யுத்தக் கப்பல்களும் பீரங்கிகளும் அமெரிக்கா, ஹாலந்து, பிரான்ஸ் மூன்று தேசங்களையும் சேர்ந்த மூன்று கப்பல்களைத் தாக்கின. பதிலுக்குப் பதில் நடவடிக்கைகளை அந்நியர் எடுத்துக்கொண்டனர். தங்கள் கப்பல்களுக்கு எவ்விதத் தடையுமிராமலிருப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அவர்கள் கூட்டாகச் செய்தனர்.

## ஸர்வதேச எதிர்ப்பு

1864-ல் ஒரு பிரிட்டிஷ் கடற்படை அங்கு சென்று, அங்கிருந்த ஜப்பானியக் கப்பல்களையும் கரையோர பீரங்கிகளையும் கோட்டைகளையும் அழித்துவிட்டது. ஷோகன் சர்க்காரிடமிருந்து ஒரு பெரிய தொகை அபராதமாகவும் கோரப்பட்டது. ஸாமுராய்கள்

உடனே சக்ரவர்த்தியை அணுகினர். அன்னியரை வெளியேற்றுமாறு, சக்ரவர்த்தி ஒரு உத்தரவு பிறப்பித்து, அதை நிறைவேற்றி வைக்குமாறு ஷோகனுக்கு அனுப்பினர். தன்னால் அது சாத்தியமில்லை என்று அவர் தெரிவித்துவிட்டார். ஸாமுராய்கள் போர் முரசு கொட்டுவது தெரிந்ததும், வெளிநாட்டு யுத்தக் கப்பல்கள் எல்லாமாகக் சேர்ந்து ஜப்பானியக் கடற்கரையை நாசமாக்கின. அவர்களுடைய ஸ்தானீகர்கள் ஷோகனிடம் வந்து, ஒப்பந்தங்களுக்கு சக்ரவர்த்தியின் சம்மதத்தைப் பெறுமாறு வற்புறுத்தினர். சக்ரவர்த்தியும் அதற்கு இணங்கிவிட்டார். பிறகு ஷோகன் சந்ததியில்லாமல் மாண்டார். சக்ரவர்த்தி கோமேய் என்பவர் காலமாகி, முட்ஸுஹீடோ என்பவர் அப்பதவிக்கு வந்தார். இனி ஷோகனே வேண்டியதில்லை என்றும், எல்லா அதிகாரங்களும் சக்ரவர்த்தியிடந்தான் இருக்க வேண்டுமென்றும் பெரிய கிளர்ச்சி நடைபெற்றது. சக்ரவர்த்தி காலஞ்சென்ற ஷோகனின் கார்டியனையே ஷோகனாக்கினர். ஆனால், அவர் 1867 நவம்பரில் தன் பதவியை ராஜீநாமாச் செய்துவிட்டார். சக்ரவர்த்தியும் அதை ஏற்றுக் கொண்டார். 650 வருஷங்களாக இருந்த ஷோகன் பரம்பரை இவ்வாறு முற்றுப்பெற்றது. ஷோகன் முறை வேண்டுமென்றவர்கள் மேலும் இரண்டு வருஷ காலம் நீடித்துப் போரிட்டு, 1869 ஜூலையில் இறுதியாகத் தோல்வியுற்றனர்.

## சக்ரவர்த்திக்கே ஸர்வாதிகாரம்

இந்தப் புரட்சியின் விளைவாக சக்ரவர்த்தியே மீண்டும் ராஜ்யாதிகாரியானர். சக்ரவர்த்தி முட்ஸுஹீடோ 1868-முதல் அரசு புரிந்தார். அவர் 121-வது ஜப்பானியச் சக்ரவர்த்தி. இனி எல்லா விவகாரங்களும் தன் ஆதீனத்தின் கீழ்த்தான் நடைபெறும் என்று அவர் வெளிநாட்டுப் பிரதிநிதிகளுக்குத் தெரிவித்து விட்டார். 1868 மார்ச் 23உ அவர்களை யெல்லாம் தன் அரண்மனைக்கு அழைத்தார். பிரிட்டிஷ் ஸ்தானிகரின் காவற் படையைச் சேர்ந்த ஒன்பது பேர்களை ஸாமுராய்கள் காயப்படுத்தினர். அவர்களில் இருவர் மாண்டனர். ஒப்பந்தங்களைத் தான் அங்கிகரித்து விட்டதால், இனி வெளிநாட்டினருக்கு எவ்விதக் கெடுதலும் நேரிடலாகாது என்று சக்ரவர்த்தி ஒரு பிரகடனம் விடுத்தார்.

## பிரதிக்ஞை

அரசியல் நிர்வாகம் திருத்தி யமைக்கப்பட்டது. இலாகாக்களின் பிரிவினையும் அதிகாரிகளின் நியமனமும் தாமதமின்றி நடைபெற்றன. 1869-ல் சக்ரவர்த்தி யேடோவுக்குச் சென்றார். யேடோவின் பெயர் டோகியோ என்று மாற்றப்பட்டது. இதே வருஷத்தில் சக்ரவர்த்தி ஒரு பிரதிக்ஞை எடுத்துக்கொண்டார். சட்ட நிரூபண சபையை நிறுவுவதாகவும் பொருத்தமற்ற புராதன பழக்க வழக்கங்களை ஒழிப்ப

தாகவும் அவர் பிரதிக்ஞையில் கூறினர். அதே வருஷத்தில் ஜில்லா அதிகாரிகளான டாய்ம்யோக்கள், சட்ட நிருபண சபைக்குப் பிரதிநிதிகளை நியமித்தனர். எல்லாத் தரத்தினருக்கும் பிரதிநிதிகள் அனுப்பப்பட்டனர். ஆரம்பத்தில் இந்த ஸ்தாபனம் வெறும் தர்க்க சபையாகவே இருந்தது. பழையன போகக்கூடாது என்பதே அதன் பிரதான கோரிக்கையா யிருந்தது.

## டாய்ம்யோ முறை ஒழிந்தது

ஆனல், அடுத்தாற்போல் சக்ரவர்த்தி செய்தது மிகவும் அடிப்படையான மாறுதல். நம் நாட்டிலுள்ள ஜமீன்தார் முறை போன்ற இந்த டாய்ம்யோ முறை 900 வருஷ அமுலுக்குப் பின் அடியோடு நிராகரிக்கப்பட்டது. ஆனல், அவர்கள் எதிர்க்கவில்லை. தங்கள் உடைமைகளையும், ஆட்களையும் அவர்கள் சக்ரவர்த்தியிடம் மனப்பூர்வமாய்ச் சமர்ப்பித்து விட்டனர். புதியமுறையில் ஜில்லாக்கள் வகுக்கப்பட்டன. சமூகத்தின் கடைசிப் படியில் இருந்த மக்களுக்குப் பல இடையூறுகளும், அசவுகரியங்களும் தோன்றிக்கொட்டு இருந்து வந்தன. அவற்றை யெல்லாம் நீக்கி, எல்லோரும் சட்டத்தின் முன் சரி சமானம் என்ற கொள்கை அங்கீகரிக்கப்பட்டது.

## வெளிநாட்டு விவகாரங்கள்

வெளிநாட்டு விவகாரங்கள் பலவற்றில் கவ்னம் செலுத்தவேண்டிய அத்தியாவசியம் உடனே ஜப்பா

னிய சர்க்காருக்கு ஏற்பட்டது. தென்கிழக்கு சீனுவை அடுத்தாற் போல் இப்போது ஜப்பான் வசமுள்ள பார்மோஸா தீவு தன்னுடையதென்று சீனு அப்போது கூறிவந்தது. அதை இறுதியில் தங்கள் வசமாக்கிக் கொள்வதற்கு அனுகூலமாயிருந்த சில சலுகைகளை ஜப்பானியருக்குச் சீன சர்க்கார் அளித்தனர். இப்போது ஜப்பான் வசமுள்ள கோரியா என்ற தீபகற்பமும் அப்போது சீனுவுக்கே சொந்தமாயிருந்தது. கொரியாக்காரர் ஒரு ஜப்பானியக் கப்பலைத் தாக்கினர். அதன் விளைவாகப் பிறந்த சம்பாஷணைகளின் மூலம், கொரியா அதிகாரிகளுடன் ஜப்பான் 1876-ல் ஒரு வர்த்தக ஒப்பந்தம் செய்துகொண்டது. ஆனுல் சீனு தன் ஆதிபத்ய உரிமையை விட்டுக் கொடுக்கவில்லை. ஆகவே, இருதலைக் கொள்ளி எறும்பு போல் கொரியா தத்தளிக்க வேண்டியதாயிற்று. கடைசியாகக் கொரியாவை ஜப்பான் ஸ்வீகரித்துக்கொள்ள இந்த ஒப்பந்தம் வசதியாயிருந்தது. வடகோடிப் பிரதேசங்கள் சம்பந்தமாக ரஷ்யாவுடன் இருந்துவந்த தகராறையும் ஜப்பான் சமரஸம் செய்து கொண்டது. இதன்படி ஸாகலின் தீவு ரஷ்யாவுக்கும் குரைல் தீவுகள் ஜப்பானுக்கும் கிடைத்தன.

ஆனுல் உள்நாட்டு நிலைமை திருப்திகரமாயில்லை. பல டாய்ம்யோக்களிடையே அதிருப்தி புகைந்து கொண்டிருந்தது. தேசத்தின் ராணுவ பலத்தின்மீது அவர்களுக்கு இன்னும் செல்வாக்கு இருந்து வந்த

தால் அதன் மூலம் தங்கள் பழைய ஆதிக்கத்தை மீண்டும் நிலைநாட்டிக் கொள்ளலாம் என்று அவர்களில் பலர் கருதி வந்தனர். அவர்களில் செல்வாக்கு மிகுந்தவன் ஸைகோ என்ற தளகர்த்தன். அவன் தேசமெங்கும் சர்க்கார் ஆதீனத்தின் கீழ் ராணுவப் பயிற்சிப் பள்ளிகளை ஏற்படுத்தினன். ஆனால், அவனுடைய ஆட்கள் அவற்றையெல்லாம் ராஜத்வேஷக் கோட்டைகளாக்க முயற்சித்தனர். 1877 பிப்ரவரியில் அவன் 14,000 தேர்ந்த துருப்புகளுடன் டோகியோ மீது படையெடுத்துச் சென்றான். ஆனால் இடையேயிருந்த ஒரு பெரிய கோட்டையில் அவன் கொடிய போருக்குப் பிறகு முறியடிக்கப்பட்டான். இதற்குப் பிறகு ஒகூபோ என்ற உள்நாட்டு மந்திரியை ராணுவ வெறியர்கள் கொன்று விட்டனர்.

தேசத்தின் அபிவிருத்தியில் சர்க்கார் முக்கியமாய்க் கவனம் செலுத்தலாயினர். ஸ்தல சுயாட்சியில் ஜனங்களுக்குப் பயிற்சியளிக்கும் முறையில் நகரசபைகளும் ஜில்லா சபைகளும் அமைக்கப்பட்டன.

## புதிய அரசியல் பிரகடனம்

1889-ல் சக்ரவர்த்தி ஒரு ஸ்ரீமுகத்தின் மூலம் புதிய அரசியலைப் பிரகடனம் செய்தார். அதன் வரம்புக்கு உட்பட்டே தாம் எப்பொழுதும் நடந்து கொள்வதாகப் பிரதிக்ஞை எடுத்துக்கொண்டார். புதிய அரசி

யலில் முக்கியமான எழு அம்சங்கள் இருந்தன. "இம்பீரியல் டயெட்" என்று அழைக்கப்படும் பார்லிமெண்ட் தான் இவற்றில் மிகவும் முக்கியமானது. பிரஜைகளின் உரிமைகளும் கடமைகளும் வியக்தமாய் விளக்கப்பட்டன. நீதி பரிபாலனம் செவ்வனே நடைபெறுவதற்கு வேண்டிய எற்பாடுகளும் செய்யப்பட்டன. இந்த அரசியல் பிரகடனமான தினத்தன்றே முற்போக்குக் கொள்கையை ஆதரித்துவந்த மோரி அரினோரி என்ற ராஜதந்திரி கொலையுண்டார்.

## அரசியல் விவரம்

1890-ல் புதிய அரசியல் அமுலுக்கு வந்தது. இதன்படி சக்ரவர்த்திப் பட்டம் ஆண் சந்ததிகளுக்குப் பாரம்பரையாய்க் கிடைக்க வேண்டுமென்று திட்டமாயிற்று. பிரிட்டிஷ் மன்னரைப்போல் அவர் சட்ட வரம்புக்கு உட்பட்ட மன்னரே. மந்திரி சபையை அவரே நியமிப்பார். பிரிவி கவுன்சில் என்ற விசேஷ மந்திராலோசனை சபையும் உண்டு. அவருடைய மான்யம் வருஷத்துக்கு 30-லக்ஷம் யென் (5-லக்ஷம் பவுன்.) போர் செய்வது, சமாதானம் செய்வது, உடன்படிக்கைகளைச் செய்துகொள்வது, பார்லிமெண்டைக் கூட்டுவது, ஒத்திவைப்பது, கலைப்பது, சட்டங்களை அங்கிகரிப்பது, அங்கிகாரம் மறுப்பது, ராணுவத்தின் மீது ஆதிக்கம் வகிப்பது முதலியன சக்ரவர்த்தியின் வேலை

களில் முக்கியமானவை. வருஷத்திற்கு ஒரு முறையாவது அவர் பார்லிமெண்டைக் கூட்டி யாகவேண்டும்.

பார்லிமெண்டில் இரண்டு சபைகள் உண்டு. அவற்றின் உரிமைகளும் அதிகாரங்களும் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் சபைகளை யனுசரித்தவையே. ராஜ குடும்பத்தைச் சேர்ந்த இளவரசர்கள், பட்டதாரிகள், தெரிந்தெடுக்கப்படும் பெரிய பணக்காரர்கள், இவர்களை அங்கத்தினர்களாகக் கொண்ட பிரபுக்கள் சபையில் சுமார் 300 மெம்பர்கள் உண்டு. முதல் இரு இனத்தினரும் ஆயுட்கால மெம்பர்கள். பணக்காரப் பிரதிநிதிகளின் பதவிக் காலம் எழு வருஷம்.

பிரதிநிதி சபையிலும் 300 மெம்பர்களுண்டு. ஜில்லாக்களி லிருந்து அவர்கள் தெரிந்தெடுக்கப் படுவார்கள். அப்போது ஜப்பானின் ஜனத்தொகை 430-லக்ஷம். ஆகையால் 1,43,000 பேர்களுக்கு ஒரு பிரதிநிதி விதம் தெரிந்தெடுக்கப்பட்டனர். ஒரு குறிப்பிட்ட தொகையை வரியாகச் செலுத்துவது, ஒரு வருஷ காலம் ஓர் இடத்தில் வசிப்பது இவைதான் வோட்டுரிமை யோக்கிய தாம்சங்கள். மெம்பர்களுக்குப் போக்குவரத்துப் படியும் மாதச் சம்பளமும் உண்டு. சபைத்தலைவர்களின் பதவிக்கு மூவர் பெயர்களை சபைகள் சிபார்சு செய்யும். அவர்களில் ஒருவரைச் சக்ரவர்த்தி நியமிப்பார். வரவுசெலவு அதிகாரங்களெல்லாம் பார்லிமெண்டுக்கே. பிரிட்டனைப் போலவே, பிரதிநிதி சபைக்குத்தான் நடைமுறையில்

அதிகமான அதிகாரம் உண்டு. அமைதிக்கும் ஒழுங்குக்கும் பங்கமில்லாத விதத்தில் மத சுதந்திரம் உண்டு. சர்க்கார் மதம் என்பது எதுவுமில்லை. ஆனால், ஷின்டோ மதத்துக்கும் புத்த மதத்துக்கும் சற்று ஆதரவு கிடைத்து வந்தது.

நீதிபதிகளுக்குப் பூர்ண சுதந்திரம் உண்டு. அவர்கள் ஒழுங்கு தவறி நடந்துகொண்டதாக நிரூபிக்கப் பட்டாலொழிய அவர்களை வேலையிலிருந்து நீக்க யாருக்கும் அதிகாரமில்லை. சிவில், கிரிமினல், இரண்டு பிரிவுகளிலும் இதே மாதிரிதான். கிராமக் கோர்ட்டுகள் முதற்கொண்டு இப்படியேதான். எல்லாக் கோர்ட்டுகளுக்கும் மேலாக ஒரு அப்பீல் கோர்ட் உண்டு. உயர்தர நீதிபதிகளைச் சக்ரவர்த்தியும், மற்றவர்களை நீதி இலாகா மந்திரியும் நியமிப்பார்.

1869-ல் பழைய ஆட்சிமுறை ஒழிந்தது. 21 வருஷங்களுக்குப் பிறகுதான் புதிய அரசியல் பரிபூர்ணமாக வேலை செய்ய ஆரம்பித்தது. மேல்நாடுகளிலிருப்பது போன்ற கல்வி முறையும் ஏற்பாடாயிற்று. ஆரம்பக் கல்வி சட்டபூர்வமாய்க் கட்டாய மாக்கப்பட்டது. ஏழைகளின் கஷ்ட நிவாரணத்துக்கென்று மத்திய சர்க்கார் ஒரு நிதியை ஒதுக்கி வைத்தனர். இந்தியாவைப் போலவே ஜப்பானிலும் அப்பொழுது முக்கியமான வரி நிலவரிதான். அதற்கு அடுத்தபடியானது போதை தரும் மது, அபினி, கஞ்சா போன்றவைகளிலிருந்து

கிடைப்பது. புகையிலைக்கு வரி உண்டு. அதன் மீது சர்க்காருக்குத்தான் ஏகபோக ஆதிக்கமுண்டு. காடுகளிலிருந்து நல்ல வருமானம் கிடைக்கிறது. அவற்றின் பரிபாலனத்தில் ஜப்பானிய சர்க்கார் மிகுந்த கவனம் செலுத்தி வந்தனர். மேல் நாடுகளைப்போலவே, பட்ஜெட்டுகளை நிதி மந்திரி தயாரித்துப் பார்லிமெண்டில் சமர்ப்பிப்பது வழக்கம்.

## புதிய ராணுவ நிர்மாணம்

பழைய சம்பிரதாயப்படி இல்லாமல், மந்திரி சர்க்காரின் ஆதிக்கத்துக்கு உட்பட்டு, ராணுவம் சீர்திருத்தி அமைக்கப்பட்டது. 20 வயதுவந்த ஆண்கள் எல்லோரும் 7 வருஷம் கட்டாய ராணுவ சேவை செய்ய வேண்டும். 3 வருஷகாலம் ராணுவ சேவையிலும், 4 வருஷ காலம் ரிசர்வ்களாகவும் அவர்கள் இதைக் கழிக்க வேண்டும். அதற்குப் பின் 40 வயதாகும் வரை எப்பொழுதேனும் அவசர நெருக்கடி ஏற்பட்டால், ராணுவ சேவைக்கு வர அ வ ர் க ள் தயாரா யிருக்கவேண்டும். சென்ற நூற்றூண்டின் கடைசியில் குதிரைப் படையிலும் பீரங்கிப் படையிலும் 29,000 குதிரைகள் இருந்தன. ராணுவப் பயிற்சிப் பள்ளிக்கூடங்கள் எங்கும் நிறுவப்பட்டன. தளவாடங்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் ஒஸாகா, டோகியோ இரண்டிடங்களிலும் அமைக்கப்பட்டன. பிரிட்டனிலிருந்து குரூய்ஸர்

களும் பீரங்கிப் படகுகளும் வரவழைக்கப்பட்டன. ஜப்பானியக் கடற் படைக்கு ஆட்களும் அதிகாரிகளும் மேல்நாடுகளில் பயிற்சி செய்விக்கப்பட்டனர். 1890-ல் அவர்கள் 14,000 பேர் இருந்தனர். ஜப்பானின் சரித்திரப் போக்கையே மாற்ற இது மிகவும் உபயோகமாயிருந்தது. யுத்த ஒத்திகைகளும் அடிக்கடி நடைபெற்றன. ஜப்பானியக் கடற்கரை ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. கோட்டைகளும், பீரங்கி அரண்களும், துறைமுகங்களும் விரைவில் கட்டப்பட்டன.

## கொரியா கிடைத்தது

1894-ல் ஜப்பானுக்கும் சீனுவுக்கும் கொரியா சம்பந்தமாக யுத்தம் நடைபெற்றது. 1877-ல் கொரியா சம்பந்தமாக ஒரு உடன்படிக்கை ஏற்பட்டது ஞாபகமிருக்கலாம். முன்னதாக மற்ற ஒப்பந்த நாட்டுக்கு அறிவிக்காமல், கொரியாவுக்குத் துருப்புகளை அனுப்புவதில்லை என்று சீனுவும் ஜப்பானும் இதன் மூலம் ஏற்றுக்கொண்டிருந்தன. ஆனல், கொரியாக்காரர் வேண்டுகோளின்படி, 1893-ல் சீனு அங்கு துருப்புகளை அனுப்பியது. இதன் விளைவாகத் தகராறு ஏற்பட்டது. ஜப்பான் தன் கடற்படையின் உதவியைக் கொண்டு சீனரைக் கொரியாவிலிருந்து விரட்டியடித்தது. கொரியாவின் தென்கோடியிலுள்ள போர்ட் ஆர்தர், வட சீனுவில் முக்கியத் துறைமுகமான வேய்-ஹை-வை முதலிய

வற்றையும் ஜப்பான் கைப்பற்றியது. சீன தோற்றுப் போய், சமாதான உடன்படிக்கை செய்துகொண்டது இதன் விளைவாக கொரியா, பார்மோஸா தீவு, போர்ட் ஆர்தர், லியாடுங் தீபகற்பம் முதலியன ஜப்பான் வச மாயின. தவிர, சீன பெரிய தொகையை ஜப்பானுக்கு நஷ்ட ஈடாகவும் கொடுத்தது. இதற்குள் பிரான்ஸும், ரஷ்யாவும், ஜெர்மனியும் பிடிவாதமா யிருந்ததால், போர்ட் ஆர்தரையும் லியாடுங் தீபகற்பத்தையும் சீன வுக்கே திருப்பிக் கொடுக்க ஜப்பான் இணங்கியது. நஷ்ட ஈட்டைச் செலுத்த பிரிட்டனும், ஜெர்மனியும் சீன சர்க்காருக்குக் கடன் கொடுத்தன. சீன இதற்குப் பிரதியாக, வெய்-ஹை-வையைப் பிரிட்டனுக்குத் தர இசைந்தது. இதுதான் ஜப்பானிய ராணுவ பலத்தின் பெரிய முதல் வெற்றி. பார்லிமெண்ட் சக்ரவர்த்தியைப் பாராட்டியது. சக்ரவர்த்தி தம் படைகளைப் புகழ்ந்தார்.

## 19-வது நூற்றாண்டின் இறுதியில் ஜப்பானின் நிலைமை

1868-க்குப் பிறகு, ஜப்பானில் மேல்நாடுக ளிருப்ப தைப் போன்ற நிலைமை வேரூன்ற ஆரம்பித்தது. ஜப் பான் இடைவிடாமல் முன்னேறி வந்ததற்குக் காரணம் ஜப்பானிய மக்களின் இடைவிடா உழைப்பும், ஸத்ய மும், தன்னம்பிக்கையுமே. பத்தொன்பதாவது நூற் றாண்டின் கடைசியில்தான் கிறிஸ்தவ மதப் பிரசாரகர்

களுக்கு ஓரளவு சுதந்திரம் கிடைத்தது. “சிலுவை சென்ற வழியே சாம்ராஜ்யம்’ என்ற உண்மையை அவர்கள் நன்குணர்ந்திருந்ததால், மேல்நாடுகளின் ஏகாதிபத்தியத்துக்கு அஸ்திவாரம் போடுவதற்குக்கூட இடங்கொடுக்க ஜப்பானியர் உறுதியுடன் மறுத்து விட்டனர்.

மேல்நாடுகளி லிருப்பதைப் போன்ற கல்வி முறை தேசமெங்கும் ஏற்பாடாயிற்றென்று முன்னமேயே கூறினேம். கட்டாய ஆரம்பக் கல்வி வெகு திறமையுடன் நடத்திவைக்கப்பட்டது. பள்ளிக்குப் போகக் கூடிய குழந்தைகள் 75 லக்ஷம். அவர்களில் 40 லக்ஷம் பேர்களுக்கு மேல் 1899-ல் பள்ளியிலிருந்தனர். விவசாயம், வைத்தியம், எஞ்சினீரிங், விக்ஞானம் போன்ற தொழிற் கல்வி முறைகளும் மலிந்திருந்தன. 1895-ல் 25 பெரிய புத்தகாலயங்கள் இருந்தன. 753 பத்திரிகைகளும் 26,000 புதிய நூல்களும் அவ்வருஷம் பிரசுரமாயின. ரோடுகள்தான் முக்கியமான போக்குவரத்துச் சாதனங்களா யிருந்தன. 1875-க்குப் பிறகுதான் ரயில் வேக்கள் போடப்பட்டன. 1899-ல் சர்க்காருக்குச் சொந்தமாக 631 மைல் ரயில்வேக்களும், தனிப்பட்ட கம்பெனிகளுக்குச் சொந்தமாக 1873 மைல் ரயில்வேக்களும் இருந்தன. 65 லக்ஷம் டன் சாமான்களையும் 420 லக்ஷம் பிரயாணிகளையும் அவை ஏற்றிச் சென்றன. தங்கள் கப்பல்களிலேயே தங்கள் ஏற்றுமதி இறக்குமதி

களை ஏற்றிச் செல்வதென்ற கொள்கையை ஆரம்பம் முதல் ஜப்பானியர் அனுஷ்டித்தனர். 1899-ல் அங்கு 70 பருத்தி நெசவாலைக ளிருந்தன. இரும்பு உருக்குத் தொழிற்சாலைகள் சிலவும் இருந்தன. மின்சாரத்தைத் தொழில்களுக்கு உபயோகித்துக் கொள்வதில், அப்பொழுது ஜப்பான்தான் முதன்மை ஸ்தானம் வகித்தது. டெலிபோன் தந்தி சாதனங்கள் விரைவில் அபிவிருத்தியடைந்து வந்தன.

## சீனவில் ஆக்ரமிப்பதேன்?

ஜப்பான் ஜனநெருக்கம் மிகுந்த நாடு. வெளி நாட்டு வர்த்தகம் மிக முக்கியமென்பதை ஜப்பானியர் வரவர அதிகமாக உணர ஆரம்பித்தனர். ஜப்பானுக்கு முன்னதாகவே, தங்கள் ஏகபோகங்களாகப் பல காலனிகளை மேல்நாடுகள் ஸ்வீகரித்துக் கொண்டுவிட்டன. ஜப்பானுக்கு அருகாமையிலுள்ள சீனவின்மீதுதான் ஜப்பானின் திருஷ்டி முக்கியமாகப் பாய்ந்ததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. இதை உத்தேசித்துத்தான் ஜப்பான் பெரிய ராணுவத்தைக் காப்பாற்றிவந்தது. ரிசர்வ்கள் உட்பட 2,84,700 பேர் இருந்தனர். வரவு செலவு வருஷத்திற்கு வருஷம் அதிகரித்துவந்தது. 1897-8ல் வருமானம் 23·8கோடி யென்; செலவு 24·9கோடி. ராணுவச் செலவு 2·9 கோடி. சர்க்கார் கடன் மொத்தம் 41கோடி. பெரிய தொழில்களில் மட்டும் ஜப்பான் சிரத்தை காட்ட

வில்லை. ஏராளமான குடிசைத் தொழில்கள் சீராக நடந்துவந்தன. சீனவைப் பங்கிட்டுக்கொள்ள மேல் நாடுகள் செய்துவந்த சூழ்ச்சிகளெல்லாம் ஜப்பானுக்குத் தெரியும். ஆகையால் அதற்கு இடங்கொடாமல், சீன சர்க்காரை வசப்படுத்த வேண்டுமென்பதில் ஜப்பானிய ராஜதந்திரிகளுக்கு எப்பொழுதுமே சிரத்தை யுண்டு. அதற்கு இடையூறாக மேல்நாடுகள் போரிடக்கூடும் என்பதும் ஜப்பான் அறிந்ததே. ஆகையால்தான், எதற்கும் தயாரா யிருக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் ஜப்பான் தன் ஆயுதபலத்தை முதல்தரமாக்கி வந்தது.

---

## ஆருவது அத்தியாயம்

## 20-ம் நூற்ருண்டில் ஜப்பான்

ஜப்பான், 1870-லேயே முதல்தரமான முதலாளித்துவ நாடாக ஆரம்பித்தது என்று குறிப்பிட்டிருந்தோம். பிறகு ஜப்பானிய சாம்ராஜ்யமும் தொழில்களும் அமோகமாய்ப் பெருக ஆரம்பித்தன.

இப்போது ஜப்பானிலுள்ள முக்கியமான ராஜீயக் கக்ஷிகள் ஸெயூகாய், மின்ஸீடோ என்பவை. மின்ஸீடோ என்பது 1927-ல் ஆரம்பமான மிதவாதக் கக்ஷி. சில்லறையான தீவிரவாதக் கக்ஷிகளுமுண்டு. பழைய ஜப்பானில் போலவே இப்பொழுதும் ராணுவம் ராஜீய

விவகாரத்துக்குப் புறம்பானது. ஆகையால், நடைமுறை யில் ஜப்பானிய ராணுவத்துக்கு மந்திரி சபைகள் ஒத்துப் பாடுவதுதான் வழக்கமா யிருந்துவருகிறது. சமீபகாலத்தில் ராணுவம் காட்ஸீமாரோ அகாமாட்ஸு என்பவரைத் தலைவராகக் கொண்ட ஒரு நாஜிக் கக்ஷிக்கு ஆதரவளித்து வந்திருக்கிறது. இந்த ஜப்பானிய பாஸிஸ்ட் கக்ஷி கொஞ்ச காலமாகப் பலமடைந்து வரு கிறது. 1936-ம் வருஷம் ரஷ்யாவுக்கு எதிராக ஜெர்மனி யுடன் ஜப்பான் இரகசிய ஒப்பந்தம் செய்துகொண் டிருப்பது இந்தக் கக்ஷியின் முயற்சியின் மூலந்தான். ஜப்பானில் பாஸிஸ்ட் ஆதிக்கந்தான் இருந்து வருவதாக 1936 அக்டோபர் ஆரம்பத்தில் முஸோலீனி பெர்லினில் பேசியிருப்பது குறிப்பிடத்தக்கது. ஆகையால், இப் போது ஜப்பானில் நிலைபெற்றிருப்பது பாஸிஸ்ட் ஆதிக்கம் என்பது கவனிக்கவேண்டிய விஷயம்.

1868-முதல் 1912-வரை ஜப்பானிய சகாப்தத்துக்கு 'மெய்ஜி' சகாப்தம் என்று பெயர். மெய்ஜி என்றால் நாகரிக சர்க்கார் என்று பொருள். இந்தக் காலத்தில் ஜப்பானிய சர்க்கார் மிகவும் நாகரிகமாக இருந்ததென்ன வோ வாஸ்தவந்தான். 1890-ல் அரசியல் சட்டம் பிரகடனமாயிற்றென்று முன்னமே கூறினோம். அத் துடன் 'மெய்ஜி' சகாப்தத்தின் முதற் பகுதி முடி வடைந்ததாகக் கூறலாம். இக்காலத்தில் ஒரு நவீன அரசியலமைப்புக்கு வேண்டிய அஸ்திவாரம் பலமாய்ப்

போடப்பட்டது. ஜப்பானிய இளைஞர் உலகமெங்கும் சென்று, எல்லாத் தொழில்களையும் கற்றுவந்து, கண் பார்த்ததை, தங்கள் தேசத்தில் கைகளினால் செய்து, அதன் பெருமையை நிலைநாட்டினர். இந்தச் சகாப்தத்தின் மற்ற 22 வருஷங்களில் ஜப்பான் தன் ஆதிபத்யத்தை ஸ்திரப்படுத்திக்கொண்டு, ஏகாதிபத்தியமாக வளரும் நிலைமைக்கு வந்துவிட்டது. இவையெல்லாம் சுலபமாய், சாபூத்தாய் நிறைவேறிவிட்டதாகக் கருதக்கூடாது. டோகுகாவா பரம்பரையினர் இலேசில் விட்டுக்கொடுக்க வில்லை. ஆனால், ஜனங்களிடையே விழிப்பு ஏற்பட்டிருந்ததால், பழைய பெருச்சாளிகளின் சூழ்ச்சிகள் ஓங்க வில்லை. ஸாத்ஸூமோ கோஷ்டியினர் மட்டும் சர்க்காருடன் ஒத்துழையாமல் விலகி நின்று பக்குவமான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். ஸாமுராய்களும் இந்த அதிருப்தியில் சிரத்தை காட்டலாயினர். ஆனால், சக்கரவர்த்தி ஒரு கடவுளெனப் பாவிக்கப்பட்டதால், சீர்திருத்தங்களைச் செய்வது சுலபமாயிற்று. ஜனங்களிடம் தேசத்திற்காக ஸர்வ சங்கப் பரித்தியாகம் செய்யும் உணர்ச்சியும் வலுவடைந்தது. ஸாமுராய்களும் தங்கள் பிரத்தியேக உரிமைகளை விட்டுக் கொடுத்து மற்றவர்களுடன் சமநிலைமை அடைந்தனர். ஸாத்ஸூமோ கலகம் அடக்கப்பட்டும் அவர்கள் அப்படியே சும்மா இருந்து பிறகு இருபது வருஷங்கள் கழித்து ஆதிக்கம் பெற்றனர். ராஜீயக் கக்ஷிகள் தோன்றியும்

இவர்களுடைய ஆதிக்கம் அலாதியாய் அமைவற்றிருக்கின்றது.

மெய்ஜி சகாப்தத்துக்குப் பின் 1931 செப்டெம்பர் வரைதான் ஜப்பானிய சரித்திரத்திலேயே மிகவும் முக்கியமானது. ராஜீய-தொழில் உலகில் ஜப்பான் முன்னணிக்கு வந்தது இந்தக் காலத்தில்தான். மேல் நாடுகளின் முறைகளையெல்லாம் ஜப்பான் அப்படியே காப்பியடிக்க ஆரம்பித்தது. ஜப்பானிய மந்திரி சபை மட்டும், சக்ரவர்த்திக்குத்தான் ஜவாப் சொல்லக் கடமைப்பட்டதே ஒழியப் பார்லிமெண்டுக்கு அல்ல. நிதி பார்லிமெண்டின் ஆதிக்கத்துக்கு உட்பட்டதாகக் கருதப்பட்ட போதிலும் ராணுவம் கோரும் பணத்தை மந்திரி சபை கொடுத்தாக வேண்டுமென்றிருக்கிறது. ஜெர்மனியின் அரசியலும் ராணுவ அமைப்பும், பிரெஞ்சு கிரிமினல் சட்டம், பிரிட்டிஷ் சிவில் சட்டம் முதலியவற்றின் நல்ல அம்சங்களெல்லாம் ஜப்பானின் நிலைமைக் கேற்றவாறு மாற்றி உபயோகப்படுத்திக் கொள்ளப்பட்டன.

20-வது நூற்றாண்டில் ஜப்பானின் ராஜீய வளர்ச்சியில் முக்கியமான சில மைல் கற்களை மட்டில் இங்குக் குறிப்பிடுகிறோம். இவை வெவ்வேறிடங்களில் விவரிக்கப்பட்டுள்ளன ஆகையால் இங்கும் அவற்றை விவரிப்பது அவசியமில்லை.

1902-ஜனவரி 20உ பிரிட்டனும் ஜப்பானும் உடன்படிக்கை செய்துகொண்டன. இதற்குக் கார

ணம் ரஷ்ய ஏகாதிபத்தியம், ராக்ஷஸன் போல் வளர்ந்து, பிரிட்டனை இந்தியாவிலும், சீனாவை மஞ்சூரியாவிலும், ஜப்பானைக் கொரியாவிலும் பயமுறுத்தியதே. ஒப்பந்த நாடுகளில் ஒன்று போரில் சிக்கிக்கொண்டால், மற்ற நாடு நடுநிலைமை வகிப்பதுடன் இதர வல்லரசுகள் எதிரியுடன் ஐக்கியமாகாமல் தடை செய்யவேண்டும் என்பதுதான் இந்த உடன்படிக்கையின் கொள்கை.

இதற்குப் பின் 1904-5ல் ரஷ்யா-ஜப்பான் யுத்தம் நடைபெற்றது. மஞ்சூரியாவில் பொருளாதார ஆதிக்கம் வகித்துவந்த ரஷ்யா 1903-ல் கொரியாவின் சுதந்திரத்தை உத்தரவாதம் செய்ய மறுக்கவே, 1904 பிப்ரவரி 6உ யன்று ரஷ்யாவுடன் ஜப்பான், ராஜதந்திர உறவுகளை அறுத்துக்கொண்டது. ஆனால், முன்னதாக தெரிவிக்காமலே, ரஷ்யாவை ஜப்பான் தாக்கியது. 1904-ல் ஒரு நாள் இரவு ஜப்பானியக் கடற்படை, போர்ட் ஆர்தர் துறைமுகத்திலிருந்த 6 ரஷ்ய குருய்ஸர்களுக்கு வேட்டு வைத்தது. பிறகு துருப்புகள் வந்தன. துறைமுகத்துக்கு 25 மைல் வடக்கேயுள்ள லியாடுங் தீபகற்பத்தை ஜப்பான் முற்றுகையிட்டது. முன்பின் அறியாத எதிரியான ஒரு பெரிய ஐரோப்பிய ஏகாதிபத்தியத்துடன், ஜப்பான் போரிட்டு வெற்றியடைந்தது. இதற்குக் காரணம் ஜப்பானிய சோல்ஜர்களின் முதல் தரமான தியாகபுத்தியே. இந்த வெற்றியின் காரணமாக, ஜப்பான் பெரிய வல்லரசுகளில் ஒன்றாயிற்று.

இதன் விளைவாக மஞ்சூரியாவில் ஜப்பான் ஓரளவுக்கு ஆதிக்கம் பெற முடிந்தது.

1910-ல் கொரியாமீது ஜப்பான் ஆதிபத்ய உரிமை பெற்றது. பார்மோஸா கிடைத்தது. மகாயுத்தத்தின் விளைவாக, பஸிபிக் தீவுகளில் முக்கியமான பல தீவுகள் மாண்டேட்டாகக் கிடைத்தன. ஷாண்டுங் என்ற சீன மாகாணத்தில் ஜெர்மனிக்கு இருந்துவந்த பிரத்தியேக உரிமைகளும் ஜப்பானுடையதாகிவிட்டன. பிறகு ஜப்பான் கேட்ட 21 கோரிக்கைகள், அவற்றிலிருந்து கிளம்பிய 9 வல்லரசு உடன்படிக்கை முதலியன ஏற்க னவே விவரிக்கப்பட்டுள்ளன.

## ஜெர்மன் மாண்டேட்டுகள் விநியோகம்

மகாயுத்தத்துக்குப் பின் ஜெர்மனிக்குச் சொந்தமா யிருந்த காலனிகள் நேச தேசங்களிடையே ஸர்வதேச சங்கத்தின் ஆதீனத்துக்கு உட்பட்ட மாண்டேட் நாடுக ளாக ஒப்படைக்கப்பட்டன அல்லவா? பஸிபிக் மகா சமுத்திரத்தில் ஜெர்மனிக்குச் சொந்தமாயிருந்த தீவுகள் பின்வருமாறு விநியோகிக்கப்பட்டன.

ஸாமான் தீவுகள் நியூஜிலந்துக்கு. நாரா தீவுகள் பிரிட்டனுக்கு. ஈக்வேட்டருக்குத் தென்புறம் நியூகினியா உட்பட ஆஸ்ட்ரேலியாவுக்கு.

ஈக்வேட்டருக்கு வடக்கேயுள்ள காரொலீன், மார் ஷல், மரியான் தீவுகள் ஜப்பானுக்கு. இந்த மாண்டேட்

தீவுகளில் ஜப்பான் முதல்தரமான ராணுவ ஏற்பாடு களைச் செய்திருக்கிறது. ஸர்வதேச மாண்டேட் கமிஷன் முன் இதுபற்றிப் புகார்கள் செய்யப்பட்டும் அவை கவனிக்கப்படவில்லை. ஜப்பான் இவற்றில் விசேஷ கவனம் செலுத்துவதற்குக் காரணம் அவை அமெரிக்க கப்பல் மார்க்கத்திலிருப்பதும், அடுத்த பஸி பிக் யுத்தத்தில் ஐரோப்பிய வல்லரசுகளைத் தாக்க வசதி யான பூகோள அமைப்பிலிருப்பதுமே.

1922-ல் வாஷிங்டனில் ஜப்பான் கையெழுத்திட்ட ஒன்பது வல்லரசுகள் உடன்படிக்கை ஜப்பானின் நாடு பிடிக்கும் அபிலாஷைகளை அடியோடு மட்டங்கட்டுவதா யிருந்தது. இந்த மகாநாட்டில் ஜப்பான் தனித்து நிற்கவேண்டி யிருந்தது. ஜப்பானின் விஸ்தரிப்பு சிங் கும் தடைப்பட்டது. ஏகாதிபத்தியங்களின் போக்கு தனக்கு விரோதமாயிருக்கவே, ஜப்பான் 1925-ல் வேறு திக்கின்றி ஏதாவது ஒரு பக்கபல மிருக்கட்டும் என்று நினைத்து, ரஷ்யாவுடன் ஒரு ஒப்பந்தத்தைச் செய்து கொண்டது. ஆனால், எவ்விதத்திலாவது, பொதுவுடை மையை ஆதரிக்க ஜப்பான் முன்வந்ததாக இதிலிருந்து நினைத்துவிடக் கூடாது. அதற்கு நேர்மாறாக, தனிச் சொத்துரிமையை ஆட்சேபிக்கும் பிரசாரமே கூடா தென்று கூறும் ஒரு கண்டிப்பான உத்தரவு 1925-ல், 'சமாதானத்தை நிலைநாட்டும் சட்டம்' என்ற பெயரு டன், பிரசுரிக்கப்பட்டது. இது வெகு கண்டிப்பாகவும்

அமுல் நடத்திவைக்கப்பட்டது. தீவிர எண்ணங்களின் பிரசாரங்கூடக் கண்டிப்பாக ஒடுக்கப்பட்டது. 1928-ல் மற்ற ஏகாதிபத்தியங்களைப் பின்பற்றி ஜப்பானும் பொதுவுடைமை வேட்டையில் இறங்கியது. அவ்வருஷம் ஒரே இரவில், ஒரு ஆயிரம் பேர்களுக்குமேல் கைது செய்யப்பட்டனர். பிறகு, 1932-அக்டோபரில் 2,250 பேர்கள் கைது செய்யப்பட்டனர். இவர்களில் பெரும்பான்மையோர் மாணவர்களும் உபாத்தியாயர்களுந்தான்: தொழிலாளர்களல்லர். அவர்களில் பல நூறு பேர்கள் ஸர்வகலாசாலைப் பட்டம் பெற்ற ஆண்களும் பெண்களும். ஒரு பாங்கில் நடைபெற்ற கொள்ளையும் பொதுவுடைமைக்காரர்களின் வேலைதான் என்று அதிகாரிகள் கூறினர். பல பொதுவுடைமைச் சதி வழக்குகளும், மீரத் சதி வழக்குப்போல், நடித்துக் காண்பிக்கப் பட்டன.

ஒன்பது வல்லரசு உடன்படிக்கையுடன் பிரிட்டிஷ் ஜப்பானிய ஐக்கியம் உடைந்துவிட்டதாகக் கூறலாம். 1923-ல் மற்றொரு ஒப்பந்தமும் காலாவதியாயிற்று. அதுதான் அமெரிக்காவுடன் செய்து கொண்டிருந்த லான்ஸிங்-இஷை ஒப்பந்தம் என்பது. சீனாவில் ஜப்பானின் விசேஷ உரிமைகளை அமெரிக்கா ஷெ உடன்படிக்கை மூலம் அங்கீகரித்திருந்தது. ஒன்பது வல்லரசு உடன்படிக்கையுடன் இதுவும் முற்றுப்பெற்றது. அடுத்த வருஷம், ஜப்பானியர் குடியேறுவ

தைத் தடுத்து அமெரிக்கா சட்டம் செய்தது. இதற்குப் பிறகு ஜப்பான்மீது பலவிதமான வர்த்தக நிர்ப்பந்தங்கள் பிரயோகிக்கப்பட்டன. ஆகவே, ஐரோப்பிய வல்லரசுகளும் அமெரிக்காவும் தம் விரோதிகளாய் வருகின்றன என்று ஜப்பானிய ராஜதந்திரிகள் நினைத்ததில் ஆச்சரியமொன்றுமில்லை. ஆகவேதான், ஜப்பான் வேறு வழியின்றி, ஸர்வதேச ஒழுக்க முறையையும் உடன்படிக்கைகளையும் அலட்சியம் செய்து, சீனுவில் ஆக்ரமிப்புக்கு வேண்டிய ஸந்நாஹங்களைச் செய்யலாயிற்று.

1924-முதல் 1927-வரை, ஜப்பானிய ராணுவ வெறியர்கள், முற்போக்குக் கோஷ்டிகளுக்குச் சற்று பணிய வேண்டிய நிலைமை இருந்துவந்தது. 1924-ல் பாரன் கேடோ என்பவர் சர்க்காரை அமைத்தார். அவர் அடுத்த வருஷம் வயது வந்த எல்லா ஆண்களுக்கும் வோட்டுரிமை கொடுக்கும் மசோதாவை நிறைவேற்றி வைத்தார். அவர் 1926-ல் காலமானுர். 1927-ல் பெரிய பண நெருக்கடியை ஜப்பான் சமாளிக்கவேண்டி ஏற்பட்டது. ஆகவே, சர்க்காரில் மாறுதல் ஏற்பட்டது. ஜேனரல் டனைகா என்ற தளகர்த்தர் முதல் மந்திரியானுர். அவர் 1927 ஜூலை 25உ சக்ரவர்த்தியிடம் நீண்டதோர் விக்ஞாபனத்தைச் சமர்ப்பித்தார். உலகத்தையே ஜப்பான் ஜெயிக்கப் பேராவல் கொண்டதென்பது அதிலிருந்து தெரிகிறது. ஆனுல் உலக வெற்றிக்கு

முதற்படியாக, மஞ்சூரியாவையும் மங்கோலியாவையும் ஜெயித்துக்கொண்டு, பிறகு சீன முழுவதையும் கைப்பற்றி ஸ்திரப்படுத்திக்கொண்டு, இறுதியாக ஆசியா முழுவதிலும் தங்கள் ஆதிக்கம் ஏற்படவேண்டுமென்பது அவருடைய திட்டம். பொருளாதார ஆதிக்கத்தை ஸ்திரப்படுத்திக்கொள்ளப் பெரிய ரயில்வே விஸ்தரிப்புத் திட்டங்களை நிறைவேற்றிவைக்கவும் அவர் விரும்பினர். அவர் இம்மாதிரி விக்ஞாபனத்தைச் சமர்ப்பிக்கவில்லை என்று மறுக்கப்பட்ட போதிலும் பின்னல் நடைபெற்ற சம்பவங்களைப் பார்த்தால் இது உண்மையிலேயே நடந்திருக்கக்கூடும் என்றுதான் நம்பவேண்டியிருக்கிறது.

அதற்குப் பின் ஜப்பான் மகாயுத்தத்தினல் அமோகமாய் வளர்ந்த தன் தொழில்களை முன்னுக்குக் கொண்டு வருவதிலும் உலக மார்க்கெட்டைக் கைப்பற்றுவதிலும் மும்முரமாயிருந்தது. பிறகு நடைபெற்ற மஞ்சூரிய ஆக்ரமிப்பு, வடசீன விஸ்தரிப்பு முதலியனவற்றைப் பற்றிய விவரங்களை வேறிடத்தில் காணலாம்.

ஜப்பான் சங்கத்திலிருந்து விலகிய பின் 1934 ஏப்ரல் 17உ ஒரு அறிக்கையை விடுத்தது. வெளிநாடுகள் சீனவில் கை வைக்கக்கூடாது என்பதுதான் அதன் பொருள். ஒன்பது வல்லரசுகள் ஒப்பந்தத்தைப் பிரிட்டன் ஞாபகப்படுத்தியது. அமெரிக்காவும் ராஜதந்திர முறையில் ஒரு இலேசான எச்சரிக்கையை அனுப்பியது.

இதற்குப் பின் ஸ்பெயின் யுத்தம் நடை பெற்றதும் வல்லரசுகள் ஒரு புதிய பெரிய ஐரோப்பியப் பிரச்னையைச் சமாளிக்க வேண்டிய நிலைமை எற்பட்டதும், ஜப்பான் பிரிட்டனுக்கு இயற்கையிலே விரோதிகளான ஐரோப்பிய வல்லரசுகளுடன் உறவாட ஆரம்பித்தது. ஸோவியத் ரஷ்யா பார்லிமெண்டரி ஜனநாயக அரசியல் முறையைப் பின்பற்ற முற்படவே, பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா, ரஷ்யா நான்கும் ஒன்றுசேர்ந்துவிடக் கூடும் என்ற பயமும் ஜப்பானுக்கு எற்பட்டது. ஆகவே, மிகவும் பக்குவமான முறையில் கிடைத்த ஸர்வதேச சந்தர்ப்பங்களை ஜப்பான் முற்றிலும் பயன்படுத்திக்கொள்ள விரும்பியதில் ஆச்சரியமில்லை. 1936-நவம்பர் 25உ, ஜப்பானும் ஜெர்மனியும், ஸோவியத் ரஷ்யாவுக்கு எதிராகச் செய்துகொண்ட பொதுவுடைமை-எதிர்ப்பு உடன்படிக்கை, ஜப்பானின் சமீபகால சரித்திரத்தில் மிகவும் முக்கியமான அம்சமாகும். இந்த ஒப்பந்தத்தில் ஒரு பாகமே பிரசுரிக்கப்பட்டுள்ளது. இதன்கூட ஒரு இரகசிய ஒப்பந்தமும் செய்துகொள்ளப்பட்டிருப்பதாகப் பலர் நம்புகின்றனர். இந்த உடன்படிக்கையில், சீன யுத்தம் இவ்வருஷம் ஆரம்பமான பின், நவம்பரில் இத்தாலியும் கையெழுத்துச் செய்துள்ளது. நவம்பர் 25உ, இந்த ஒப்பந்தத்தின் முதல் வருஷ விழாக் கொண்டாட்டத்தின் போது, ஜெர்மனியும் ஜப்பானும் பரிமாறிக்கொண்ட வாழ்த்துத்

தந்திகளும், "ரோம்-பெர்லின் அச்சு டோகியோ வரை நீளுகிறது" என்று ஜெனரல் கோயரிங் ஐரோப்பாவைப் பயமுறுத்தி யிருப்பதும் குறிப்பிடத் தக்கவை. ஸ்பெயின் யுத்தம் ஆரம்பமானதுமுதல், ஜப்பான் சீனவில் மற்றொரு பாகத்தை விழுங்குவதற்கு ஏற்பாடுகளைச் செய்து, போரை ஆரம்பிக்க ஏதாவது ஒரு சாக்கு கிடைக்குமா என்று பார்த்துக்கொண்டிருந்தது. அதுவும் சென்ற வருஷம் ஜுலை 7ல் கிடைத்தது. போரை எதிர் பார்த்துத்தான் ராணுவத்தினர், சென்ற வருஷம் பொதுத் தேர்தலில் மெஜாரிடி ஸ்தானங்களைப் பெற்ற ராஜீயக் கக்ஷிகளிடம் ராஜாங்கத்தை ஒப்படைக்க விரும்பவில்லை. சக்ரவர்த்தி, இளவரசர் கோனேய் என்ற ராணுவ அனுதாபியை முதல் மந்திரி யாக்கினர். அவருக்குப் பூர்ண ஒத்துழைப்பு அளிப்பதாக, சக்ரவர்த்தியின் கட்டளைப்படி ராஜீயக் கக்ஷித் தலைவர்கள் வாக்களித்தனர். கொஞ்சநஞ்ச மிருந்த எதிர்ப்பும் அடக்கு முறையின் மூலம் சமாளிக்கப்பட்டது.

---

## ஏழாவது அத்தியாயம்

## ஜப்பான் சீனவை விழுங்குவதேன்?

### ஜன அபிவிருத்தியின் வேகம்

இந்த நூற்றுண்டில் ஜப்பான் எவ்வளவு விரைவில் முன்னேறி யிருக்கிறதென்பதைப் பற்றி இங்கு கவனிப்போம். ஜப்பானின் ஜனத்தொகை 640 லக்ஷம். மொத்த விஸ்தீர்ணம் 1,47,593 சதுர மைல். சாகுபடி நிலத்தை மட்டும் எடுத்துக்கொண்டு பார்த்தால் ஒரு சதுர மைலுக்கு 2,500 பேருக்குமேல் ஜீவிக்கவேண்டி யிருக்கிறது. நிலத்தை மட்டும் நம்பியிருந்தால் அவர்கள் எக்காலும் பிழைக்க முடியாதென்பது இதிலிருந்து தெரிகிறது. சுற்றிலும் காலி நாடுகளே கிடையாது. சீன நீங்கலாக மற்றவை யெல்லாம் வெள்ளையர் வசமிருக்கின்றன. ஒவ்வொரு வருஷமும் ஜனத்தொகை 7½ லக்ஷம் வீதம் அதிகமாகிக்கொண்டு வருகிறது. சென்ற இரண்டு தலைமுறைகளில் மட்டும் ஜப்பானியத் தீவுகளின் ஜனத்தொகை இரு மடங்காகிவிட்டது. இப்படி வளர்ந்து வரும் சமூகத்துக்கு அதிகப்படியான இடம் கிடைக்காவிடில் உலகிற்குப் பேராபத்துத்தான் என்று பலர் எச்சரிக்கை செய்துவந்தனர். ஆனால், அப்பொழுதெல்லாம் அத்தகைய பேச்சுக்களைப் பரிகசிப் போர்தான் அதிகமாயிருந்தனர். விருத்தியடைந்து

வரும் ஜப்பானியர் குடியேறி, தொழில் செய்து, வாழ்க்கை நடத்த இட வசதி செய்து கொடுத்தால்தான் ஜப்பானிய ஏகாதிபத்தியம் நிலைபெற்றிருக்க முடியும். ஆகையால் இந்த நூற்றுண்டின் ஆரம்பம் முதல் அதிலேயே ஜப்பான் கண்ணுங் கருத்துமா யிருந்துவருகிறது. இதுவே ஜப்பானின் ஜீவாதாரப் பிரச்னே. 1878-ல் 3 கோடியாக இருந்த ஜனத்தொகை இப்போது 6½ கோடியாகிவிட்டது. 1922-முதல் 1930-வரை 8 வருஷங்களில் ஜப்பானின் ஜனத்தொகை 60 லக்ஷம் உயர்ந்துவிட்டது. ஆஸ்ட்ரேலியாவின் ஜனத்தொகையே 60 லக்ஷந்தான் என்பது குறிப்பிடத்தக்கது. தன் பெரிய ஜனத்தொகைக்கு உணவுப் பொருட்களைத் தயாரிப்பதுகூட ஜப்பானுக்கு அசாத்தியமாகிவிட்டது. ஜனங்கள் பெருவாரியாக வேறிடங்களில் குடியேற வேண்டியது அவசியம். மஞ்சூரியா பிரச்னேயை ஒருவாறு தீர்த்துள்ளது.

## குடியேற இடம் தேவை

ஆனுல், இன்னம் 20 வருஷம் கழிந்தால் பிரச்னே மீண்டும் இப்போதைய நிலைமைக்கு வந்துவிடும். அது ஏற்படுமாறு விட்டால், உள்நாட்டில் குழப்பமும் புரட்சியும் ஏற்படுவது நிச்சயம். இதை ஜப்பானிய ஆளும் வர்க்கத்தினர் அனுமதிக்கத் தயாராயில்லே. எல்லா ஏகாதிபத்தியங்களின் போக்கும் அப்படியே.

வெளிநாடுகளுக்குக் குடியேறுவது தவிர வேறு வழியில்லை. ஆனால், அமெரிக்கா, கானடா, ஆஸ்ட்ரேலியா மூன்று பெரிய நாடுகளும் ஜப்பானியர் குடியேற்றத்தை அனுமதிக்க மறுத்துவிட்டன. பசிபிக் சமுத்திரத்தின் மத்தியிலுள்ள ஹவாயீ (அமெரிக்கா) தீவுகளிலும் இதர தீவுகளிலும் ஜப்பானியர் கொஞ்சம் குடியேறியுள்ளனர். ஆனால் அவர்களுடைய எண்ணிக்கை, இப்போதைய உலகப் போக்கில் குறையுமே ஒழிய நீடிக்க முடியாது. 30 வருஷங்களுக்குப் பிறகு, ஜப்பான் மஞ்சூரியாவில் விசேஷ உரிமைகளைப் பெற்று 2 லக்ஷம் பேர்களைத் தான் குடியேற்ற முடிந்தது. அங்கு இருக்கும் சீனர் 3 கோடிப் பேர்: ஜப்பானியர் குடியேற்றத்துக்கு அவ்வளவு வசிகாமாயில்லை. தென் அமெரிக்காவுக்கு மட்டும் வருஷம் 10,000 பேர்களும், இதர இடங்களுக்கு 10,000 பேர்களும் குடியேறுகின்றனர்.

## குடியேறுவதற்குத் தடைகள்

ஹவாயீ தீவில், 1900-த்தில் 12,360 ஜப்பானியர் இருந்தனர். 1920-ல் தொகை 1,09,274 ஆகிவிட்டது. இப்போது ஜப்பானியர் அங்குள்ள அமெரிக்கரைவிட 10 மடங்கு இருக்கின்றனர். எந்த நிமிஷத்திலும் அவர்கள் அமெரிக்காவுக்கு எதிராகக் கலகம் செய்து அவர்களைச் சங்கடமான நிலைமையில் வைத்துக்கொள்ள முடியும். இம்மாதிரி ஜப்பானியர் விருத்தியடைவதைச்

சுட்டிக் காட்டித்தான், ஆஸ்ட்ரேலியா வெள்ளையரல்லாதாரை அனுமதிப்பதில்லை என்று சங்கற்பம் செய்து கொண்டிருப்பது. ஜப்பானியர் குடியேறக்கூடிய இதர இடங்கள் பிரிட்டிஷ் கொலம்பியாவும் கலிபோர்னியாவும். இவை யிரண்டிலும் ஜப்பானியர் அடியெடுத்து வைக்கக் கூடாதென்று சட்டமிருக்கிறது. ஆஸ்ட்ரேலியாவில் சதுரமைலுக்கு நால்வரே வசிக்கின்றனர். அதன் வடக்குப் பாகத்திலுள்ள முக்கால்வாசி நிலப்பரப்பு வெள்ளையர் குடியேற்றத்துக்கு ஏற்ற சீதோஷ்ணம் வாய்ந்ததாயில்லை. ஆகையால், அது கிடைத்தால் ஜப்பானியர் ஆசையுடன் விரும்புவர். ஆனல், அதற்கு இடங்கொடுத்தால் சீக்கிரத்தில் பிரிட்டனுக்கும் ஜப்பானுக்கும் அது பெரிய போர்க்களமாய்விடும். ஆகையால் பிரிட்டன் அந்த யோசனையை உறுதியுடன் எதிர்த்து வந்திருக்கிறது.

## சீனதான் மிச்சம்

எல்லாம் போக மிச்சமிருப்பது சீனதான். சீனவில் ஜனத்தொகை அபாரமாயினும் நிலப்பரப்பும் அதிகம். அவ்வளவு பெரிய ஜனசமூகம் அடுத்தாற்போலிருப்பது முதல்தரமான மார்க்கெட்டல்லவா? ஆகையால்தான் ஜப்பான் சீனமீது பல வருஷங்களாகவே இடைவிடாமல் கவனம் செலுத்தி வந்திருக்கிறது. 1931-க்கு முன்னமேயே சீனமீது ஜப்பான் படை

யெடுத்திருக்கும். அது ஏற்படாமலிருந்ததற்குக் காரணம் இரண்டு. ஒன்று ஜப்பானிய ஆலைப் பண்டங்களை வாங்கவேண்டிய சீனரின் நல்லெண்ணத்தை இழக்க ஜப்பானியர் விரும்பாதது. இரண்டாவது காரணம், சீனுவில் பிறர் இடம் பெறுவதை அமெரிக்கா இடைவிடாமல் ஆட்சேபித்து வந்திருப்பதே. சீனுவின் சரித்திரத்தில் பல உள்நாட்டு யுத்தங்களும், புரட்சிகளும், கலகங்களும் நேர்ந்திருக்கின்றன. அப்போதெல்லாம் சீனுவின்மீது பாய்வதற்கு ஜப்பானுக்குப் பேராவல் இருந்துகொண்டு தான் வந்தது. ஆனுல் உடன்படிக்கைகளை மீறினுல், பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ் போன்ற வல்லரசுகள் இவ்வளவு கோழைத்தனமாக ஒதுங்கிவிடுமென்று ஜப்பான் கனவிலும் நினைக்கவில்லை. ஆகையால்தான் கையெழுத்துச் செய்திருந்த ஒன்பது வல்லரசுகள் ஒப்பந்தமும், கெல்லாக் யுத்த ஒழிப்பு உடன்படிக்கையும், சங்க உடன்படிக்கையும் அடிக்கடி அதன் கண்முன் தோன்றிப் பயமுறுத்தி வந்தன. ஆகையால்தான் வெறும் மிருகபலப் பிரயோகத்தின் மூலம் தன் மனூருசையை நிறைவேற்றிக்கொள்ளும் நாளை அது தள்ளிப் போட்டுக்கொண்டே வந்தது. பலாத்காரத்தை உபயோகித்து நாடு பிடித்தால், மற்ற எல்லா வல்லரசுகளும் சங்க உடன்படிக்கைப்படியும் இதர ஒப்பந்தங்களின்படியும் தன்னை ஒருமுகமாக எதிர்க்குமோ என்ற பயம் நெடுங்காலம் வரை ஜப்பானை விட்டகலவில்லை.

தான்தான் சீனாவின் மிகச் சிறந்த நண்பன் என்று அமெரிக்கா உலகிற்கே பறைசாற்றியிருந்தது இந்தப் பிரச்னையைச் சிக்கலாக்கிவிட்டது. முக்கியமாய் அமெரிக்காவின் விரோதத்தைச் சம்பாதித்துக்கொள்ள ஜப்பானுக்குத் தைரியமில்லை.

## மேல்நாட்டு ஏகாதிபத்தியங்களின் உஷார்

ஜப்பான் விஸ்தரிக்க விரும்பும் இடங்களில் எல்லாம் பெரிய வல்லரசுகள் ஏற்கனவே உறுதியான பந்தோபஸ்துடன் எதற்கும் தயாராக அமைந்திருக்கின்றன. வேறு நிறத்தவரை அவை அங்கு விடுவதில்லை. ஜப்பானே இடம் பெற்றாக வேண்டியிருக்கிறது. ஆகையால் எதோ ஒரு சமயத்தில் இந்தச் சிறு பொறி பெருந் தீயாக வளர்ந்துதான் தீரும்.

மஞ்சூரியாவை ஜப்பான் ஜெயித்தது அதன் தேச மக்களைச் சற்று சாந்தப்படுத்தியது. ஆனால், ஜப்பானியக் குடியேற்றப் பிரச்னை தீர்க்கப்பட்டாலொழிய, நிரந்தரமான சமாதானம் இருக்குமென்று நினைக்க முடியாது. மற்ற நாடுகளில் இடம் தேடுவதிலுள்ள செலவு, அபாயம் எல்லாவற்றையும் ஜப்பான் நன்குணர்ந்துள்ளது. ஆகையால்தான் சகலவிதமான உபாயங்களையும் அனுஷ்டித்து, சீனாவைத் தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவந்து விடுவதென்று கங்கணம் கட்டிக் கொண்டுள்ளது.

## ஜப்பானின் பொருளாதார நிலைமை

ஜப்பானிய ஜனத்தொகையில் பாதி விவசாயத்திலும், மற்ற பாதி தொழில்களிலும், இதர உத்தியோகங்களிலும் இருந்துவருகின்றனர். 1925-ஜனசங்கியைப்படி அந்நாட்டிலுள்ள குடும்பங்களில் 55·6% விவசாயத்தில் ஈடுபட்டிருந்தன. விவசாயத்தில் போடப்பட்டிருந்த மூலதனம் 3,945 கோடி யென்.

### மூலதன விநியோகம்

| தொழில். | கோடி யென். | விகிதாசாரம் |
|---|---|---|
| விவசாயம் | 3,470 | 47·1 % |
| வர்த்தகம் | 1,300 | 17·6 ,, |
| தொழில்கள் | 1,000 | 13·6 ,, |
| மற்றவை | 2,400 | 21·7 ,, |
| மொத்தம். | 8,170 | 100 % |

விவசாயத்தில் ஈடுபட்டுள்ள குடும்பங்கள் 5·5 லக்ஷம். மொத்தம் சாகுபடி 150 லக்ஷம் ஏகர் நிலம். முக்கியமான பயிர் நெல்தான். மொத்தச் சாகுபடியில் பாதிக்கு மேல் நெல்தான். பார்லி, பீன்ஸ், பட்டாணி, கோதுமை, சர்க்கரை வள்ளிக்கிழங்கு முதலியனவும் விளைகின்றன. 1925-ல் மொத்த மகசூல் 444 கோடி யென். அதில் நெல் மட்டும் 250 கோடி. நெல் மகசூலும் ஜப்பானில்தான் அதிகப் பலனளிக்கிறது. 1927 கணக்குப்படி :

| | | |
|---|---|---|
| அமெரிக்காவில் ஏகருக்கு | 1,130 | ராத்தல். |
| பிரிட்டிஷ் இந்தியா | 805 | ,, |
| ஜாவா | 970 | ,, |
| ஜப்பான் | 2,510 | ,, |

இதற்குக் காரணம் ஜப்பானிய விவசாய இலாகா செய்துவந்திருக்கும் அரிய ஏற்பாடுகளே. விவசாயிகளின் முக்கியமான உப தொழில் பட்டுப்பூச்சி வளர்ப்பது. நெல் சாகுபடிக்குள்ள முக்கியத்துவம் இதற்கும் உண்டு. இதிலிருந்து கிருஷிகர்களுக்கு மற்றொரு பங்கு வருமானம் கிடைக்கிறது. 1920-ல் ஒரு குடியானவனுக்குச் சராசரி வரவைவிட செலவு 4 பவுன் 10 ஷில்லிங் அதிகமாயிருந்தது. 1928-ல் தானே சாகுபடி செய்பவனுக்கு 18 பவுனும், குத்தகைக்கு விடுபவனுக்கு 2 பவுனும் சராசரி மிச்சம் ஏற்பட்டது. இதற்குக் காரணம் பட்டுத் தொழிலின் அபிவிருத்தியே. ஜப்பானியர் எவ்வளவு மும்முரமாய்ப் பாடுபட்டபோதிலும் வருஷா வருஷம் 60 லக்ஷம் மூட்டை அரிசியை இறக்குமதி செய்தாக வேண்டியிருக்கிறது. ஜப்பானில் புலன்களில் பல ஓரே ஏகர் விஸ்தீர்ணமுள்ளவை.

1927-ல் பட்டுப்பூச்சித் தொழிலில் கவனம் செலுத்திய குடியானவர்கள் 18,47,895. 1930-ல் இது 22,15,674 குடும்பங்களாய்விட்டது. முசுக்கட்டைச் செடி 1929-ல் 16 லக்ஷம் ஏகர் சாகுபடியாயிருந்தது.

ஜப்பானின் விஸ்தீரணத்தில் பாதி காடு. ஒரு ஆயிரம் தினுசு மரங்கள் இவற்றில் வளர்கின்றன. 1929-ல் இவற்றிலிருந்து 10 கோடி யென் வருமானம் கிடைத்தது. 1920-வரை ஜப்பான் மரத்தை ஏற்றுமதி செய்துவந்தது. ஆனல், பிறகு தேசத்தின் தேவைகள் அதிகரிக்கவே அவற்றை இறக்குமதி செய்து வருகிறது. ஜனங்களுக்கு வேண்டிய உணவுப் பொருட்கள் குறைவின்றிக் கிடைப்பதற்காக ஜப்பானிய சர்க்கார் கவனம் செலுத்தி வருகின்றனர். 1929-ல் 7,74,091 பேர்கள், இயந்திர சக்தியுடன் செலுத்தப்படும் படகுகளில் மீன் பிடிக்கும் தொழில்களை நடத்தினர். அவர்கள் பிடிக்கும் மீன்களின் எடையும் வருஷா வருஷம் அதிகமாகிக் கொண்டு வருகிறது. பெரிய தொழிற்சாலைகள் 19-வது நூற்றண்டின் கடைசியிலேயே ஏராளமாய் ஆரம்பிக்கப்பட்டன. 1905-ல் ரஷ்யாவை ஜப்பான் தோற்கடித்த போதே அதன் தொழில் வன்மை சீராயிருந்தது. மின்சாரசக்தியின் விஸ்தரிப்பும் உபயோகமும் சுறுசுறுப்பாய் அதிகரிக்கப்பட்டு வந்தன.

## தொழில் அபிவிருத்தி

1914-ல் ஆரம்பமான மகாயுத்தத்தில் தொழிலுலகில் ஜப்பானுக்குப் போட்டியான முக்கியமான எல்லா நாடுகளும் ஈடுபட்டிருந்ததால், ஜப்பானியத் தொழில முன்னணிக்கு வருவது மிகவும் இலகுவாய்விட்டது.

ஏற்றுமதி மார்க்கெட்டை ஜப்பான் வெகு சுலபத்தில் விருத்திசெய்து நிலைநாட்டிக் கொண்டது. குறைந்த காலத்தில் விரிவான மார்க்கெட்டைக் கைப்பற்றுவதே ஜப்பானிய முதலாளிகளின் நோக்கமா யிருந்ததால், தயாரித்து அனுப்பும் சாமான்களின் உறுதியைப்பற்றி அவர்கள் போதிய கவனம் செலுத்தவில்லை. ஆகையால் பல வருஷங்கள்வரை, ஜப்பான் சாமான் என்றால் உதவாக்கரை என்ற ஸர்வ தேசப் பெயர் கிடைத்து விட்டது. இது சர்க்காருக்கு மிகுந்த கவலையைக் கொடுத்தது. அவர்களுடைய நிர்ப்பந்தத்தின்பேரில், சாமான்களின் உறுதியை மேம்படுத்தச் சுறுசுறுப்பான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஏற்றுமதி அத்தாக்ஷி அளிக்க நியமிக்கப்பட்டுள்ள ஸ்தாபனத்தார் இதில் கவனம் செலுத்தி வருகின்றனர். இன்று ஜப்பானிய சாமான்கள் மட்டமானவை என்ற பெயர் அநேகமாய் நீங்கிவிட்டது என்று கூறலாம். 1929-ல் ஜப்பானி லிருந்த தொழிற்சாலைகள் 59,887. ஐந்து பேருக்கு மேல் வேலை செய்யும் ஸ்தாபனங்களெல்லாம் தொழிற் சாலைகளென்று மதிக்கப்படுகின்றன. சுமார் 19 லக்ஷம் பேர் பலவேறு தொழில்களில் ஈடுபட்டிருந்தனர். சுமார் 10 லக்ஷம் பேர் நெசவாலைத் தொழிலில் ஈடுபட் டுள்ளனர். மேல்நாடுகளுடன் ஒத்திட்டுப் பார்க்கு மிடத்து ஜப்பானியத் தொழிலாளரின் சம்பள விகிதங் கள் மிகவும் குறைவாயும், வேலை நிலைமைகள் சற்று

மோசமாகவும் இருந்து வருகின்றன. ஜப்பானின் பொருளாதார அமைப்பில் மிகவும் முக்கியமான ஒரு அம்சம், சொற்ப மூலதனத்தைக் கொண்டு அநேகமாய் ஒவ்வொரு கிராமத்திலும், தெருக்களின் கோடிகளில் அமைக்கப்பட்டுள்ள சாலைகளில் நடந்துவரும் குடிசைத் தொழில்களே. விளையாட்டுச் சாமான்களெல்லாம் இத்தகைய சிறிய தொழிற்சாலைகளிலேயே பெண்களால் தயாரிக்கப்படுகின்றன.

பட்டு: ஜப்பானிய ஏற்றுமதிகளில் முதன்மை ஸ்தானம் பெற்றிருப்பது பட்டு. உலக உற்பத்தியில் 70% ஜப்பானிலிருந்துதான் ஏற்றுமதியாகிறது. சீனுவின் ஏற்றுமதி 18%. ஆனால், உலகப் பொருளாதார மந்தம் இதை மிகவும் பாதித்துவிட்டது. 42 கோடி யென் பெறுமதியுள்ள பட்டை அமெரிக்கா மட்டும் 1930-ல் வாங்கியது. ஆனால், அடுத்த வருஷமே இது பாதியாகி விட்டது.

பருத்தி ஜவுளி: பருத்தி ஜவுளித் தொழிலில் ஜப்பானின் முன்னேற்றந்தான் மிகவும் ஆச்சரியகரமானது. 30 வருஷங்களில் பட்டுக்கு அடுத்த நிலைமைக்கு இது வந்துவிட்டது. 1930-ல் ஜப்பானின் மொத்த ஏற்றுமதியில் இது 25% ஆகிவிட்டது. மெஷின்களும் பருத்தியும் வெளிநாடுகளிலிருந்துதான் வரவேண்டியிருந்தது என்பதைக் கவனிக்கையில் எவ்வளவு முதல்தரமாக ஜப்பானியர் இத் துறையில் முன்னேறி

யுள்ளனர் என்பது புலப்படும். ஜப்பானின் பிரதான ஜவுளி மார்க்கெட்டுகள் இந்தியாவும், சீனவும், இதர ஆசிய நாடுகளுந்தான். 1912-ல் இந்தியாவுக்கு வந்த பிரிட்டிஷ் ஜவுளி 98%. ஜப்பான் 1%கூட அனுப்ப வில்லை. ஆனல் இந்தியாவில் இப்போது பிரிட்டிஷ் ஜவுளியைவிட ஜப்பானிய ஜவுளிதான் அதிகம் இறக்கு மதியாகிறது. மலாய் நாட்டிலும் ஜப்பானிய ஜவுளிக்குத் தான் அதிகக் கிராக்கி. செயற்கைப் பட்டுத் தொழிலி லும் தனக்கு நிகர் யாருமில்லை என்ற நிலைமையை ஜப்பான் ஏற்படுத்திக் கொண்டது.

## முக்கியமான தொழில்கள்

மின்சார உற்பத்தி மெஷீன்கள், இதர மெஷீன்கள் முதலியவற்றைத் தயாரிக்கும் கம்பெனிகள் 1,610 இருக் கின்றன. கப்பல்கள் கட்டும் கம்பெனிகள் 83. இந்தத் தொழில்தான் ஜப்பானுக்கு வேண்டிய போர்ச் சாதனங் கள் தங்கு தடையின்றிக் கிடைத்து வருவதற்கு முக்கிய மான காரணம். சமீபகாலத்தில், அமெரிக்க மோட்டார் களுடன் போட்டி போடக்கூடிய கார்களையும் ஜப்பான் தயாரிக்கத் துணிந்திருக்கிறது. சோப்புகள், வல்கனைட் சாமான்கள் முதலியவையும் ஏராளமாய் உற்பத்தி செய் யப்படுகின்றன. 9 கம்பெனிகள், 165 மெஷீன்களைக் கொண்டு வருஷத்திற்கு $7\frac{1}{2}$ லக்ஷம் டன் காகிதத்தை உற்பத்தி செய்கின்றன. வெடிமருந்து சாமான்களெல்

லாம் விசேஷமாய் உற்பத்தியாகின்றன. ஜப்பானியத் தொழிலாளர் இயக்கம் ஆரம்பத் தசையி லிருந்துவரு கிறது. அதற்குக் காரணம் அங்குள்ள பாஸிஸ்ட் ஆக்ஷி முறையே. அப்படியிருந்தும் ஏதோ கொஞ்சம் வேலை நடந்து வருகிறது. மொத்தமுள்ள 50 லக்ஷம் தொழி லாளரில் 3,75,000 பேர்கள்தான் 20 வருஷ வேலைக் குப் பின் சங்கங்களில் சேர்ந்துள்ளனர்.

## அபிவிருத்தித் திட்டம்

1930-ல் ஸெயூகாய் கக்ஷியின் ஆதரவின்கீழ் நிய மிக்கப்பட்ட ஒரு கமிஷன் ஜப்பானுக்கு ஒரு ஐந்து வருஷத் தொழில் அபிவிருத்தித் திட்டத்தைத் தயாரித் துக்கொடுத்தது. இதன்படி சர்க்கார் வருஷா வருஷம் எல்லாத் தொழில்களுக்குமாக 12 கோடி யென் பண உதவி யளிப்பதென்றும், அவை வருஷா வருஷம் 100 கோடி யென் பெறுமதியுள்ள அதிகப்படி சாமான்களைத் தயாரிக்க வேண்டுமென்றும் திட்டம் வகுக்கப்பட்டது. இது ஒப்புக்கொள்ளப்பட்டது. இதன்படி வருஷா வருஷம் 20 கோடி யென் வரை ஏற்றுமதி செய்வ தென்று தீர்மானிக்கப்பட்டது. சாதாரண காலங்களில் ஜப்பானின் இறக்குமதிகள் 240 கோடி யென். இதைக் குறைந்தது 180 கோடியாகக் குறைத்துவிட முடியு மென்று ஜப்பானியர் நம்புகின்றனர். இந்த 5 வருஷத் திட்டத்துக்கு வேண்டிய பணத்தைப் பெற ஜப்பான்

தீவிர முஸ்தீபுச் செய்தது. தங்க ஏற்றுமதித் தடை நீக்கப்பட்டது. வரிகள் உயர்த்தப்பட்டன. இந்த விதமாக ஜப்பான் வேண்டிய பணத்தைப் பெற்றது.

## மூலப் பொருட்கள் பிரச்னை

ஆனல், தொழிற்சாலைகளும் இதர வசதிகளும் எவ்வாறிருந்த போதிலும், மூலப்பொருட்கள் அவசியமல்லவா? அதுதான் ஜப்பானுக்குப் பெரிய பிரச்னை. எப்பொழுதும் இடைவிடாமல் மூலப் பொருட்கள் கிடைத்துவரும் என்ற உத்தரவாத மில்லாவிடில் தொழில்கள் நடைபெற மாட்டா. தன் தேவைக்கு அதிகமாக ஜப்பான் தயாரிக்கும் ஒரு உலோகம் தாமிரந் தான். இரும்பு, நிலக்கரி, பெட்ரோல் போன்றவை தேவைக்குக்கூடச் சரியாக உற்பத்தியாவதில்லை. இப் போதுள்ள இரும்புச் சுரங்கங்கள் சீக்கிரம் காலியாகி விடும். ஆகையால் தான், இரும்புச் சுரங்கங்கள் நிறைய இருக்கும் மஞ்சூரியாவை ஜப்பான் பிடித்தது. போர்ச் சாதனங்களுக்கும் ஜப்பானின் தொழிலுக்கும் மஞ் சூரியா எவ்வளவு ஜீவாதாரமென்பது இதிலிருந்து விளங்கும்.

1907-ல் ஜப்பானிய ஆதிக்கத்துக்கு உட்பட்ட நாடுகளில் நிலக்கரி அற்றுப்போம் என்று தெரிந்தது. மஞ் சூரியாவில் அபரிமிதமான நிலக்கரிச் சுரங்கங்களுண்டு. "மஞ்சூரியா இருக்கும் வரை நிலக்கரியைப்பற்றி ஜப்

பான் கவலைப்படவேண்டியதில்லை" என்று ஒஸாகா மைனிசி என்ற பத்திரிகை 1932 ஜூன் 25ல் கூறியிருக்கிறது.

## பெட்ரோல் நிலை

பெட்ரோல் சம்பந்தமாகத்தான் ஜப்பானின் நிலைமை மிகவும் அதிருப்திகரமாயிருக்கிறது. 1930-ல் 41¼ கோடி காலன் செலவாயிற்று. இதில் 33¾ கோடி காலன் இறக்குமதியாயிற்று. கெரோஸீனும், மெஷின்களில் எரிக்க உபயோகிக்கப்படும் இதர எண்ணெய்களும் வெளிநாடுகளிலிருந்துதான் இறக்குமதியாகின்றன. மஞ்சூரியாவிலிருந்து கிடைக்கக்கூடிய எண்ணெய் மிகக் கொஞ்சமே. ஆகையால், எண்ணெய் சம்பந்தப்பட்டவரை, ஜப்பான் சாசுவதமாக வெளிநாடுகளையே எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறது. மஞ்சூரியாவை ஜப்பான் பிடித்ததற்கு 2 வருஷங்கள் முன்னமேயிருந்தே அதன் இரும்பு, நிலக்கரி, பருத்தி ஏற்றுமதிகளெல்லாம் அநேகமாய் ஜப்பானுக்கே போய்க்கொண்டிருந்தன. 1930-ல் சீனுவிலிருந்துதான் ஜப்பான் அதிகமான மூலப் பொருட்களை இறக்குமதி செய்திருக்கிறது. இப்போதைய தேசியப் பெருவெள்ளத்தில், சீனு மூழ்கியிருப்பதால், ஜப்பான் அங்கிருந்து மூலப் பொருட்களை சுலபமாய்ப் பெறுவது முடியாத காரியம். ஆகையால்தான் 1930-ல் 12 கோடி யென் மதிப்புள்ள

மூலப் பொருட்களை சப்ளை செய்த மஞ்சூரியாவை, ஜப்பான் தன் ஏகபோக மாக்கிக்கொண்டது. மஞ்சூரியப் போரில் ஜப்பான் தோற்றிருந்தால் என்றென்றைக்கும் தலை தூக்க முடியாதவாறு அது அமிழ்ந்து போயிருக்கும்.

## தேசியக் கடன்

1868-ல் ஜப்பானின் தேசியக் கடன் 48 லக்ஷம் யென்னாக இருந்தது. ரஷ்ய யுத்தம், சீன-ஜப்பானிய யுத்தம் முதலியன சேர்ந்து 1905-ல் இதை 219 கோடியாக்கின. அடுத்த வருஷத்திலேயே ரயில்வேக்களைத் தேசிய மயமாக்குவதற்காக 61 கோடி கடன் வாங்கப்பட்டது. 1923-ல் ஏற்பட்ட பயங்கரமான பூகம்பத் தாக்குப் பின் இது 388 கோடியாயிருந்தது. 1927-ல் ஏற்பட்ட பண நெருக்கடி, மஞ்சூரிய யுத்தம் முதலியன சேர்ந்து 1932-ல் இதை 631 கோடியாக்கின. 1933-34 முதல் பட்ஜெட்டுகளில் விழுந்த துண்டுத் தொகைகள் சேர்ந்து, இப்போது ஜப்பானின் கடன் 1000 கோடியாக உயர்ந்திருக்கிறது. வருஷா வருஷம் வெளி நாடுகளுக்கு மட்டும் 24 கோடி வட்டியாகக் கட்டப்படுகிறது. வட்டி விகிதம் சராசரி 5%. சென்ற சில வருஷங்களாகப் பிரிட்டன் அமெரிக்காவுடன் கடற்படை சமத்துவம் அடைவதற்கான விஸ்தரிப்புக்காகவும், சீனுவை ஜெயிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளுக்காக

வும், ஜப்பான் தன் பொருளாதார வாழ்க்கையையே யுத்த கால ரீதியில் நடத்திக்கொண்டு வருகிறது. யுத்த தளவாட விஸ்தரிப்பிலேயே முழு கவனமும் செலுத்தப்படுகிறது. வருஷம் 134 கோடி யென் வருமானமுள்ள ஜப்பானிய சர்க்கார் பாஸிஸ்ட் முறையில் நடந்து வருவதால்தான், இவ்வளவு பெரிய பளுவைச் சுமக்கத் தொழில்களை நடத்துவோர் முன்வந்திருக்கின்றனர்.

## ராணுவ ஏற்பாடுகள்

மஞ்சூரியாவிலுள்ள உரிமைகள் சம்பந்தமாக, ஜப்பானும் ரஷ்யாவும் 1904-5-ல் யுத்தம் செய்தன. இதில் கிடைத்த வெற்றியின் விளைவாகத்தான் ஜப்பானை உலகம் கண்டு திகைத்தது. ஜப்பானும் ஏகாதிபத்திய ஆசை கொள்ள ஆரம்பித்தது. ரஷ்யாவுடன் பிற்காலத்தில் யுத்தம் செய்தே தீரவேண்டிய நிர்ப்பந்தமான நிலைமை ஏற்படுமென்பது ஜப்பானிய ராஜதந்திரிகள் உணர்ந்ததே. ஆகையால் அதற்கேற்றவாறு தன் ராணுவத்தையும் கடற்படையையும் அது இடைவிடாமல் சீர்திருத்தி வந்திருக்கிறது. இந்த யுத்தத்தில் கிடைத்த வெற்றியின் காரணமாகப் பிரிட்டனுடைய நேசம் ஜப்பானுக்குக் கிடைத்தது. அதன் விளைவாகத்தான் யுத்த காலத்தில் கிழக் கோடியில் தகராறு இல்லாமலிருந்தது. இந்த அருமையான சந்தர்ப்பத்தைத் தன் தொழில்களின் அபிவிருத்திக்குப் பயன் படுத்திக்

கொள்ள ஜப்பானுல் முடிந்தது. கீழ்க் கோடியில் ஜெர்மன் உரிமைகள் மிகக் குறைவு. சீனுவின் கடற்கரையோரமாயுள்ள கியாசோ அவர்களுடையதா யிருந்தது. தெற்கே ஈக்வேட்டர் அருகில் கரோலீன் தீவுகளிருந்தன. கியாசோ மீண்டும் சீனுவுக்குச் சேர்ந்தது. கரோலீன் தீவுகள் முதலில் ஜப்பானுக்கு அளிக்கப்பட்டு, பிறகு அதன் கீழ் மாண்டேட் நாடுகளாயின. பிறகு 1921-ல் வாஷிங்டன் மகாநாடு நடைபெற்றதும் அதில் சீனு சம்பந்தமாயும் கடற்படை பலம் சம்பந்தமாகவும் எற்பட்ட ஒப்பந்தங்கள் எல்லோரும் அறிந்தவையே.

தன் விஸ்தரிப்பு முயற்சிகளை மேல்நாடுகள் உறுதியுடன் எதிர்க்கும் என்று எதிர்பார்த்து, ஜப்பான் 1921 முதல் தன் ராணுவ அமைப்பில் நுணுக்கமான கவனம் செலுத்தி வந்திருக்கின்றது. சீனுவை ஆக்ரமித்தால் பலமாய்க் கண்டிப்பது தவிர, மேல் நாடுகள் அதிகமாய் ஒன்றும் செய்ய மாட்டா என்பதும் தெரியும். ஆனுல், சீனுவில் வலுத்துவந்த ஸோவியத் இயக்கத்தையும், அதன் பலத்தையும் அது அசட்டை செய்யவில்லை. ஸோவியத் ரஷ்யா என்ன செய்யுமோ என்றும் தெரியாது. ஆகையால் சீனுவை ஸ்வீகரிப்பதில் எல்லாவற்றையும் எதிர்பார்த்தே ஜப்பான் பிளான் வகுத்தது. ஸோவியத் ரஷ்யாவுக்குப் பரம விரோதிகளாயுள்ள இத்தாலியுடனும் ஜெர்மனியுடனும் இரகசியமான ராணுவ ஒப்பந்தத்தைச் சென்ற வருஷம் செய்து கொண்டிருப்ப

தும், இப்போது ஜப்பான் செய்திருக்கும் ஆக்ரமிப்பை ஆதரித்து, சமீபத்தில் ஜெர்மனியில் முஸோலினி பகிரங்கமாகப் பேசியிருப்பதும் குறிப்பிடவேண்டிய விஷயங்கள்.

ஜப்பானிய ராணுவத்தை நவீன முறையில் தயாரிப்பதற்கு ஜெர்மன் நிபுணர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். ஜப்பானில் ஏற்கனவே கூறியுள்ளபடி 20 வயதுக்கு மேல் 40 வயதுக்கு உட்பட்ட எல்லோருக்கும் கட்டாய ராணுவ சேவைக் காலம் உண்டு. சாதாரணமாகவே, ஜப்பானிய ராணுவத்தில் 2,40,000 வீரர்களிருக்கிறார்கள். தவிர, மற்றவர்களை எப்பொழுதேனும் படை திரட்ட அதிகாரமுண்டு. 17 காலாள் சைன்யங்கள் இருக்கின்றன. அவை 34 பட்டாளங்களாக உள்ளன. அதே அளவுக்குக் குதிரைப் படை, பீரங்கிப் படை, டாங்குப் படை போன்றவை இருக்கின்றன.

எப்பொழுதும் போருக்குத் தயாராக அவை இருந்து வருகின்றன. 'எந்த சர்க்காருக்கும் ராணுவம் கீழ்ப்படியாது; உத்தரவுகளைப் பெறாது. 'சுப்ரீம் வார் கவுன்சில்' என்ற ராணுவ மந்திராலோசனை சபைதான் அதன் நிர்வாக சபை. சக்கரவர்த்திக்கு அதன் மீது ஆதிக்கமுண்டு.

ஜப்பானிய சோல்ஜர்கள், நியாயமாகவும், தியாக உணர்ச்சியுடனும், தைரியமாகவும், பொது நன்மைக்காக உழைப்பதாகவும், அமிதமாய் நடந்துகொள்வதில்லை

யென்றும் பிரதிக்ஞை எடுத்துக்கொள்வது சம்பிரதாயமா யிருந்துவருகிறது. ஜப்பானிய ராணுவத்தில் ஒரு தனி அம்சம் அதிலுள்ளோர் எல்லோரும் ஜப்பானியரே. ஆசியாவில் நேரிடக்கூடிய போர்களுக்கு ஏற்ற பயிற்சி தான் சோல்ஜர்களுக்கு அளிக்கப்பட்டு வருகிறது. ஒவ்வொரு யுத்தத்துக்கும், சகலவிதமான சந்தர்ப்பங்களையும் எதிர்பார்த்து, அததற்கேற்றவாறு நுணுக்கமான பிளான்களை ஜப்பானிய யுத்த இலாகா தயாராய் வைத்துக் கொண்டிருக்கிறது.

விமானப் படை: ஜப்பானிடம் 1639 விமானங்களடங்கிய பெரிய விமானப்படையு மிருக்கிறது. ஐரோப்பிய, அமெரிக்க அனுபவங்களை யொட்டி இந்த விஷயத்தில் விரிவான ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றது.

கடற் படை: பிரிட்டன், அமெரிக்கா, ஜப்பான் இவற்றின் கடற்படை முறையே, 5: 5: 3 என்ற விகிதாசாரத்தில் இருக்கவேண்டுமென்பது வாஷிங்டன் கடற்படை ஒப்பந்தம். ஜப்பான் கொள்கையில் அதை ஏற்றுக்கொண்ட போதிலும், நடை முறையில், மற்ற இரண்டு நாடுகளுடனும் கழுத்தறுக்கும் போட்டியில் இறங்கியிருப்பது வெளிப்படை. 1934-ல் ஜப்பானியக் கடற் படையில் 10 யுத்தக் கப்பல்களும், பெரிய குரூய்ஸர்களும், 38 இதர குரூய்ஸர்கள், 119 நாசகாரிகள், 60 சப்மரைன்கள், விமானங்களைத் தாங்கிச் செல்லும்

4 கப்பல்கள் ஆகியவையும் இருக்கின்றன. இவை தவிர இன்னும் 100 சில்லறைக் கப்பல்கள் இருக்கின்றன. இவையெல்லாம் ஒரே பிரதேசத்தி லிருந்துவருவதால் ஜப்பானை, அந்த வட்டாரத்தில் கடற்படை யுத்தத்தில் யாரும் தோற்கடிக்க முடியாது. அத்துடன் எல்லாத் துறைமுகங்களிலும் முதல்தரமான தற்காப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஏராளமான விஷவாயுக்களும், வெடி குண்டுகளும், பீரங்கிகளும், தோட்டாக்களும் இருப்பிலிருக்கின்றன.

இவ்வளவு முஸ்தீபுகளுடன் ஜப்பான் இருந்தும், மேல்நாடுகளின் தீவிர எதிர்ப்பைச் சமாளிக்க முடியுமா என்பதைப்பற்றிச் சில அந்நிய ராணுவ நிபுணர்கள் சந்தேகிக்கின்றனர். ஆனால், ஜப்பானுக்கும் ராஜதந்திரம் தெரியாமலில்லை. ஐரோப்பாவில் கொந்தளிப்பான தருணத்தில், கீழ்க் கோடியில் சிரத்தையுள்ள நாடுகள் ஐரோப்பாவில் ஜீவாதார உரிமைகளுக்கு ஆபத்து குவிந்து வருவதில் முழு கவனத்தையும் செலுத்திவரும்போது, இத்தனை நெருக்கடிக் கிடையே தன் ஆக்ரமிப்பை ஆரம்பித்துள்ளதே அதற்கு ராஜதந்திர ஞானம் அபாரமாய் உண்டு என்பதற்குப் போதிய அத்தாட்சி. ஆகையால், வல்லரசுகள் தங்களுடைய முழு பலத்துடன் ஜப்பானைத் தாக்கமாட்டா என்று எதிர்பார்க்கலாம். அதைச் சமாளித்துவிட முடியாதா என்று ஜப்பான் எதிர்பார்க்கிறது.

## ஜப்பானின் வெளிநாட்டுக் கொள்கை

பஸிபிக் சமுத்திரத்திலும் சீனவிலும் மேல்நாடுகளுக்குள்ள உரிமைகள் ஜப்பானின் போக்கால் எவ்வாறு பாதிக்கப்படும்? அவை எங்கெங்கே, எவ்வாறு மோதக்கூடும்? பலாபலன் என்னவாயிருக்கும்? இவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்க்குமுன் ஜப்பானிய சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கையைப்பற்றித் தெரிய வேண்டியது அவசியம். அதை இங்கு சுருக்கமாய் விளக்குவோம்.

## மற்ருெரு பிரிட்டனுகும்?

ஜப்பான் வெகுவிரைவில் மற்ருெரு பிரிட்டனுகி வருகிறது. இப்போது ஜனங்களில் 4% தான் எழுத்து வாசனையற்றவர்கள். 1925-ல் ஆண்மக்களெல்லோருக்கும் வோட்டுரிமை அளிக்கப்பட்டது. ஆனுல், இந்த வோட்டை அங்குள்ள பாஸிஸ்ட் ஆக்ஷிமுறை அர்த்தமற்ற ஒரு ஆடம்பர மாக்கிவிட்டது. ஜப்பானிய மக்கள் பிரிட்டிஷ் முறைகளையே அநேகமாய்த் தொழிலிலும் ராஜாங்க விவகாரத்திலும் அநுஷ்டிப்பவர்கள். அவர்களுடைய மனப்பான்மையை இங்கு தெரிந்துகொள்வது அவசியம்.

யுஸ௫கே ஸுரூமி என்பவர் பிரபல ஜப்பானிய ஆசிரியர். அவர் பின்வருவாறு கூறுகிருர்:

"ஜப்பானுக்கு வெளியிலே ஜப்பானின் முக்கியமான உரிமைகள் சீனவில்தான் இருக்கின்றன. (நான்கிங், ஷாங்

ஹாய் போன்றவையுள்ள) யாங்ட்ஸீ நதி பாயும் சமவெளி யுடன் வியாபாரம் நடத்துவதும் மஞ்சூரியாவில் கிடைத் துள்ள உரிமைகள் பறிபோகாமல் பார்த்துக்கொள்வதுந் தான் ஜப்பானின் பொருளாதார வாழ்க்கைக்கு இன்றியமை யாதவை.

"சீனுவிலுள்ள தன் பிரஜைகளின் சொத்தையும் உயி ரையும் ஜப்பான் பாதுகாப்பது எப்படி? தங்கள் தேசத்தில் வளர்ந்துவரும் தொழில்களுக்கு வேண்டிய மூலப்பொருட் களைப் பெறுவது எப்படி? சீனுவுடன் ஜப்பானிய வர்த்தகத் தைப் பெருக்குவது எப்படி? ஜப்பானிய ராஜதந்திரிகளின் சமாளிக்க வேண்டிய ஜீவாதாரப் பிரச்னைகள் இவை."

சீனுவின் நட்பு ஜப்பானுக்கு அத்தியாவசியம். அதையே அந்நாடு விரும்புகிறது. ஆனுல், மேல் நாடு களின் போட்டா போட்டியின் காரணமாக இரண்டு நாடு களும் எலியும் பூனையும் போல் இருந்து வருகின்றன. சீன மார்க்கெட்டும், சீன மூலப்பொருட்களும் ஜப்பா னுக்கு ஜீவாதாரமானவை. ஆனுல் பலாத்காரத்தாலன்றி இவற்றை உத்தரவாதம் செய்துகொள்ள முடியா தென்ற முடிவுக்கு ஜப்பான் வந்துவிட்டது. அதற்குக் காரணம் சீனரிடம் எற்பட்டுள்ள பெரு விழிப்பே.

ஆசியாக் கண்டத்தின் நிலப்பரப்பில் தனக்கென்று ஒரு பிரதேசம் இருந்தால்தான், பிற வல்லரசுகளின் சூழ்ச்சிகளைச் சமாளிக்க முடியுமென்று ஜப்பான் கருதியே, முதலில் கோரியாவையும், பிறகு அதையடுத்

துள்ள மஞ்சூரியாவையும் பிடித்துள்ளது. ஆனல், ரஷ்யா சீனவுக்கு உதவி யளிக்கக்கூடு மாகையால், அதற்கு இடங்கொடாமற் செய்யவே மஞ்சூரியாவை ஜப்பான் அவ்வளவு முக்கியமாக மதிக்கிறது. அது மட்டுமல்ல. சீனவுக்கும் ரஷ்யாவின் ஆதரவின் கீழுள்ள வெளி மங்கோலியாவுக்கு மிடையேயுள்ள உட்புற மங் கோலியா என்ற சீன மாகாணத்திலுள்ள ராணுவத் தலைவர்களுக்கு மிகப் பெரிய தொகையை லஞ்சமாகக் கொடுத்துத் தன் பக்கத்தில் சேர்த்துக் கொண்டிருக் கிறது. இன்று வட சீனவில் ஜப்பானியருடன் சேர்ந்து தங்கள் தேச மக்களை மங்கோலிய ஸைன்யங்கள் எதிர்ப் பது எல்லோரு மறிந்ததே. பன்முறை தன்னுடன் அநாக்ரமிப்பு ஒப்பந்தம் செய்து கொள்ளும்படி ஸோவி யத் சர்க்கார் ஜப்பானைக் கேட்டும் ஜப்பான் மறுத்து விட்டது. இதிலிருந்தே ரஷ்யாவின் கீழ்க்கோடிமீது ஜப்பான் திருஷ்டிவைத்துள்ள தென்பது விசதமாகும்.

அமெரிக்காவுடன் நேசப்பான்மையி லிருந்து வரு வது மிகவும் முக்கியமென்று ஜப்பானியர் மதிக்கின் றனர். ஆனல், ஜப்பானியக் குடியேற்றத்துக்கு அமெரிக்கா தடை போட்ட நாள் முதல் (1924) அமெரிக்காவின்பால் ஜப்பானுக்குக் கோபம் அதி கரித்து வந்திருக்கிறது. அது மட்டுமல்ல: ஜப்பானைப் பலஹீனப்படுத்தவேண்டு மென்ற நோக்கத்துடனேயே, அதன் வளர்ந்து வரும் பலத்தைக் கண்டு திகிலடைந்த

அமெரிக்கா சீனுவை ஆதரித்து வருவதாக ஜப்பானில் பெரும்பான்மையோர் நம்புகின்றனர்.

பிரிட்டிஷ் மக்களிடம் ஜப்பானுக்குப் பிரியம் உண்டு. ஆனால், 1921-ல் பிரிட்டிஷ்—ஜப்பானிய ஒப்பந்தம் (யுத்த காலத்தில் ஏற்பட்டது) அறுபட்டுப் போனதும், பிறகு ஸிங்கப்பூரில் உலகிலேயே முதன்மையான கடற்படை தளத்தை பிரிட்டன் கட்டியதும் ஜப்பானின் மனப்பான்மையை அடியோடு மாற்றிவிட்டன. தவிர, சீனுவில் ஜப்பானுக்குப் பெரிய போட்டியாக இருப்பது பிரிட்டன்தான். அது மட்டுமல்ல; உலகில் எந்த மார்க்கெட்டிலும் பிரிட்டனும் ஜப்பானுந்தான் அதிகமாக மோதுகின்றன. ஆகையால், பிரிட்டன்மீது எப்போதுமே ஜப்பானுக்கு அளவு கடந்த சந்தேகமுண்டு. தன் அபிலாஷைகளைப் பிரிட்டன்தான் அதிரடிக்கும் என்று அஞ்சி, அவசியம் நேரிட்டால், பிரிட்டிஷ் கடற்படையை எதிர்க்கவும் ஜப்பான் தன் பலத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டுள்ளது. ஆனால், பிரிட்டனில் ஆளும் வர்க்கத்தினரை சமாஸப்படுத்துவது பிரமாதமல்ல என்று, ஜப்பானிய ராஜதந்திரிகளில் சிலர் நினைத்தனர். ஆனால், பிரிட்டன்தான் ஜப்பானின் முதல் விரோதி என்பது பொது அபிப்பிராயம்.

## ரஷ்யா சேர்ந்தால்

“சீனுவிடம் ஜப்பான் பயப்பட வேண்டியதில்லை. ஆனால், ரஷ்யா அல்லது சீனுவுடன் ரஷ்யா சேர்ந்தால்

எங்களுக்கு ஆபத்துத்தான்" என்று 1932-ல் ஜப்பானியப் பிரதிநிதி யோஸுகோ மாட்ஸுகோ சங்கத்திலேயே கூறியிருக்கிருர்.

பிரிட்டிஷ் வெளி நாட்டுக் கொள்கையின் போக்கு இந்தியாவையே கேந்திரமாய்க் கொண்டுள்ளது. இந்தியாவுடன் போக்குவரத்து ஒரு மாதம் நின்று விட்டால், பிரிட்டனில் கோரமான பஞ்சம் நர்த்தனமாடும் என்பதை ஸர் சாமுவேல் ஹோர் வெளிநாட்டு மந்திரியாயிருந்த போது விளக்கியிருக்கிருர். ஆகையால், இந்தியாமீது தங்களுக்குள்ள ஆதிக்கம் தளராமலிருக்க வேண்டும் என்ற ஒரே கொள்கையை அடிப்படையாகக் கொண்டு, அபிசினிய யுத்தத்தின் போதும், ஸ்பெயினீ போராட்டம் சம்பந்தமாகவும், மத்திய தரக் கடல் கப்பற் கொள்ளை சம்பந்தமாகவும், பிரிட்டன் மர்மமான வெளிநாட்டுக் கொள்கையை அனுஷ்டித்து வந்திருக்கிறது. அதைப் போலவே, சீனுவை எப்படி அடிமைப் படுத்துவது என்ற ஒரே பிரச்னைதான் பல வருஷங்களாகவே ஜப்பானிய சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கையாயிருந்து வந்திருக்கிறது. பஸிபிக் பிரதேசத்தில் மேல் நாட்டு வல்லரசுகளுக்குள்ள உரிமைகளைப் பற்றியும், அவை எவ்வாறு மோதக்கூடும் என்பதையும் பிறகு ஆராய்வோம்.

---

## எட்டாவது அத்தியாயம்

## மஞ்சூரிய யுத்தம்

1894-ல், சீனவுடனும், 1904-5-ல் ரஷ்யாவுடனும் ஆசியாவிலுள்ள உரிமைகளுக்காக, ஜப்பான் போராடிய விவரம் முன்னமேயே தரப்பட்டிருக்கிறது. படிப்படியாக ஆசியாவில் ஜப்பானுக்கு வெற்றி கிடைத்து வந்தது. முதலில், கொரியாதான் ஆசியாக் கண்டத்தின் நிலப்பரப்பில் ஜப்பானுக்குப் பூர்ணமாய்ச் சொந்தமான பிரதேசம். சீனவின் மூன்று வடகிழக்கு மாகாணங்களுக்கு மஞ்சூரியா என்று பெயர். இங்கு ஆர்தர் துறைமுகத்திலும் அதையடுத்துள்ள பிரதேசங்களிலும் ரஷ்யாவுக்கு இருந்துவந்த உரிமைகளும் சலுகைகளும் 1904 யுத்தத்தின் விளைவாக ஜப்பானுக்குக் கிடைத்ததும் ஞாபகமிருக்கலாம். மஞ்சூரியாவில் ஜப்பான் போட்டிருந்த ரயில்வேக்கு சீன கிழக்கு ரயில்வே என்று பெயர். இதுவும் ஜப்பானிய ஆதிக்கத்தின் கீழ் வந்து தெற்கு சீன ரயில்வே என்ற புதிய பெயரைப் பெற்றிருக்கிறது. இவ்வளவெல்லாம் இருந்துங்கூட, மஞ்சூரியா சீன சர்க்காரின் கீழேயே இருந்து வந்தது. ரயில்வேக்களின் காரணமாக லக்ஷக் கணக்கில் சீனர்கள் அங்கு குடியேறினர். 1923-முதல் 1929-க்குள் 25 லக்ஷம் சீனர் குடியேறினர் என்று கணக்கிடப்படுகிறது. மஞ்சூரியாவின் இப்போதைய ஜனத்தொகை 3 கோடி

இருக்கலாம். இதில் 95% க்கு மேல் சீனர்கள். மற்ற வர்கள் மங்கோலியர், கொரியர், ஜப்பானியர் போன்ற வர்களே. பழைய மஞ்சுக்கள் சீனருடன் அநேகமாய் ஐக்கியமாய் விட்டனர் என்று கூறலாம்.

சீனவில் ஜப்பானிய ஆக்ரமிப்பைத் தடுக்கவேண்டு மென்ற நோக்கத்துடன் ஒன்பது வல்லரசுகள் ஒப்பந் தம் செய்து கொண்டது ஞாபகமிருக்கலாம். கொஞ்ச காலத்துக்கு ஜப்பான் இந்த உடன்படிக்கையைக் கௌரவித்து வந்தது. கர்னல் லாரென்ஸ் என்பவரை உப யோகித்து, அரேபியாவில் மகாயுத்தத்தின் போது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் என்னென்ன செய்ததோ, அதையெல்லாம் சீன சம்பந்தமாக ஜப்பானும் அநுஷ் டிக்க வாரம்பித்தது. சீனவில் கலகத்தையும் உள்நாட்டு யுத்தத்தையும் கிளப்பி விட்டுத் தேசிய ஐக்கியத்தை நிலை குலைக்கும் இந்த வேலையை ஜப்பானிய ஏகாதிபத்தியத் தின் ஏஜண்டாகச் செய்து வந்தவர் ஜெனரல் டாய்ஹாரா என்பவர். இவர் மஞ்சூரியாவில் ஜப்பானிய ஆக்கிரமிப்புக் குப் பக்குவமான நிலைமையைச் சிருஷ்டித்து வருகையில் ஜப்பானிய சர்க்கார் ஆயுதபலத்தை ஜரூராய் விஸ்த ரித்து வந்தனர். மஞ்சூரியாவிலும் பீகிங் வரையிலும் செல்வாக்குப் பெற்றிருந்த சாங்-ஸு-லின் என்ற தள கர்த்தரைச் சரிப்படுத்திக்கொண்டு தம் வெற்றிக்கு விவர மான முன்னேற்பாடுகளை ஜப்பானிய சர்க்கார் செய்து வந்தனர். ஜப்பானுடைய பணமும் செல்வாக்கும் டூருன்

களைப் பரவசப்படுத்தின. பல நூற்றாண்டுகள் சீனாவை ஆண்ட மஞ்சு மக்கள் நான்கிங்குக்கு அடிமையாயிருப்பதா என்று சுயநலப் பிரசாரம் செய்துவந்தனர். எல்லாம் தயாரா யிருந்தபோது, மேல் நாடுகள் வர்த்தக மந்தத்தில் மூழ்கியிருக்கையில், ஜப்பான் மஞ்சூரியா மீது பாய்ந்தது. இது 1922 உடன்படிக்கைக்கு முற்றிலும் விரோதமானதுதான் என்பதைப்பற்றி கொஞ்சமும் சந்தேகமில்லை. அதுமட்டுமல்ல; சீனாவும் ஜப்பானும் அப்போது மெம்பர்களாயிருந்த ஸர்வதேச சங்க உடன்படிக்கைக்கும், சமாதான உடன்படிக்கைக்கும் (1928-கெல்லாக் யுத்த எதிர்ப்பு உடன்படிக்கை) விரோதமானது. இவற்றை யெல்லாம் அடியோடு அலட்சியம் செய்து, ஜப்பான் உலகத்தையே அவமதித்து, இறுமாப்புடன் நடந்து கொண்டது. ஆனால், ஜப்பான் பகிரங்கமாக, தான் இப்படியெல்லாம் செய்வதாகக் கூறவில்லை. மஞ்சூரியாவில் கொள்ளைக் கூட்டங்கள், ஜப்பானிய உரிமைகளுக்கும் க்ஷேம லாபங்களுக்கும் தீங்கிழைத்து வருவதாகவும், அவற்றை நிவர்த்திக்கப் போதிய செல்வாக்கும் அதிகாரமும் சீன சர்க்கார் பெற்றிருக்கவில்லை யென்றும் கூறி, ஆகவே, தற்காப்புக்காக மஞ்சூரியாவில் ஜப்பான் அங்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டியிருப்பதாகவுந்தான் ஜப்பான் உலகிற்கு எடுத்துரைத்தது. (அபிசீனியாவை இத்தாலி விழுங்குமுன், இதே மாதிரி சாக்குகளைத்தான் சொல்லிக்

கொண்டு போர் முரசு கொட்டியது உலகமறிந்ததே.) ஜப்பான், பகிரங்கமாக சீனுமீது தான் போர் தொடுப்பதாக அறிவிக்கவே யில்லை. இம்மாதிரி செய்வதுதான் ஸர்வதேச ஒழுக்க முறைப்படி நியாயம். ஆனல் உடன்படிக்கைகளைத் துச்சமாய் மதித்த ஜப்பானுக்கு ஒழுக்க முறை வேறு உண்டா? ஆகவே, மஞ்சூரியாமீது ஜப்பான் படையெடுத்தது. சீன மக்களுக்கு ஆத்திரம் பொங்கி யெழுந்தது. சீன சர்க்கார் பலமாய் ஆட்சேபித்தனர். ஸர்வதேச சங்கத்துக்கும், ஒன்பது வல்லரசுகளின் உடன்படிக்கையில் கையெழுத்துச் செய்த இதர வல்லரசுகளுக்கும் மனுச் செய்துகொண்டு முறையிட்டனர். ஆனல் ஒவ்வொரு சர்க்காருக்கும் தொல்லை தீலக்குமே லிருந்ததால், உடன்படிக்கைகளின் புனிதத்தையும், ஸர்வதேச ஒழுக்க முறையை நிலைநாட்டுவதும் அவ்வளவு முக்கியமென்று எந்த நாடும் கருதவில்லை. தவிர, இத்தனை சங்கடங்களுக்கிடையே, ஜப்பானை எதிர்த்துப் புதிய சங்கடங்களை வரவழைக்கவும் அவை தயாராயில்லை. தவிர ஸோவியத் ரஷ்யாவின் செல்வாக்கு ஓங்கினல், தங்களுக்கு உலகெங்கும் சாவு மணி நிச்சய மென்றுணர்ந்த பிரிட்டன் போன்ற ஏகாதிபத்தியங்கள் கீழ்க்கோடியில், ஆசிய நிலப் பரப்பில், ரஷ்யாவுக்கு ஜப்பான் ஒரு பிரேக் போல் புறப்படுவதை இரகசியத்திலாவது வரவேற்காமலிருக்க முடியுமா? சீனத் துருப்புகள் கூட்டம் கூட்டமாகச் சஞ்

சரித்து மஞ்சூரியாவில் ஜப்பானியரை அலைக்கழித்தன. சீனுவில் ஜப்பானிய சாமான் பகிஷ்கார இயக்கமும் வலுத்தது.

## ஷாங்ஹாய் மீது படையெடுப்பு

1932-ஜனவரியில் ஒரு ஜப்பானிய ஸைன்யம் திடீரென்று ஷாங்ஹாயில் தோன்றி சீன மண்மீது அடி வைத்தது. நவீன சரித்திரத்தில் கண்டிராத படு கொலைக்குச் சீன மக்கள் உள்ளாக்கப்பட்டனர். மேல் நாடுகளின் குடியேற்றங்களை விட்டு விட்டு (இப்போதைய யுத்தம் போலவே) ஜன நெருக்கம் மிகுதியுள்ள சீனப் பேட்டைகளைத்தான் ஜப்பானிய ஸைன்யம் பலமாய்த் தாக்கியது. சேபை மீது குண்டுகளைப்போட்டு அடியோடு அப்பிரதேசத்தை அழித்து விட்டனர். ஆயிரக் கணக்கில் ஜனங்கள் பலியாயினர். நிரபராதிகளான பிரஜைகள் இம்மாதிரி பலியாக்கப்படுவது உலக சரித்திரத்திலேயே இதுதான் முதல்தடவை. "இன்னம் இரண்டு தினங்கள்தான் இவ்வாறு குண்டு வீசப்போகிறோம்" என்ற கருணை நிறைந்த பதில், கேள்வி கேட்டோருக்குக் கிடைத்தது. இந்தப் படுகொலையைக் கண்டு, ஜப்பானிடம் நேசப்பான்மையுள்ள லண்டன் "டைம்ஸ்" நிருபருக்குக்கூட ஆத்திரம் பொங்கி யெழுந்தது. இந்த அக்கிரம அட்டூழியங்களிடையே, சீனமக்கள் தங்கள் மாத்ஸர்யங்களையும் போட்டிகளையும் மறந்து, காட்டுமிராண்டித்தனமான இந்தப் படையெடுப்பைச் சமாளிக்க

முன்வந்தனர். ஸோவியத் சீன சர்க்கார் கூட நான்கிங் சர்க்காருடன் பரிபூர்ணமாய் ஒத்துழைக்க முன்வந்தனர். ஆனால் சந்தேகப் பிராணியான சியாங்-கே-ஷேக், முதல் தரமான பொதுவுடைமை ராணுவத்தைப்பயன்படுத்திக் கொள்ள முன்வரவில்லை. அதுமட்டுமல்ல. ஷாங்ஹாயின் தற்காப்புக்குக்கூட எற்பாடொன்றையும் செய்யாதது மிகவும் ஆச்சரியமாயிருந்தது. ஜப்பானியப் படையெடுப்புக்கு எதிராகத் தேசத்தில் ஐக்கிய முன்னணியை (United Front) சிருஷ்டிக்கக்கூட முயற்சி நடைபெறவேயில்லை. சங்கத்தினிடம் ஆட்சேபணை சமர்ப்பித்ததுடன் தங்கள் கடமை தீர்ந்து விட்டதாக, நான்கிங் சர்க்கார் நினைத்தனர் என்று சொல்வது மிகையாகாது. தேசமெங்கும் கரைபுரண்டோடிய கொந்தளிப்பையும் ஆவேசத்தையும் அவர்கள் பயன் படுத்திக்கொள்ள முன்வராதது சீன சரித்திரத்திலேயே ஒரு கேவலமான, கோழைத்தனமான, அத்தியாயம்.

## 19-வது ஸைன்யம்

இந்தச் சமயத்தில் சில இளைஞர்கள் துவஜம் கட்டினர். அவர்களிடம் குண்டு, பீரங்கி, ராணுவ உடை, இல்லாவிடினும் தேசபக்தியும், வீரத்தியாகமும், சுதந்திர தாகமும் தழைத்து நின்றன. அவர்கள் நான்கிங் அல்லது காண்டன் சர்க்காருடன் சம்பந்தப்பட்டவர்களல்ல. ஆயினும் தேசபக்தர்களான சில ராணுவத்

தலைவர்களின் கீழ், உற்சாகம் நிறைந்த இளைஞர்கள் கூடி, காண்டனிலிருந்து ஷாங்ஹாய்க்கு வந்தனர். சியாங்-கே-ஷேக் பிறப்பித்த உத்தரவைக் கொஞ்சங்கூடக் கவனியாமல், அவரிடமிருந்து எவ்வித உதவியையும் எதிர்பார்க்காமல், 12, 14, 16 வயதுப் பாலர்கள் பெரும்பான்மையாயிருந்த இந்த ராணுவம், 1932 ஜனவரி-பிப்ரவரியில், கட்டுப்பாடான ஜப்பானிய ராணுவத்தை இரண்டு வார காலம் எதிர்த்து நின்றது. அவர்களுடைய வீரமும், தேசபக்தியும், துணிச்சலும் நிகரற்றவை. தங்கள் முன்னேற்றத்தை அவர்கள் தடுத்து நிறுத்தியது கண்டு ஜப்பானியர் வியப்புற்றனர். எல்லோரும் இந்த சைன்யத்தை வானமளாவப் புகழ்ந்த சமயத்தில்தான், சியாங்-கே-ஷேக், தன் துருப்புகளில் கொஞ்சம் பேரை உதவிக்காக அனுப்பினர். 19-வது நாடோடிப் படை என்று அழைக்கப்பட்ட இந்த வாலிபர்களின் ராணுவம் உலக சரித்திரத்திலேயே ஒரு அழியாப் புகழைப் பெற்றுவிட்டது. அவர்களுடைய உறுதியான எதிர்ப்பு ஜப்பானின் பிளான்களைச் சிதறடித்தது. இதற்குள் வல்லரசுகளும், வர்த்தக உலகில் சுபிட்சம் திரும்புவதாகத் தோன்றவே, கிழக்கோடியில் தங்களுக்குள்ள உரிமைகளில் அதிகமான சிரத்தை காட்ட ஆரம்பித்தன. ஆகவே, ஷாங்ஹாய் பிரதேசத்திலிருந்து ஜப்பானியத் துருப்புகள் கொஞ்சம் கொஞ்சமாய்ப் பின்வாங்கிக் கப்பலேறின.

## வல்லரசுகளின் அசிரத்தை

சேபை படுகொலையைப் பற்றியோ, ஜப்பானின் அட்டூழியங்களைப் பற்றியோ, உடன்படிக்கைகளைப் பற்றியோ, இந்த மேல்நாடுகளுக்கு அக்கறையே கிடையாது. தங்கள் பண விவகாரத்திலும் வர்த்தகத்திலுமே அவற்றின் கருத்தெல்லாம். ஆகவே, ஸர்வதேச சங்கத்தில் சீனாவின் கூக்குரல் 1932 வரை விழாமலிருந்ததிலும் ஆச்சரியமில்லை. போர் நடந்துகொண்டிருந்தும், ஆயிரக்கணக்கில் ஜனங்கள் மடிந்து கொண்டிருந்தும் இந்தச் சங்கம் அசையவில்லை. இது அவசர விஷயமென்று சங்க நாடுகள் கவனிக்கவில்லை. சங்கத்தில் பிரிட்டன் ஜப்பானுக்கு அனுசரணையான மனப்பான்மை காட்டியதே இந்தப் போக்கிற்கு முக்கியமான காரணம்.

## மஞ்சூரிய யுத்த மர்மம்

முந்திய நாற்பது வருஷங்களாகப் பாடுபட்டு சீனாவில் பெற்ற உரிமைகள் அழிந்து போவதை ஜப்பான் பார்த்துக் கொண்டிருக்கச் சகிக்கவில்லை. கீழ்க் கோடியில் ஜப்பானிய ஆதிக்கம் ஸ்திரமாக ஏற்பட்டால்தான் ஜப்பானிய மக்களும் பிரிட்டிஷாரைப் போல வாழ முடியும். இந்த ஆதிக்கம் ஏற்படுவதற்கு முதற் படியாக மஞ்சூரியாவை விழுங்குவது அத்தியாவசியம் என்று ஜப்பானியர் கருதினர். ஜப்பானிய வெளிநாட்டு மந்திரி மஞ்சூரி

யாதான் கிழக்கோடியின் மர்மஸ்தானம் என்று 1931 ஜனவரி 21உ ஜப்பானிய பார்லிமெண்டில் எடுத்துரைத்தார். வெகு சீக்கிரத்தில் படையெடுப்பும் நடந்தேறியது. மஞ்சூரியாவைச் சீனுவிலிருந்து பிரிப்பதை ஜப்பான் ஒரு ஜீவாதாரப் பிரச்னையாக மதித்தது. யுத்த ஒழிப்பு ஒப்பந்தம், சங்க உடன்படிக்கை, ஒன்பது வல்லரசுகளின் ஒப்பந்தம், எல்லாவற்றையும் மீறி ஜப்பான் ஆக்கிரமிப்புக் குற்றம் செய்தது. இதற்குக் காரணம் மஞ்சூரியாவில் தாங்கள் பெற்றிருந்த பல உரிமைகளுக்குச் சீன சர்க்கார் உலைவைத்து வந்தனர் என்பதுதான். மஞ்சூரியாவிலும் மங்கோலியாவிலும் ஜப்பானுக்குள்ள உரிமைகளை 1910 லேயே பிரிட்டிஷ் மந்திரி ஸர் எட்வர்ட் கிரே அங்கீகரித்து விட்டிருந்தார். 1905-ல் ருஷ்யா யுத்தத்தில் தோற்ற பிறகு, குவாங்டுங் மாகாணத்தில் தான் பெற்றிருந்த காண்ட்ராக்ட் உரிமையையும், தெற்கு மஞ்சூரிய ரயில்வேயுடன் இணைக்கப்பட்ட போர்ட் ஆர்தர்-சாங்சுன் ரயில்வேயையும் ஜப்பானுக்குக் கொடுத்துவிட்டது. சீனு இவற்றை அங்கீகரித்தது. பிறகு 1915-ல் மஞ்சூரியா சம்பந்தமாக சீனுவுடன் ஜப்பான் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டது. உட்புற மங்கோலியாவின் கிழக்குப் பாகத்திலும், மஞ்சூரியாவிலும் ஜப்பானியர் நிர்ப்பந்தமின்றிக் குடியேறித் தொழில் நடத்தவும், விவசாய அபிவிருத்திக்கு உதவியளிக்கவும் உரிமை பெற்றனர். மஞ்சூரியாவில் நிலக்கரிச்

சுரங்கங்கள் மிகுந்த ஒன்பது ஜில்லாக்களில் ஜப்பானுக்கு ஏகபோக உரிமை வழங்கப்பட்டது. மஞ்சூரியா சம்பந்தமாக ராணுவ யோசனைகளைக் கூற ஜப்பானிய நிபுணர்கள்தான் நியமிக்கப்படுவார்கள் என்றும் சீனு ஏற்றுக் கொண்டது. இவைதான் பிறகு மிகவும் பலமாய் ஆட்சேபிக்கப்பட்டன. 1932க்கு முன் ஜப்பானியர் கடுமையாய் ஆட்சேபித்துங்கூட, சீனு இந்த அக்கிரம உடன்படிக்கையை உடைத்தெறிய முயற்சித்தது. 1929-ல் மஞ்சூரிய சர்க்கார் பிறப்பித்த ஒரு உத்தரவுப்படி வெளிநாட்டினருக்கு நிலங்களைப் பராதீனம் செய்வது தடுக்கப்பட்டது. இந்தக் குற்றத்துக்கு மரண தண்டனை விதிக்கப்படும் என்று பயமுறுத்தப்பட்டது.

## சீனுமீது 200 குற்றச் சாட்டுகள்

பிரிட்டனில் ஜப்பானிய ஸ்தானீகராயிருந்த மட்ஸுதாரியா, சீனுவின் இந்தப் போக்கைப் பகிரங்கமாய்க் கண்டித்து ஒரு எச்சரிக்கை விடுத்தார். 200 குற்றச் சாட்டுகளடங்கிய ஒரு ஜாப்தாவையும் தயாரித்தார். அவற்றைச் சீன சர்க்கார் மதிக்கவில்லை. ஆகையால் சீன சர்க்காரின் ஆதீனத்துக்கு உட்பட்டு அங்கிருந்து வந்த ஜெனரல் சாங்-ஸு-லியாங் சர்க்காரை விரட்டிவிடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை ஜப்பானியர் செய்து வந்தனர். நெடுங்காலமாய்ச் சீனுவில் சக்ரவர்த்திகளாயிருந்து வந்தவர்கள் மஞ்சூக்கள். ஆகையால், அந்த வம்

சக்கினர் ஒருவரை மஞ்சூரியாவில் பொம்மைச் சக்ர வர்த்தியாக்கிவிட்டால் ஸ்தலத்திலுள்ள ஜனங்களின் எதிர்ப்பும் அடங்கிவிடும் என்பது அவர்களுடைய நம்பிக்கை. பிறகு நிர்ப்பந்தமின்றித் தங்களிஷ்டம்போல் நிலவள நீர்வளமும், கனி வர்க்கங்களும் நிறைந்த மஞ்சூரியாவை நடத்தலாம் என்பது அவர்களுடைய நினைப்பு. ஜப்பானிய சர்க்காரைக் கலந்தாலோசிக்காமலேயே, ஜப்பானிய ராணுவம் ஆக்கிரமிப்பில் இறங்கி விட்டது.

## போர் ஆரம்பம்

1931 செப்டம்பர் 18உ யன்று ஜப்பானுக்குச் சொந்தமான தெற்கு மஞ்சூரிய ரயில்வேயை முக்டெனுக்கு அருகில் சீன சர்க்கார் அழித்து விட்டனர். இதை ஒரு வியாஜமாக உபயோகித்துக்கொண்டு ஜப்பானியர் போர் தொடுத்தனர். ஸர்வதேச சங்கமோ அல்லது இதர வல்லரசுகளோ போட்ட கூச்சல்களை ஜப்பான் மதிக்கவில்லை. குரைக்கிற நாய்கள் கடிக்கமாட்டா அல்லவா! மஞ்சூரியா முழுவதையும் ஜெயிக்கும்வரை அதிலேயே ஜப்பான் தன் முழு கவனத்தையும் செலுத்தியது. தொழில்களுக்கு வேண்டிய மூலப்பொருட்கள், உணவுப் பொருட்கள் இவைகளைப் பற்றிய கவலையை மஞ்சூரிய வெற்றி ஒருவாறு தீர்த்து விட்டது.

பெல்ஜியம், ஜெர்மனி இரண்டும் சேர்ந்துள்ள அளவுக்கு மஞ்சூரியாவின் நிலப்பரப்பு உள்ளது. 1933-ல்

55% நிலங்கள் சாகுபடி செய்யப்படாமல் தரிசாகக் கிடந்தன. இவற்றின் அபிவிருத்தியால் 39 கோடி யென் உணவுப் பொருட்கள் வருஷா வருஷம் ஜப்பானுக்குக் கிடைக்க முடியும். தவிர, அங்குள்ள காடுகளிலிருந்து முதல்தரமான மரச் சாமான்களைப் பெற முடியும். இரும்பும், நிலக்கரியும் அங்குண்டு. யுத்த காலத்திலும் சமாதான காலத்திலும் இவற்றின் உபயோகத்தை மிகைப்படுத்திக் கூறமுடியாது. அடுத்துள்ள கடல்களில் மீன்கள் யதேஷ்டமாய் உண்டு. அடுத்துள்ள உட்புற மங்கோலியாவில் ஏராளமான நல்ல கால்நடைகளு முண்டு. ஜனநெருக்கம் ஜப்பானில் குறைவதற்கு இது உதவியா யிருக்கும். 1905-க்குப் பிறகு 200 கோடி யென் வரை ஜப்பான் அங்கு மூலதனம் போட்டிருக்கிறது. தவிர, ரஷ்ய ராணுவ ஆதிக்கத்தினின்றும் மஞ்சூரியாவை விடுவித்தது தாங்களாகையால், அது நியாயப்படி தங்களுடையதாகவேண்டு மென்று ஜப்பானியர் நினைத்தனர். அதற்காகத்தான் 80,000 சோல்ஜர்களையும் ஏராளமான தளவாடங்களையும் அவர்கள் மஞ்சூரியாவுக்கு அனுப்பினர். நீண்ட காலம் மஞ்சூரியா வெங்கும் குரங்குச் சண்டை மும்முரமாய் நடைபெற்றது. மஞ்சுகோவில் தாங்களே ஸ்தாபித்த சர்க்காரை ஜப்பான் அங்கீகரித்த சமயத்தில் தான் ஸர்வதேச சங்கம் ஒரு விசாரணைக் கமிஷனை நியமித்தது.

## லிட்டன் கமிஷன்

இந்தக் கமிஷனுக்கு வங்காள கவர்னராயிருந்த லார்ட் லிட்டன் தலைவர். 1932 அக்டோபர் 2உ யன்று கமிஷன் தன் சிபார்சுகளைச் செய்தது. அதில் பத்து முக்கியமான கொள்கைகள் வற்புறுத்தப்பட்டன.

(1) இரண்டு நாடுகளையும் சங்கம் சமமாகவே பாவிக்க வேண்டும்.

(2) மஞ்சூரியாவில் ஸோவியத் ரஷ்யாவுக்குள்ள உரிமைகள் அலட்சியம் செய்யப்படலாகாது.

(3) யுத்த ஒழிப்பு ஒப்பந்தம், ஒன்பது வல்லரசுகள் ஒப்பந்தம்—இவற்றை யனுசரித்து ஒரு சமரஸம் ஏற்பாடாக வேண்டும்.

(4) ஜப்பானுக்கு அங்குள்ள உரிமைகள் புறக்கணிக்கப்படலாகாது.

(5) இரண்டு நாடுகளுக்கும் அங்குள்ள உரிமைகள் ஒப்பந்த பூர்வமாய் வரையறுக்கப்பட வேண்டும்.

(6) அவ்வப்போது நேரிடக்கூடிய சில்லறைத் தகராறுகளைத் தீர்ப்பதற்கு வேண்டிய வசதிகள் ஏற்பாடாக வேண்டும்.

(7) மஞ்சூரியா சீனாவின் ஆதிபத்திய உரிமைக்கு உட்பட்டு, ஓரளவுக்கு சுதந்திரத்துடன் இருக்க வேண்டும். அங்கு துரைத்தனம் சரிவர நடைபெறவேண்டியது அவசியம்.

(8) உள்நாட்டு பந்தோபஸ்துக்கு வேண்டிய போலீஸ் படை தவிர, ஆயுதந் தாங்கிய இதர படைகளெல்லாம் மஞ்

சூரியாவிலிருந்து வாபஸாகவேண்டும். அத்துடன் கூட சீனாவும் ஜப்பானும் ஒரு அனுக்ரமிப்பு ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும்.

(9) நேர்மையான ஷரத்துக்களடங்கிய புதிய வர்த்தக ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட வேண்டும்.

(10) சீனாவின் பொருளாதார அபிவிருத்திக்கு ஸர்வ தேச ஒத்துழைப்பு இருக்கவேண்டும். அப்பொழுதுதான் திருப்திகரமான விதத்தில் இந்தப் பிரச்னையை இறுதியாகத் தீர்க்க முடியும்.

ஜப்பான், ஸர்வதேச உடன்படிக்கைகளை மீறி நடந்துகொண்டிருப்பதாகவும், தன் கொள்கையை அந் நாடு புனராலோசனை செய்யவேண்டுமென்றும் அறிக்கை வற்புறுத்தியது.

"மஞ்சூரிய மக்கள் ஜப்பானிய ஆதிக்கத்தை விரும்பவில்லை என்பதைப் பற்றி இரண்டுவித அபிப்பிராயம் இருக்கமுடியாது. மூன்று மாகாணங்களடங்கிய மஞ்சூரியாவை விட்டுக் கொடுக்கும் எந்த ஒப்பந்தத்துக்கும் சீனா சம்மதியாது. சீனாவின் ராஜ்ய, ராணுவ மேன்மைக்கு இது எவ்வளவு அவசியம் என்பதை விளக்கவேண்டியதில்லை. மஞ்சூரியாவைச் சீனா இழந்தால், சமாதானத்துக்கு நிரந்தரமான ஆபத்து இருந்தே தீரும். ஜப்பானிய சாமான் பகிஷ்காரமும் நீடித்து நடைபெறக்கூடும்.

"மஞ்சூரியாவில் இப்போதுள்ள 'மஞ்சுகோ' சர்க்காரை நிலை நாட்டுவதோ, அல்லது அங்கிகரிப்பதோ அதி

ருப்தியில்தான் கொண்டுபோய் விடும். தவிர, மஞ்சூரி யாவை விட்டுக்கொடுத்துப் பிரச்னையைத் தீர்ப்பது முன் னரே ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள அடிப்படையான ஸர்வ தேசப் பொறுப்புக்களுக்கு முற்றிலும் முரணனது. சீனு வுக்கும் ஜப்பானுக்கு மிடையே நல்லெண்ணம் இருந்து வந்தால்தான் கிழக்கோடியில் சமாதானம் நிலவ முடி யும். இந்த ஏற்பாடு நல்லெண்ணத்துக்கு உகந்ததாயில்லை. அது மட்டுமல்ல; சீனுவின் க்ஷேம லாபத்துக்கு எதிரி டையானது. மஞ்சூரிய மக்களின் எண்ணத்தை அது அலட்சியம் செய்வதாகும். ஜப்பானின் நிரந்தர நன்மைக் கும் அது ஏற்றதுதானு என்பதும் சந்தேகிக்கக்கூடிய விஷயமே." இவ்வாறு லிட்டன் அறிக்கை சந்தேகத் துக்கு இடமில்லாமல் தெளிவாகத் தெரிவித்துவிட்டது.

லிட்டன் சிபார்சுகள் 1931-க்கு முன் இருந்த நிலை மையே நீடிக்க வேண்டுமென்று பிடிவாதம் செய்ய வில்லை. ஆனல் சாத்திய சாதனங்களை உத்தேசித்து சுமாசமாக மேற்படி யோசனைகள் செய்யப்பட்டன. உலக மெங்கும் அறிக்கை வரவேற்கப்பட்டது. இந்த யோசனை கள் அங்கீகரிக்கப்பட்டால், சீனப் பிரச்னை நிரந்தரமாய்த் தீர்ந்துவிடும் என்று பலரும் நம்பினர்.

## ஜப்பான் நிராகரித்தது

ஆனல் ஜப்பான் சீறி எழுந்தது. ஜப்பானிய வெளி நாட்டு இலாகா அதிகாரிகள் 24 மணி நேரம் ஆலோ சித்த பிறகு அதை நிராகரித்து விட்டனர்.

"மஞ்சுகோ சர்க்காரை ஜப்பான் அங்கீகரித்தாய் விட்டது. அதை மாற்ற முடியாது. இவ் விஷயமாக சங்கத்தில் விவாதிக்கக்கூட முடியாது" என்று ஜப்பானிய அறிக்கை கூறியது.

"நடந்தது நடந்ததே: அதை மாற்ற முடியாது. சீனுவுக்குச் சங்கம் மதிப்பு வாய்ந்ததா யிருக்கலாம்: ஆனல் மஞ்சுகோவுடன் எங்கள் உறவுகளைப் பற்றிய விவகாரங்களில் சங்கத்துக்கு இடமேது?" என்று ஒரு உயர்தர சின அதிகாரி தெரிவித்ததாக, 1932 அக்டோபர் 3வ "டைம்ஸ்" கூறுகிறது.

"லிட்டன் கமிஷன் என்ன கூறிய போதிலும் மஞ்சூரியா சம்பந்தமாய் ஜப்பான் தன் கொள்கையை உறுதியுடன் அனுஷ்டித்தே தீரும்" என்று ஜப்பானிய தளபதி ஜெனரல் மூடோ கூறினர். கமிஷன் சிபார்சுகள் வெறும் ஆகாயக் கோட்டைகள் தான் என்று ஸேயுகாய் என்ற சர்க்கார் கக்ஷித் தலைவர் தெரிவித்தார். பிறகு, ஜப்பானிய சர்க்கார் சங்கத்துக்கு ஒரு இறுதியான பதிலை 1931 நவம்பர் 19வ யன்று அனுப்பினுர்கள். சாத்திய சாதனங்களை உத்தேசித்துச் செய்யப்பட்டுள்ள அந்த முடிவிலிருந்து ஜப்பான் பின்வாங்கப் போவதில்லை யென்றும், காளாவட்டத்தில் அதுவே சரி என்று சீனு கூட ஒப்புக்கொள்ளு மென்றும் ஜப்பானின் பதில் கூறியது.

## ஜப்பானின் 'மன்ரோ' ஸித்தாந்தம்

கிழக் கோடியில் சமாதானத்தை நிலைநாட்டி உத்தரவாதம் செய்யும் பொறுப்பு ஜப்பானுக்குத்தான் உண்டு என்பதை எல்லோரும் அங்கீகரிக்கவேண்டு மென்பது ஜப்பானின் பேராவல். அமெரிக்காவில் மன்ரோ என்பவர் குடியரசுத் தலைவரா யிருந்த காலத்தில் வட, தென் அமெரிக்கா முழுமைக்கும் தாங்களே அத்தகைய பொறுப்பை ஏற்றுக்கொண்டிருப்பதாகத் தெரிவித்த துண்டு. அதைப்போல் கிழக் கோடியில் தானிருக்க ஜப்பான் துணிந்தது. 1905-ல் தலைவர் தியோடோர் ரூஸ்வெல்டுடன் இதைப்பற்றி ஜப்பானிய ஸ்தானீகர் பேசியதுண்டு. அவரும் ஓரளவுக்கு ஆதரவளித்துப் பேசியதாகத் தெரிகிறது. சமீப காலத்தில் "மன்ரோ டாக்ட்ரின்" என்ற இந்தக் கொள்கையை இடைவிடாமல் வற்புறுத்தி வந்திருப்பவர் ஜப்பானிய யுத்த மந்திரி ஜேனரல் அராகி என்பவர்தான். கிழக்கு ஆசியாவில் வெள்ளையரின் ஆதிக்கத்தை ஒழிப்பதே இதன் நோக்கம் என்று அவர் காய்கோஷா என்ற ஜப்பானிய ராணுவப் பத்திரிகையில் எழுதியிருக்கிறார். இந்தக் கொள்கையைப் பின்பற்றித்தான், 1931 செப்டம்பரில் ஜப்பானிய ராணுவம் மஞ்சூரியாவைத் தாக்கியது.

"மஞ்சூரியாவின் தற்காப்புக்கு ஜவாப்தாரிகள் நாங்கள்தான். அதுவே எங்கள் தற்காப்பு ஏற்பாடுகளின்

முன்னணி... இந்தக் கொள்கையை ரஷ்யா, அமெரிக்கா, பிரிட்டன், யார் எதிர்த்தபோதிலும் பலாத்காரத்தைக் கொண்டு அந்த எதிர்ப்பைச் சமாளிப்போம்" என்று காரசு மோரி மார்தட்டியிருக்கிறார். மஞ்சுகோவின் தற்காப்புக்காக ஏராளமான தொகையையும் ஜப்பான் செலவழிக்க ஆரம்பித்தது. தெற்கே யிருந்து பெரிய மதிலைத் தாண்டி சீனத் துருப்புகள் வராவண்ணம் செய்வதற்கு ஜிஹோல் ஜப்பானியர் வசமாவது அவசிய மெனத் தெரியவே, 1933 ஜனவரியில் ஜப்பான் மஞ்சூரி யாவுக்குத் தெற்கேயுள்ள இந்தப் பிரதேசத்தில் யுத்த ஸங்காரம் செய்து, டீண்ட்ஸின் அருகிலுள்ள ஷாங் ஹைக்வான் என்ற இடம் வரை கைப்பற்றி விட்டது.

## உப-கமிட்டி நியமனம்

இதற்குள் ஜப்பான்மீது சங்க நாடுகளின் கோபம் அதிகரித்தது. ஒன்பது நாடுகளடங்கிய உப கமிட்டி நியமிக்கப்பட்டது. 1933 பிப்ரவரியில் இந்தக் கமிட்டி நான்கு பாகங்களைக் கொண்ட ஒரு அறிக்கையைத் தயாரித்தது. முதல் பாகம் லிட்டன் சிபார்சுகளை அங்கீகரித்தது. இரண்டாவது பாகத்தில் ஜப்பானின் போர் விவரங்களும் ராணுவ லட்சியங்களும் விவரிக்கப்பட்டன. ஜனவரியில் ஜப்பான் கைப்பற்றிய ஷாங்ஹைக்வான் என்ற நகரந்தான், பீகிங்கைத் தலைநகராகக் கொண்ட ஹோபெய்-சாஹார் மாகாணத்தின் கோட்டை வாயில்.

போன்றது என்று அறிக்கை கூறியது. மூன்றுவது பாகத்தில், மஞ்சுகோவில் ஜப்பான் எற்படுத்திய பொம்மைச் சக்ரவர்த்தியின் சர்க்கார் கண்டிக்கப்பட்டது.

தகராறைத் தீர்த்துக்கொள்ள ஜப்பானும் சீனுவும் நேரடியாக பேரம் பேசவேண்டும் என்பது நான்காவது பாகத்தின் பொருள். நேரடியான பேரம் நடைபெற்றுல் சங்கம் ஒத்துழைக்கத் தயார் என்றும் அறிவிக்கப் பட்டது.

## 17 மாதங்களுக்குப் பின் தீர்ப்பு

இந்த அறிக்கை ஏகமனதா யிருந்தது. உலகிற்கே மிகவும் ஆபத்தாய்க் கிளம்பிய ஒரு தகராறைப் பற்றி சங்கம் தீர்ப்புக் கூற 17 மாதங்களாயின. சங்கம் அதற்குமேல் ஒன்றும் செய்யவில்லை.

---

# ஒன்பதாவது அத்தியாயம்

## ஜப்பானும் வட சீனுவும்

மகா யுத்தத்தின் போது, அரபு நாடுகளைத் துருக்கிக்கு விரோதமாகக் கிளப்பி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சுயநலத்துக்காக அவற்றை உபயோகித்துக் கொண்ட முதல்தரமான சாணக்கியராகிய லாரேன்ஸ் என்பவரை உலகமே அறியும். பிரிட்டனின் எல்லாவிதத்திலும் பின்பற்றும் ஜப்பானிய ஏகாதிபத்தியம், ஜெனரல்

கேஞ்சி டாய்ஹாரா என்ற ஒரு லாரென்ஸைத், தன் வடசீன ஆக்கிரமிப்புக்கு உபயோகித்துக் கொண்டது பற்றி முந்திய அத்தியாயததில் குறிப்பிட்டோம். மஞ்சூரியாவை ஸ்வீகரித்துக் கொண்டபோது அவர் செய்த தொண்டுதான் அவருடைய பிரக்யாதி ஜப்பானில் வலுப்பதற்குக் காரணமாயிருந்தது. ஜப்பான் அதற்குப் பின் அவரை வெகு சுறுசுறுப்பாக்கியது. 'கோட்டான்' என்று சீனர் எளனம் செய்யும் இந்தப் பேர்வழி, படிப்படியாய் வடசீனுவை ஜப்பானுக்குச் சொந்தமாக்குவதில் மும்முரமாய் முனைந்தார். 1933-ல் கிழக்கு ஹோபெய் மாகாணத்தில் ஒரு 'சுதந்திர' இயக்கத்தைக் கிளப்பி, ஜப்பானியரின் கையாளான யின்-ஜு-கெங் என்ற பேர்வழியை அதன் தலைவராக்கினர். வடக்கே ஜப்பானியரின் செல்வாக்கு நிலைக்காமலிருப்பதற்காக சியாங்-கே-ஷேக் ஜெனரல் ஸுங்-சே-யுவான் என்பவரை நியமித்தார். இந்த ஜெனரல்கூட டாய்ஹாராவின் மாயவலையில் விழுந்துவிட்டார் என்று நிச்சயமாய்க் கருதவேண்டியிருக்கிறது. ஹோபெய்-சாஹார் மாகாணங்களுக்கு ஓரளவு சுதந்திரம் பெற்றுக் கொடுத்து, அங்கு ஜப்பானின் செல்வாக்குக்கு உட்பட்ட ஒரு ராஜீய கவுன்சிலை நிறுவுவதில் டாய்ஹாராவுக்கு வெற்றி கிடைத்ததென்று சந்தேகமறக் கூறலாம். ஆனல், அவர் அரைகுறையான பலன்களுடன் திருப்தியடைகிறவர் அல்ல. ஹோபெய், சாஹார், ஸுயுவான்,

ஷான்ஸி, ஷான்டுங் ஆகிய ஐந்து மாகாணங்களையும் நான்கிங் ஆதிக்கத்திலிருந்து விடுவித்து ஜப்பானுக்கு அடிமைப்படுத்துவதே அவர் மேற்கொண்ட கைங்கரியம். அவர் எதிர்பார்த்த வேகத்தில் வெற்றி கிடைக்காததற்கு சீனரின் எதிர்ப்பு வலுத்ததும் அவர்களுடைய ஐக்கியம் உருவானதுமே முக்கியமான காரணங்கள்.

மஞ்சூரியா ஜப்பான் வசமானவுடன், டாய்ஹாரா, முக்டெனைத் தம் தலைமையிடமாக்கிக் கொண்டார். ராணுவ நாஜ கோஷ்டியின் தலைவர் என்ற உத்தியோகத்தை அவர் வகிப்பதாக உலகம் அறியும். அவர் ராஜதந்திர போக்குகளில் மகா சாணக்கியர் என்று மேல்நாட்டு ஸ்தானிகர்கள் ஒப்புக்கொண்டுள்ளனர். அவர் விளம்பரத்துக்காக ஆசைப்படும் படாடோபக்காரரல்ல. திரை மறைவிலிருந்துகொண்டு அபாரமான வேலைகளை அவர் செய்து வந்ததைப் போன்ற ஜப்பானியன் இல்லை. "ஜப்பானில் இருந்துவரும் நாகரிகத்தை வடசீனுவிலும் சிருஷ்டித்தாகவேண்டும்" என்று 1936 ஆரம்பத்தில் ஒரு அமெரிக்கப் பத்திரிகை நிருபரிடம் அவர் தெரிவித்தார். ஜான் டாம்ஸன் என்ற அந்த நிருபர் அவரை விடவில்லை. குத்திக் குத்திப் பல கேள்விகளைக் கேட்டார். அவர் கூறியதாவது:

"அத்தகைய நாகரிகம் இப்போது மஞ்சுகோவில் சிருஷ்டிக்கப்படுகிறது. கீழ்நாட்டு, மேல்நாட்டு நாகரிகங்களின் கலப்பு நாகரிகத்தான் அது. குறிப்பாக ஆசியா மக்களுக்கு

அது முற்றிலும் லாயக்கானது. இறுதியாக, சீன முழுவதும் இத்தகைய மனப்பான்மைதான் கொள்ள வேண்டியிருக்கும். தெற்கு சீனவில் இந்த நாகரிகத்தை எல்லோருமே அதிகமாய் விரும்புகின்றனர். நான்கிங்குக்கும் அவர்களுக்கு முள்ள பிளவு அதிகமாகி வருகிறது. இந்த மக்கள் இப்போது அநேகமாய்ச் சுதந்திரர்களா யிருக்கிறார்களென்று கூறலாம். எந்த விதத்தில் சுதந்திரத்தை அறிவித்து விடுவது என்பது தான் முடிவு செய்யவேண்டிய விஷயம்.''

டாம்ஸன் :—சீன முழுமையும் அத்தகைய நாகரிகத்தின் கீழ் வந்த பின்னர் இயக்கம் அத்துடன் முடிவடையுமா? அல்லது, மேல் நாடுகளிடமுள்ள இந்தோ சீன, இந்தியா போன்ற நாடுகளிலும் அது தோற்றுவிக்கப்படுமா?

டாய்ஹாரா :—காலக் கிரமத்தில் மற்ற ஆசிய மக்களையும் இந்த இயக்கம் கவர்ச்சித்து விடும். சம்பந்தப்பட்ட வல்லரசுகள் இதைப்பற்றி ஒழுங்காகத் தெரிந்து கொண்டால், ஆட்சேபணைக்கே இடமிருக்காது. ஆசியாவில் வகித்து வரும் நிலைமையிலிருந்து அவற்றை வெளியேற்ற வேண்டுமென்ற பிரச்னையே எழவில்லை. விரிவான ஆசியாக் கண்டம் முழுவதிலும் ஒரு புதிய நாகரிகம் பரவ வேண்டும் என்பதுதான் இதன் நோக்கம். இதைப் பலாத்காரமாய் நிறைவேற்றுவதற்குப் போதிய பலம் ஜப்பானுக்கு இல்லை. ஆயினும் அம்மாதிரி புனர் ஜன்மம் பெறும் புது ஆசியாவுக்கு இயற்கையாக ஜப்பான்தான் தலைமை வகிக்கப்போகிறது.

## ஆசியாவுக்கு ஜப்பானே தலைமை

இந்த இலட்சியத்துக்காகத்தான் ஜெனரல் டாய் ஹாராவை முன்னணியில் வைத்து ஜப்பானிய சமூகம் பூராவும் போராடுகிறது. ஜெனரல் டாய்ஹாரா சொற் படி நடப்பதற்கென்று நியமிக்கப்பட்ட ராணுவத் தலை வரின் பெயர் ஜெனரல் ஹாமோ டாடா. இவர் வட சீனுவில் ஜப்பானிய தளபதி. டாய்ஹாரா உத்தரவு கொடுத்தவுடன் இவருடைய ஸைன்யம் அதன் வேலை யில் இறங்கி விடும். டாடா ஒரு சோல்ஜர் கட்டை. நாஸூக்கான வார்த்தைகளுக்கும் அவருக்கும் ரொம்ப தூரம். எதையும் பட்டவர்த்தனமாகக் கூறிவிடுவார். ஆகவே, ஜப்பானின் உண்மையான நோக்கம் தெரிய வேண்டுமென்ருல் இவரிடந்தான் போகவேண்டும். வட சீனுவில் ஜப்பான் நடத்திவந்த 'சுதந்திர இயக்கம்' கைகூடும் வேகம் திருப்திகரமாயில்லை என்று 1936 பிப்ரவரியில் அவர் கூறியிருக்கிருர். அவர் சொன்ன கீழ்க்கண்ட வார்த்தைகள் குறிப்பிடத் தக்கவை.

"ஜப்பான், மஞ்சுகோ, வட சீனு மூன்றும் சேர்ந்த ஒரு பொருளாதார ஐக்கியம் ஏற்படுவது விரும்பத் தக்கது. அது ஏற்பட்டே தீரும். இது சம்பந்தமான எங்கள் பிளான்கள் எல்லாவற்றையும் கட்டாயம் நடத்தி வைக்கப்போகிருேம்..."

"வட சீனுவில் பொதுவுடைமையை எதிர்த்துப் போரிடு வதில் ஜப்பான், மஞ்சுகோ, வட சீனமக்கள் எல்லோரும் பூர்ணமாய் ஒத்துழைக்க வேண்டும். இந்த வேலையைச்

செய்து முடிக்க இங்குள்ள ஜப்பானியத் துருப்புகள் போத மாட்டா. இதற்காகச் சீக்கிரத்தில் இங்கு அதிகத் துருப்புகளை வரவழைக்கப் போகிறேம்."

எது எவ்வாறிருந்த போதிலும், ஹோபெய்-சாஹாரில் சென்ற மூன்று வருஷங்களாகவே, ஜப்பானின் பிளான்களுக்கு இடைவிடாத வெற்றி கிடைத்து வந்திருக்கிறது. இந்தப் பிரதேசத்தைத் தங்கள் ஆதீனத்தில் வைத்துக்கொண்டு, வரி கொடாமல் சாமான்களைக் கொண்டுபோய் சீனவெங்கும் குவித்துவைத்து அந்நியப் போட்டியை தவிடுபொடி யாக்குவதே ஜப்பானின் கொள்கையா யிருந்துவந்தது. இந்த இரண்டு மாகாணங்களையும் ஜப்பான் அநேகமாய்த் தன்னுடைய தாக்கிக் கொண்டபோதிலும், உடன்படிக்கைகளுக்கு மாருகத் தான் எதையும் செய்யவில்லை என்று மட்டும் உலகிற்குப் பறை சாற்றி வந்தது. 1934-ல் ஜப்பானுக்கும் சீனவுக்குமிடையே ஒரு இரகசிய உடன்படிக்கை ஏற்பட்டதைப் பற்றி எற்கனவே பிரஸ்தாபித்திருக்கிறேம். இதுவே, தங்கள் வடசீன அதிகாரத்தைப் பற்றிய உரிமைப் பத்திரம் என்று அவர்கள் வற்புறுத்துவதில் ஆச்சரிய மொன்றுமில்லை.

## சீன-ஜப்பான் இரகசிய ஒப்பந்தம்

இந்த ஒப்பந்தப்படி தங்கள் துருப்புகளையெல்லாம், மஞ்சள் நதிக்குத் தெற்கே வாபஸ் பெறுவதாகவும்,

அவற்றை அங்கேயே வைத்துக் கொள்வதாகவும் சீனர் ஏற்றுக் கொண்டனர். பீகிங்கிலும் டீண்ட்ஸினிலும் தற்காப்புக்காக தனக்கு யுக்தமெனத் தோன்றும் அளவுக்குத் துருப்புகளை வைத்துக்கொள்ள ஜப்பான் அதிகாரம் பெற்றது. ஷாங்ஹைக்வானுக்கும் பீகிங்குக்கு மிடையேயுள்ள பிரதேசம் ராணுவ சூன்யமாக்கப் பட்டது. இங்கு சீனத் துருப்புகள் போகமாட்டா என்று சீனர் ஏற்றுக்கொண்டனர். ஜப்பானியருக்கு எதிராக நடைபெறும் இயக்கங்களை ஒடுக்குவதில் ஜப்பானிய ராணுவ அதிகாரிகளுக்குச் சீன அதிகாரிகள் ஒத்தாசை புரியவேண்டும் என்பதும் ஒப்புக் கொள்ளப் பட்டது. ஜப்பானுக்கு எதிரான நடவடிக்கைகள் எவை என்பதை நிர்ணயிக்கும் அதிகாரமும் ஜப்பானுக்குத் தான் உண்டு. ஹோபெய்-சாஹாரில் பொதுவுடைமையை ஒடுக்க ஒத்தாசை செய்வதாக ஜப்பான் சம்மதித்தது. இதற்கெல்லாம் பிறகு ஜப்பானியர் யென்-ஜு-கெங் என்ற ஒரு சீன அதிகாரிக்கு ஒரு ஜப்பானியப் பெண்ணை மணம் செய்வித்து, அவனைக் கிழக்கு ஹோபெய் நிர்வாகஸ்தனாக்கினர். அவன் தன்னிஷ்டம்போல் (அதாவது ஜப்பானுடைய இஷ்டம்போல்) செய்வதைத் தடுக்கச் சீன மத்திய சர்க்காரால் பிறகு முடியாமற் போய் விட்டது. விவகாரங்களின் போக்கைக் கண்டு பீதியடைந்த நான்கிங் சர்க்கார், ஹோபெய்-சாஹார் ராஜ்ய கவுன்சிலை ஏற்படுத்தி, ஜெனரல் ஸுங்-சே-யுவானை

அதன் தலைவராக்கினர். யின்-ஜு-கெங்கைக் கைது செய்து, அவனுடைய நிர்வாகத்தைக் கலைத்து விடுமாறு நான்கிங்கிலிருந்து ஸுங்குக்கு உத்தரவு போயிற்று. ஆனல், ஜெனரல் ஸுங்-சே-யுவானுக்கும் சீன சர்க்காருக்கும் துரதிருஷ்டவசமாக 1933 முதல் சில மனஸ்தாபங்கள் இருந்து வந்தன. ஆகவே, அவர் யின்-ஜு-கெங்கைக் கைது செய்ய மறுத்து விட்டார். யின் பாடு கொண்டாட்டமாய் விட்டது. ஜப்பானியரும் நிர்ப்பயமாய் அவனைத் தங்கள் கருவியாக உபயோகிக்கலாயினர். அவன் ஆதிக்கத்திலிருந்த 5000 சதுர மைல் விஸ்தீரணமுள்ள ராணுவ சூன்யப் பிரதேசத்தில் ஜப்பானிய விமான நிலையங்கள் அமைக்கப்பட்டன. 20,000 சோல்ஜர்களடங்கிய படையொன்று ஏற்பாடாயிற்று. எல்லாம் சரிவர நடந்தன. 1936 ஆரம்பத்தில், யின், தன் எல்லைக்குள், டீண்ட்ஸினிலிருந்து இரண்டே மைல் தூரத்திலுள்ள டாங்குவைப் பிடித்துக் கொண்டான்.

## ஜப்பானின் புதிய பிரகடனம்

1935 அக்டோபர் 14உ யன்று டாய்ரேன் என்றவிடத்திலும் பிறகு ஷாங்ஹாயிலும் ஜப்பானிய ராணுவ அதிகாரிகள் கூடிப் பேசி, சீன சம்பந்தமாக கீழ்க்கண்ட புதிய கொள்கையைத் தாங்கள் அனுஷ்டிக்கப் போவதாக அறிவித்தனர்.

1. சீனு சம்பந்தமான விஷயங்களில் உண்மையிலேயே அதிகாரம் படைத்துள்ளவர்களுடன்தான் இனி ஜப்பான் விவகாரம் வைத்துக்கொள்ளும்.

2. ராஜீயம், பணம், பொருளாதாரம் எத்துறையிலும் ஐரோப்பாவையோ அல்லது அமெரிக்காவையோ நம்பியிருக்கக்கூடாது என்று சீனு நம்புமாறு செய்ய முயற்சிகள் நடைபெறும்.

3. பழைய கடன் தவணைகள் பாக்கியிருப்பதால், சீனுவுக்குப் புதிய கடன்கள் தரப்படமாட்டா. மூலப் பொருட்களின் உற்பத்தியை அபிவிருத்தி செய்வதற்காக பணம் போடப்படும்.

4. ஹோபெயிலும் ஷாண்டுங்கிலும் ஜப்பானின் உதவி பெற்று ரயில்பாதைகள் அமைக்கப்படும்.

5. ஷான்ஸியிலுள்ள நிலக்கரி, ஹோனுனிலுள்ள பருத்தி மகசூல், ஹோபெய்-ஜிஹோல் எல்லையிலுள்ள தங்க வயல்கள் இவற்றை ஜப்பானின் உதவியைக் கொண்டு அபிவிருத்தி செய்யவேண்டும்.

டோகியோவிலுள்ள ஜப்பானிய வெளிநாட்டு மந்திரியையோ, ஜப்பானிய சர்க்காரையோ கலந்தாலோசிக்காமல், இந்தக் கோரிக்கைகளை ஜப்பானிய ராணுவ அதிகாரிகள் சீனுவிடம் சமர்ப்பித்தனர். நவம்பர் 21உக்குள் பதில் கிடைக்கவேண்டுமென்று தாக்கீதும் கூடப் போயிற்று.

யென்-ஜு-கெங், கிழக்கு ஹோபெய் சார்பாக, இவற்றைத் தாமதமின்றி ஏற்றுக்கொண்டார். ஹோபெய்-

சாஹார் ராஜீய கவுன்சில் தலைவர் ஜெனரல் ஸூங், மதில் மேல் பூனையாய் விளங்கினர். சீன மத்திய சர்க்காரை, ஜெனரல் டாடா அறவே மறந்துவிட்டார். நான்கிங் கின் ஆதிக்கத்திலிருந்து செழிப்பான வடசீனுவைப் பிரிக்கும் வேலை தாமதமின்றி ஆரம்பமாயிற்று. ஜென ரல் ஸூங் பணியத் தொடங்கவே, டீண்ட்ஸின் மேயரை டிஸ்மிஸ் செய்துவிட்டு, ஜப்பானிய அதிகாரிகள் ஸூங்கை நகர மேயராக்கினர்கள். நிலைமை சற்று ஸ்திரப் பட்டதும், ஜப்பானியர் ஸூங்கை நீக்கிவிட்டு, வேறு ஒரு ஆளை அங்கு வைத்தனர். உடனே ஜப்பானுக்கு எதிரான வேலைகள் நடைபெறுவதாகக் கூறி பலர் பீகிங்கில் கைது செய்யப்பட்டனர். ஜப்பான் வடசீனு வில் ஆக்கிரமித்து விட்டதாகக் கூறியதுதான் அவர்கள் மீது குற்றச்சாட்டு.

## ஸூங் துரோகம்

இந்த விவகாரங்களின் போதெல்லாம், ஜெனரல் ஸூங்கின் நடத்தை விசித்திரமாயிருந்தது. நான்கிங் சர்க்கார் தனக்குப் போதிய உதவி யளிக்கும் நிலைமை யில் இல்லை என்று நன்குணர்ந்திருந்ததால், அவர், சுயநலனையே முக்கியமாய்க் கருதி, ஜப்பானிய உறவு களில் ஒரு தினுசான மனப்பான்மையைக் காட்டி வந்தார். டீண்ட்ஸினில் மட்டும், சுங்க வருமானம் வருஷம் 30 லக்ஷம் பவுன். இவ்வளவு பெரிய

தொகையைத் தன் இஷ்டப்படி செலவழிக்கும் அதிகாரத்தை என்னவாயினும் விட்டுக்கொடுக்க அவருடைய சபலம் இடங்கொடுக்கவில்லை.

இங்கு ரயில்வேக்களை நிர்வகிக்க ஜப்பானிய அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். 30 லக்ஷம் பவுன் என்றால் கொஞ்சமா? அதற்காக, ஜெனரல் ஸுங்கும் யின்-ஜுகெங்கும் ஒருவரையொருவர் விரட்டப் பார்த்தனர். கடைசியில், ஜப்பானிய ஏகாதிபத்தியம் இருவரையும் ஒங்கவிடவில்லை.

கிழக்கு ஹோபெயைத் தன் நிர்வாகத்தில் சேர்த்து விட்டால் ஜப்பானின் எண்ணம் நிறைவேறும் என்றும், தன்னிடம் 50,000 வீரர்களும் மிகுந்த செல்வாக்கும் இருப்பதாகவும் டாய்ஹாராவிடம் அவர் தெரிவித்து பேரம்பேசினர். பெயரளவில், கிழக்கு ஹோபெயை சீன ஆதிபத்தியத்துக்கு உட்பட்ட ராணுவ சூன்ய இடமாக்கி விடுவது நல்ல சூழ்ச்சியே என்று அவர் தெரிவித்தார். ஆனல், யின் மைத்துனர் ஒரு உயர்தர ஜப்பானிய அதிகாரி. ஆகவே, அவருக்குத்தான் ஜப்பானிய ஆதரவு அதிகமாயிருந்தது. எனினும் இருசாராரையும் திருப்தி செய்விக்கக் கூடியதும், இடையில் தங்கள் மனோபிஷ்டத்தைப் பூர்த்தி செய்யக் கூடியதுமான ஒரு படுமோசமான திட்டத்தைத் தயாரித்து அனுப்பினர். அதன்படி, ஹோபெய் யின் ராஜ்யமாகவும், ஷான்ஸி, ஸுயுவான், ஷாண்டுங், சாஹார் நான்கும் ஸுங் ராஜ்யமாகவும், ஜப்

பானின் கீழிருந்து வரவேண்டுமென்று ஏற்பாடு. ஜெனரல் ஸுங் இதற்குச் சம்மதிக்கவில்லை. தன்னை ஜப்பானியர் பிறகு காலைவாரி விடுவார்கள் என்று அவருக்கு நிச்சயமாகப் புலப்பட்டது. ஆகவே, சீன மத்திய சர்க்காரையும் ஜப்பானியரையும் உறுதியுடன் ஒட்டவொட்டாமல் அவர் நடந்து வந்தார். அவர் யாரை ஆதரிப்பார் என்று ஒருக்காலும் நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. ஆனல், தன் ஆதிக்கம் ஸ்திரமாயிருக்கவேண்டும் என்பதில் மட்டும் அவருக்கு சிரத்தையுண்டு. சீன சர்க்காரும், வடசீன முழுமையும் தங்களிடமிருந்து போய் விடாமல், ஏதோ பெயரளவிலாவது தங்கள் ஆதிபத்யம் அங்கிருப்பதாக உலகம் நம்புமாறு செய்துவந்த ஜெனரல் ஸுங்கின் விரோதத்தைச் சம்பாதித்துக் கொள்ள விரும்பவில்லை. ஆகவே, ஓரளவுக்கு வடமாகாணங்களுக்குச் சுதந்திர மளித்ததாகப் பிரகடனம் செய்துவிட்டு, அவர்கள் சும்மாவிருந்தனர்.

## போலி சுதந்திர இயக்கங்கள்

வட சீனுவில் சுதந்திர இயக்கம் பலமாயிருப்பதாகவும், தங்கள் உதவியை இயக்கத்தினர் நாடுவதாகவுங் கூறி, மேற்படி சாக்குப் போக்குகளைத் தங்கள் ஆக்ரமிப்புக்கு ஒரு படுதாவாக ஜப்பானியர் உபயோகித்துக் கொண்டனர். உண்மையிலேயே, எந்த மாகாணத்திலும் சுதந்திர இயக்கம் கிடையாது என்று ஹேஸேல்

டில்ட்மன் என்ற பிரபல கிழக் கோடி விவகார நிபுண ரும், 'கிறிஸ்டியன் ஸயன்ஸ் மானிடர்' என்ற பிரபல அமெரிக்கப் பத்திரிகையின் கிழக்கோடி நிருபர் வில்லி யம் சேம்பர்லேன் என்பவரும் 1936-ல் தெரிவித்துள்ள னர். இந்த இயக்கத்தைச் சுயநல திருஷ்டியுடன், ஆக்ர மிக்கும் இலட்சியத்துடன், ஜப்பானே ஆரம்பித்து நடத் துகிறது என்பதை பீகிங் சர்வகலாசாலையைச் சேர்ந்த அறிஞர்கள் நன்ருகப் பிரசாரம் செய்தனர். "ஜப்பானிய ஏகாதிபத்தியம் ஒழிக" என்ற கோஷம் அங்கிருந்துதான் கிளம்பியது. சர்வகலாசாலை மாண வர்களுக்கு, தேசத்தின் தற்காப்பை உத்தேசித்து, கட்டாய ராணுவக் கல்வி அளிக்கப்பட வேண்டுமென்ற கிளர்ச்சியும் தேசமெங்கும் வலுத்தது. ஷான்ஸியிலும், ஷாண்டுங்கிலும் இந்த இயக்கம் வேரூன்றக் கூட முடிய வில்லை.

மஞ்சூரியாவைப் போலவே, மிகுந்த துணிச்ச லுடன், வட சின மாகாணங்களையும் ஜப்பான் அப் பொழுதே கைப்பற்றத் துணிந்திருக்குமானல், இன்றைய நிலைமை வேறு போக்கா யிருந்திருக்கும். ஆனல், அப்பொழுதுதான் ஜப்பானில் பல படுகொலை களுடன் கூடிய ஒரு ராணுவப் புரட்சி நடந்திருந்ததால், ஜப்பான் தன் முழு கவனத்தையும் ஆக்ரமிப்பில் செலுத்த முடியவில்லை. 'வட சின சுதந்திர இயக்கம்' ஆரம்பமானவுடன், தன் பிளான்கள் வெற்றியடையும்

என்று எதிர்பார்த்த ஜெனரல் டாய்ஹாராவுக்குத் தோல்வியே கிடைத்தது. வட சீன ராணுவ தளகர்த்தர்களின் சண்டையே 'சுதந்திர இயக்கம்' தடைப்பட்டதற்குக் காரணம் என்று அவர் பறையடித்தார். புதிய சமாஸத் திட்டமொன்றைச் சமர்ப்பித்தார். சீனவை விழுங்குவதற்கு இது ஒரு இடைக்கால ஏற்பாடு என்பது பின்வரும் விவரத்திலிருந்து விளங்கும்.

## சீன சம்மதித்த கேவலத் திட்டம்

ஐந்து மாகாணங்களின் தற்காப்புக்காக ஒரு கூட்டுக் கமிஷன் இருக்கும். ஜப்பானிய ராணுவம் இதற்கு 'ஒத்தாசை'யா யிருக்கும். ஆனல் இவை, சீனவின் ஆதிபத்யக் குடையின் கீழ் பெயரளவில் இருக்கலாம். இந்தக் கமிஷன் வட சீனவில் ஜப்பானுக்குள்ள உரிமைகளை அங்கிகரிக்கும். தற்காப்பில் ஒத்துழைக்கவும், வட சீனவின் பொருளாதார அபிவிருத்திக்கும் ஜப்பான் பணங் கொடுக்கும். அந்தப் பிரதேசத்தில் ராணுவ ரயில்வேக்களை ஜப்பானே போடும்.

ஸூயுவான் கவர்னரான ஜெனரல் பு-ஸோ-யி, ஷான்ஸி கவர்னர் ஜெனரல் யென்-ஸி-ஷான் இருவரும் இதற்குச் செவி சாய்க்கவில்லை; ஜெனரல் ஸூங் மட்டும் ஒத்துக்கொண்டார்.

ஜப்பான் இவ்வாறெல்லாம் செய்தது விளையாட்டுக்காகவல்ல. மஞ்சுகோ ஜப்பானியக் காலனியாகி விட்டது.

அதைக் காப்பாற்றி அபிவிருத்தி செய்ய அந்தப் பிர தேசத்தில் பணம் தேவை. ரஷ்யாவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ள வெளி மங்கோலியா சீனவுக்கு அனுசாணையாக முன்வந்து மஞ்சுகோவைக் கைப்பற்ற முயற்சிக்காம லிருக்கவேண்டுமானல் உட்புற மங்கோலி யாவும் ஸுயுவானும் ஜப்பான் வசமாக வேண்டும். உட் புற மங்கோலியாவுக்குப் போக வசதியான ஷான்ஸியும், மஞ்சள் நதிக்கு அப்பாலுள்ள ஷாண்டுங்கும் ஜப்பா னின் ஏகாதிபத்தியத்தைத் தென்புறம் ஸ்திரப்படுத்து வதற்கு அவசியம் என்று ஜெனரல் டாய்ஹாரா கருதினர்.

## பிரிட்டன் அமெரிக்கா சஞ்சலம்

ஜப்பானின் இந்தப் பிளான்கள் பிரிட்டனுக் கும் அமெரிக்காவுக்கும் சஞ்சலத்தை விளைவித்தன. அப்போது (1935ல்) பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரியா ருந்த ஸர் சாமுவேல் ஹோர், வடசீனவில் ஜப்பானின் போக்கு பிரிட்டனுக்கு பீதியை விளைவிப்பதாகவும், ஜப்பான் தன் கொள்கையை விளக்குமாறு ஸ்தானிகர் மூலம் கேட்டிருப்பதாகவும் பார்லிமெண்டில் தெரி வித்தார். வடசீனவிலுள்ள சுதந்திர இயக்கத்துக் கும் தங்களுக்கும் எவ்விதமான சம்பந்தமும் இல்லை என்று ஜப்பானிய சர்க்கார் ஒரு பச்சைப் புளுகைப் பதிலாக அனுப்பிவிட்டனர்.

அமெரிக்க வெளிநாட்டு மந்திரி கார்டெல் ஹல், காரணம் யாதாயினும் வடசீன விவகாரங்கள், ஒன்பது வல்லரசுகள் உடன்படிக்கையில் கையெழுத்துச் செய்துள்ள எல்லா நாடுகளும் சம்பந்தப்பட்ட விவகாரமென்றும், உடன்படிக்கைகளை அமெரிக்கா கௌரவிப்பதாகவும், மற்ற நாடுகளும் அம்மாதிரியே செய்ய வேண்டுமென்றும் ஒரு உபதேசம் செய்தார்.

## ஜப்பானின் துணிகரம்

ஆனால், இக்காலி விஷயத்தில் வல்லரசுகள் நடந்து கொண்ட விதத்திலிருந்து ஜப்பானுக்குத் துணிச்சல் அதிகமாய் விட்டது. உடன்படிக்கைகளின் புனிதத்தைப்பற்றி வல்லரசுகள் வெறும் வாய்ப்பந்தல் போடுவதுடன் நின்றுவிடுகின்றன என்பதை ஜப்பானிய ராஜதந்திரிகள் உணர்ந்தனர். ஆகவே, கள்ள வர்த்தகத்தை முடுக்கிவிட்டு, வெளிநாட்டுச் சரக்குகளுக்கு வட சீனாவில் இடமில்லாமற் செய்து, உலகத்தையே அலட்சியம் செய்து தங்கள் நிலைமையை அங்கு ஸ்திரப்படுத்திக் கொள்ளலாயினர்.

சின்வாங்டோ என்ற விடத்தில் சீனரும் பிரிட்டிஷாருமாகச் சேர்ந்து நடத்தும் ஒரு நிலக்கரிச் சுரங்கமிருக்கிறது. சீனப் பங்குதாரர்களை நிர்ப்பந்தித்துப் பங்குகளை வாங்கித் தங்கள் செல்வாக்கை விஸ்தரித்துக் கொள்ள இங்கு ஜப்பானியர் முயற்சித்தனர். வட்சினாவில்

அமெரிக்கா முக்கியமாய் விற்று வந்தது பெட்ரோல். ஆனால், இது அவ்வளவு முக்கியமானதென்று அமெரிக்கா கருதவில்லை. கொஞ்சங்கொஞ்சமாக இந்த ஹோபெய்-சாஹாரில் ஜப்பானிய ஆதிக்கம் வேர்விட ஆரம்பித்தது.

## ஜோரான கள்ள வர்த்தகம்

1936 வேனிற்காலம் வரை ஜப்பானியக் கள்ள வர்த்தகம் வெகு ஜோராய் நடைபெற்றது. பிறகு ஹோபெய்-சாஹார் ராஜீய கவுன்சிலும், யென்-ஜு-செங்கும் ஜப்பானிய சாமான்கள்மீது, 'சட்ட பூர்வமாகவே' வரியைக் குறைத்துவிட்டனர். ஜப்பானிய வெளிநாட்டு மந்திரியிடம் சீன சர்க்கார் இது சம்பந்தமாய்ப் பலமான ஆட்சேபனையைச் சமர்ப்பித்தனர். சீன நிர்வாகம் உறுதியற்றிருப்பதும், வரிப்பளுவுந்தான் கள்ள வர்த்தகம் நடைபெறுவதற்கு முக்கியமான காரணங்கள் என்று ஜப்பானிய வெளிநாட்டு மந்திரி பதிலளித்து விட்டார். சீன சுங்க அதிகாரிகளிடமிருந்த ஆயுதங்களை ஜப்பானியர் பறிமுதல் செய்துவிட்டனர். 1934 டாங்கு ஒப்பந்தப்படி. அங்கு ஆயுதந்தாங்கிய சீனர்கள் இருக்கக் கூடாதென்று கூறி அவர்கள் இம்மாதிரிச் செய்தனர். இம்மாதிரி கொள்ளை வர்த்தகத்தின் காரணமாகச் சீன மத்திய சர்க்கார் இழந்த பணம் வருஷந்தோறும் 48 லக்ஷம் பவுன் இருக்கும்.

## சீன சர்க்காரின் பலவீனம்

சீன சர்க்கார் ஏன் உறுதியான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவில்லை என்று கேட்கலாம். வடசீனவி லிருந்துவந்த, முன்னர் விவரிக்கப்பட்டுள்ள, மோசமான நிலைமையே இதற்குக் காரணம். மஞ்சள்நதிக்கு வடக்கே, தன் ஆயுத பலத்தை உபயோகிக்க ஜெனரல் சியாங்-கே-ஷேக் விரும்பவில்லை. வடக்கேயிருந்த சீன சுங்க அதிகாரிகள், நான்கிங்கிடம் விசுவாசத்துடன், கூடிய வரை ஏதேதோ செய்து பார்த்தனர். பன்முறை கள்ள வர்த்தகக்காரர்களும் அவர்களும் மோதினர். இந்தச் சம் பவங்களை ஒரு வியாஜமாக உபயோகித்துக் கொண்டு, சீன சுங்க அதிகாரிகளை ஜப்பானியர் அடியோடு வெளி யேற்றிவிடாம லிருப்பதற்காக, அவர்களிட மிருந்த ரிவால்வர்களைச் சீன சர்க்காரே வாபஸ் பெற்றுவிட்டனர். அதன் பேரில் வரி கேட்கும் சீன அதிகாரிகளை ஜப் பானியப் போலீசார் தாக்குவது சகஜமாய்விட்டது. 1936 ஆகஸ்டில் இந்தக் கள்ள வர்த்தகமும் உச்ச ஸ்தாயியை அடைந்துவிட்டது. மேற்கொண்டு சாமான் களை வடசீனமீது திணிப்பது சாத்தியமில்லை என்று ஜப்பானிய வெளிநாட்டுக் காரியாலயத்தைச் சேர்ந்த குவாஷீமா என்ற ஒரு டைரெக்டர் ஒஸாகாவிலுள்ள முக்கியமான ஏற்றுமதி வர்த்தகர்களுக்குத் தெரிவித் தார். விற்பனையாகாமற் கிடந்த இந்தச் சாமான்கள்மீது

சீன அதிகாரிகள் துணிச்சலுடன் வரிவசூலிக்கத் தொடங்கிவிட்டனர். ஜப்பானியரும் ஷாண்டுங்கில் கள்ளச் சாமான்களைத் திணிக்கத் தொடங்கினர். கடைசியாக, ஜப்பானுக்கும் வட சீன அதிகாரிகளுக்கும் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. வெளிநாட்டுப் பண்டங்களுக்குச் சீன சர்க்கார் போடும் வரியில் எட்டில் ஒரு பங்கை ஜப்பானிய சாமான்களுக்கு வசூலிப்பது என்பதுதான் இந்த ஒப்பந்தம்.

## துவேஷம் வளர்ந்தது

இந்தச் சம்பவங்களெல்லாம் ஜப்பான் மீது துவேஷத்தை வளர்க்கத்தான் உதவியாயிருந்தன. டாக்டர் ஹூ ஷி என்ற சீன அறிஞர், 1935ல்-எழுதிய ஒரு கட்டுரையிலேயே, ஜப்பானுக்கும் சீனுவுக்குமிடையே விரோதம் தவிர வேறொன்றும் இருக்க முடியாதென்றும், இறுதியாக வேறு வழியின்றி ஜப்பானிய ஆக்கிரமிப்பை சீனு எதிர்த்தே தீரவேண்டியிருக்கும் என்றும் மிகத் தெளிவாகக் கூறியிருக்கிறார். 10 லக்ஷம் சீன மாணவர்கள் அவர் கூறியது சரிதான் என்று பிகிங், நான்கிங், ஷாங்ஹாய், காண்டன் போன்ற பெரிய நகரங்களில், ஆர்ப்பாட்டங்களின் மூலம் தெரிவித்தனர்.

சீன ராணுவத்தைப்பற்றி முன்னர் ஒரு தமாஷ் இருந்து வந்தது. போர் முனைக்குப் போகும்போது சீனத் துருப்புகள் குடைகளைக் கொண்டுபோவது

வழக்கம். போர் செய்கையில் மழை வந்து விட்டால், குடையைப் பிடித்துக்கொண்டு அவர்கள் வீடு திரும்பி விடுவார்களாம். ஆனல், அந்தக் காலம் மலையேறி விட்டது. சியாங்-கே-ஷேக் சீன ராணுவத்தை முதல்தரமாய் மாற்றியமைத்து விட்டார். சென்ற ஆறு வருஷங்களில், மும்முறை அதிக இயந்திர சாதனமுடைய ஜப்பானிய ராணுவத்தை எதிர்த்து, சீனத் துருப்புகள் சிலாகிக்கத் தக்க விதத்தில் போர் புரிந்திருக்கின்றன. 1932-ல் ஷேசையில் 19 வது ஸைன்யம் வீரத்துடன் எதிர்த்து நின்றதைக் கண்டு ஜப்பானியத் தளபதிகள் பிரமித்துப் போயினர். 3 வாரங்களில் ஜப்பானியர் தங்கள் படைகளை வாபஸ் பெறவேண்டிய நிலைமையை அவர்கள் ஏற்படுத்தினர். 1933-ல் ஜெனரல் ஸுங்-சே-யுவான் வட சீனுவுக்காகச் செய்த வீரப் போரும் சரித்திரப் பிரசித்தமானது. தோட்டாக்கள் தீர்ந்து போயும் துப்பாக்கிச் சனியன்களைக் கொண்டு ஜப்பானிய மெஷின்கன் வீரர்களை அவர்கள் குத்தி மாய்த்தனர். இப்போது நடைபெறும் யுத்தத்தில் சீனர் காட்டும் தைரியம் வாசகர்கள் அறிந்ததே.

1936 ஜூன் 12உ, லண்டன் "டைம்ஸ்" பத்திரிகைக்கு அதன் நிருபர் அனுப்பிய செய்தியிலிருந்து ஒரு ரிக்ஷாக்காரன் முதல் எல்லோரும் ஜப்பானியரை எதிர்த்துப் போரிடுவதுதான் முறை என்று கூறிவந்த

தாகத் தெரிகிறது. படித்தவர்களில் ஒரு சாரார் ஜப்பானுடன் நேரடியான போராட்டம் சாத்தியமில்லையெனக் கருதினர். ராஜதந்திர முறைகளின் மூலம் ஜப்பானை பவ்யப்படுத்த வேண்டுமென்பது அவர்களுடைய ஸித்தாந்தம். ஆனால் அவர்களுக்குத் தேசத்தில் அதிகமான செல்வாக்கில்லை. ஜப்பானிய பலாத்காரத்துக்கு யுத்தமே சரியான பதில் என்பதுதான் பெருவாரியான சீனர்களின் துணிபு. பீகிங்குக்குப் பன்னிரண்டே மைல் தூரத்தில் ஜப்பானிய ஆதிக்கம் இருந்து வந்ததால், அங்குள்ள மாணவர்கள் துடிதுடித்தது இயற்கை. ஜப்பானியரை அங்கிருந்து வெளியேற்ற வேண்டுமென்று அவர்கள் இடைவிடாமல் கிளர்ச்சி செய்து வந்தனர். ஜப்பானிய நிர்ப்பந்தத்தின் பேரில் பீகிங் போலீசார், இந்த ஆர்ப்பாட்டங்களையெல்லாம் கடுமையாக அடக்கலாயினர். ஆனால், அடக்குமுறை அவர்களுடைய தேசபக்தியை அதிகரிக்கத்தான் செய்தது. அந்தச் சமயத்தில் வடசீனாவில் ஒரு சில ஆயிரம் ஜப்பானியத் துருப்புகளே இருந்தபோதிலும், தேவையான அளவுக்கு அமோகமாய் ஆட்களைக் கொண்டுவருவது ஜப்பானுக்குச் சுலபமான விஷயமே. ஆகையால் சீனா உடனே எதற்கும் தயாராயிருக்கவேண்டுமென்ற இயக்கம் பலமடைந்தது. ஸியாங்-போ என்ற கத்தோலிக்க அறிஞர் 1936 ஜனவரியில் தேசிய விமோசன சங்கம் என்ற ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தினர். கீழ்க்கண்ட எட்டு கோரிக்கை

களைக் கவனிக்கத் தேசிய விமோசன மகாநாடு ஒன்றைக் கூட்டவேண்டு மென்று அவர்கள் மத்திய சர்க்காரை வற்புறுத்தினர். இந்தக் கோரிக்கைகளாவன :

## சீனவின் தேசியக் கோரிக்கைகள்

1. சீனவின் பிரதேச, ஆதிபத்திய உரிமைகளை நிலைநாட்டி இவற்றிற்கு முரணுன எல்லா ஒப்பந்தங்களையும் நிராகரிப்பது.

2. வெளியாரின் தூண்டுதல் அல்லது ஆதரவுடன் நிறுவப்படும் எந்த நிர்வாக ஸ்தாபனத்தையும், அது எந்தப் பெயரால் அழைக்கப்பட்ட போதிலும், எதிர்ப்பது.

3. ஸ்தல சம்பவங்களைப் பற்றிய பேரங்களின் மூலம், மஞ்சூரியா அல்லது வடசீன பிரச்னையை தீர்த்துவைக்க நடைபெறும் எல்லா முயற்சிகளையும் நிராகரிப்பது.

4. கிழக்கு ஹோபெயிலும் நான்கு வடக்கு மாகாணங்களிலும் இருந்துவரும் பினமி ஸ்தாபனங்களைக் கலைக்கத் துருப்புகளை அனுப்புவது.

5. தேசத்தில் ராணுவ, பண பலம் பூராவையும் மேற்கொண்டு அந்நிய ஆக்கிரமிப்பைத் தடுக்க உபயோகித்துக் கொள்வது.

6. தேசத்துரோகிகளுக்குத் தண்டனை கொடுத்து, அவர்களுடைய சொத்துக்களை யெல்லாம் பறிமுதல் செய்வது.

7. பேச்சு சுதந்திரம், கூட்டம் கூடும் சுதந்திரம் இவற்றை உடனே அளிப்பது.

8. தேசமக்கள் விழிப்புற்றெழுந்து தேசத்தின் தற்காப்புக்காகத் தங்களைத் தயார்ப்படுத்திக் கொள்வது.

சியாங்-கே-ஷேக்கும் ஜப்பானிய ஆக்கிரமிப்பை ஆயுத பலத்துடன் எதிர்க்கவேண்டும் என்கிறவர்தான். ஆனல், போதிய பலத்தைத் திரட்டிக்கொள்ளாமல் போரிட்டுத் தோல்வியைச் சம்பாதித்துக் கொள்ள அவர் இஷ்டப்படவில்லே.

"போர் செய்தால் ஜெயிப்போமென்ற நம்பிக்கை ஏற்பட்டவுடன் நான் அதில் இறங்குவேன். என் கடற் கரையை ஜப்பானியக் கடற்படை முற்றுகைபோட்டு ஆயுத சப்ளேகள் கிடைக்காமல் தடைசெய்யாது என்ற உத்தரவாத மளியுங்கள். நாளைக்கு நான் போர்முனேயில் குதிக்கிறேன்" என்று கர்ஜித்தார் 1936-ல் சியாங்-கே-ஷேக்.

## சீனுவின் தற்காப்பு ஏற்பாடுகள்

போதிய நவீனப் போர்ச் சாதனங்களில்லாம லிருப்பது தங்களுக்குப் பெரிய இடையூறு என்று பிரக்யாதிபெற்ற 19-வது சைன்யத்தின் தளபதி ஜெனரல் ஜி. கே. வாங் கூறியிருக்கிருர். ஆகவே, தங்கள் ஆயுத பலத்தைப் பெருக்குவதிலேயே சீன சர்க்கார் அதிகக் கவனம் செலுத்த ஆரம்பித் தனர். பத்து வருஷங்களாகவே இதுதான் சீனு வின் பிரதான நோக்கமா யிருந்துவந்திருக்கிறது. இன்று சீன மத்திய சர்க்காரிடமுள்ள துருப் புகள் 12 லக்ஷம். மாகாண ராணுவங்களில் 7-

லக்ஷம் துருப்புகள் இருக்கின்றன. ஏராளமான சினர்களுக்கு விமானப் பயிற்சி வேகமாய் அளிக்கப்பட்டு வருகிறது. அமெரிக்கா, இத்தாலி, ஜெர்மனி, செகோஸ் லோவேகியா, ரஷ்யா, பிரிட்டன் போன்ற பல தேசங் களிலிருந்து வந்த ராணுவ நிபுணர்கள் சின ராணு வத்தை நவீன யுத்த முறைகளில் பழக்கிவைத் திருக்கின்றனர். மெஷீன் கன் பட்டாளங்களும், சுழல் பீரங்கிகளும், ஒரு ஆயிரம் விமானங்களும் இருக் கின்றன. ஆனல், சின ராணுவம் இயந்திர சாதனங்கள் நிறைந்ததா யில்லாமலிருப்பது பெருங்குறை. சினர் கை கலந்த போர்களில், 9 அங்குலத்துக்குமேல் அகல முள்ள பட்டாக் கத்திகளை வெகு சாலக்காய் உப யோகிப்பதில் சமர்த்தர்கள் என்று பெயர் வாங்கி யிருக்கிறார்கள். அவர்கள், ஏதோ சொற்ப ஆகாரம் கிடைத்தபோதிலும் அதை மனமுவந்து உட்கொண்டு, சலிப்பின்றிப் போரில் ஈடுபடும் கர்மவீரர்கள்.

## கடற்படை இல்லை

சீனவின் மிகப் பெரிய பலவீனம் கடற்படை இல்லாம லிருப்பதே. சீனவிடம் இரண்டு கடற்படைகள் இருப் பதாக வேடிக்கையாகச் சொல்லுவதுண்டு. 4 குரூய்ஸர் கள், 52 பீரங்கிப் படகுகள், 4 நாசகாரிகள், எட்டு வேட் டுப் படகுகள், 6 புதிய பீரங்கிப் படகுகள்-இவைதான் சினக் கடற்படை என்ற கம்பீரமான பெயரால் அழைக்

கப்படுவது. மற்ருெரு கடற்படை நான்கிங்கில் கடற்படை இலாகா தஸ்தவேஜிகளில் விவரிக்கப்பட்டுள்ள- இனிமேல் கட்ட விருக்கும்-கவர்ச்சியான, அசைக்க முடியாத கடற்படை. இதையெல்லாம் சீனு கட்ட ஆரம்பிக்கும்போது டோகியோ வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்குமென்று சீனு நினைத்ததே, அதுதான் எல்லாவற்றையும்விட பெரிய தமாஷ். ஆனல் போதிய பணமில்லாததே சீனுவுக்குக் கடற்படை இல்லாமைக்குக் காரணம். ஆனலும், சீனு அந்தப் பணத்தைப் பெறுவதற்காக, ஜப்பானின் பசப்பு வார்த்தைகளேயும் பயமுறுத்தல்களையும் மதித்து, அதற்கு அடிமையாகிவிடச் சம்மதிக்கவில்லை.

1936 ஜூலை 13-ந் தேதி யன்று, கோமிண்டாங் நிர்வாகசபை முன் பேசுகையில், ஜப்பானிய ராணுவ வெறியர்களுக்கு சியாங்-கே-ஷேக் கீழ்க்கண்ட எச்சரிக்கையை விடுத்தார் :

"மஞ்சுகோவிலுள்ள பொம்மை சர்க்காரை அங்கீகரிப்பதாக எந்த ஒப்பந்தத்திலாவது கையெழுத்திட வேண்டுமென்று சீனு நிர்ப்பந்திக்கப்பட்டாலோ, அல்லது அதன் பிரதேச, ஆதிபத்திய உரிமைகள்மீது மீண்டும் ஆக்ரமிப்பு ஏற்பட்டாலோ, இறுதியான பரித்தியாகத்துக்குத் தருணம் வந்துவிட்டதாகத்தான் நாங்கள் கருதுவோம். ராஜீய, ராஜ தந்திர முறைகள் அத்துடன் முற்றுப்பெற்றுவிடும்."

## அபிசீனியாவும் சீனவும்

ஜப்பானிடம் ஆயுத பலம் -அபாரம். ஆனல், 49 கோடி ஜனங்கள் என்ற நினைப்பு, ஜப்பானியத் தளகர்த் தர்களைக் குலை நடுங்க வைக்கிறது.

'என் தாய் நாடும் என் மக்களும்' என்ற ஒரு ரோஷமான நூலை லின்யுடாங் என்பவர் இயற்றியிருக் கிருர். அபிசீனியர் வீரத்தைப் பாராட்டி, அவர் எழு திய பொன்மொழிகள் போற்றுதற் குரியவை. அவர் கூறினர்:

"இந்த அபிசீனியர்களை நான் மனப்பூர்வமாய் பாராட்டுகிறேன். சினிமாவில் ஹேயிலி ஸேலாஸியின் படத்தைப் பார்த்தவுடன் அவர் முன் முழந்தாளிட்டு மண்டி போட வேண்டுமென்று என் மனம் பதைத்தது. அந்தத் தேச மக்கள் சுயமரியாதை யுள்ளவர்கள். தகிடுதத் தங்கள் அவர்களுக்குத் தெரியமாட்டா. அவர்கள் நாக ரிக முதிர்ச்சி யற்றவர்களா யிருக்கலாம். ஆனல், உண் மையான கவுரவத்துக்கு அவர்கள்தான் பாத்திரர்கள்."

அந்த வீர அபிசீனியர் சென்ற வழியே சீனரும் செல்வரா? இது எதிர்காலத்தைப் பற்றிய பெரிய புதிர் களில் ஒன்று.

---

## பத்தாவது அத்தியாயம்

## ராணுவ வெறியர்களின் ஜப்பான்

### ஜப்பானில் ராணுவத்துக்கே ஸர்வாதிகாரம்

ஜப்பானில் ராணுவத்துக்குத்தான் ஸர்வ சுதந்திரம் உண்டென்பது உலகமறிந்த விஷயம். "வோட்டைவிட வேட்டுத்தான் சிலாக்கியமானது" என்பது ஜப்பானிய ராஜ்யத்தின் அடிப்படையான கொள்கைகளில் ஒன்று. ராணுவத்துக்கு இல்லாத உரிமை கிடையாது. சிறிது வளர்ந்த ராணுவ பலத்தைக் கண்டு திக்பிரமை கொண்ட இளவரசர் இடோ, ஸெயூகாய் கக்ஷியை ஸ்தாபித்தார் என்று முன்னமேயே கூறினோம். ஆனால், இடோ உண்மையான அதிகாரம் எதையும் அனுபவிக்க முடியாமல் ராணுவ கோஷ்டியின் தலைவர் யாமகாடா செய்து விட்டார். இடோவுக்குப் பிறகு ஸெயூகாய் கக்ஷிக்கு இளவரசர் ஸயோஞ்சி தலைவரானார். யாமகாடாவுக்குப் பிறகு அவருடைய ஸ்தானத்துக்கு வந்தவர் ஜெனரல் காட்ஸூரா. 1914 வரை, காட்ஸூராவும், ஸயோஞ்சியும் மாறி மாறி அதிகாரத்திலிருந்து வந்தனர். ஜப்பானியத் தேர்தல்கள் என்றால் லஞ்சம் தவிர வேறொன்றும் கிடையாது. 1936 பிப்ரவரியில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் ஒகாடா மந்திரி சபைக்கே அதிக ஸ்தானங்

கள் கிடைத்தன. இந்தக் கக்ஷியினர், பொது வாழ்க்கையைப் புனிதமாக்குவதில் சிரத்தை கொண்டவர்கள். அது ராணுவ கோஷ்டிக்குப் பிடிக்கவில்லை. 1909-ல் இளவரசர் ஐடோ கொலை யுண்டார். அது முதல், ஜப்பானில் ராஜீய விவகாரங்களைத் தீர்க்க கொலை ஒரு பிரதான கருவியாக இருந்து வந்திருக்கிறது. இன்றுவரை அந்தக் கருவி துருப்பிடிக்காமல் உபயோகிக்கப்பட்டு வந்திருக்கிறது. 1918-ல் முதல் மந்திரி பதவிக்கு வந்த ஹாரா என்ற சாதாரண மனுஷ்யர் மூன்று வருஷங்களுக்குப் பின் கொலை செய்யப்பட்டார். வாஷிங்டன் மகாநாட்டுக்கு வர வேண்டுமென்று, தலைவர் ஹார்டிங் அனுப்பிய அழைப்பை ஏற்றுக்கொண்டு பதிலளித்ததுதான் அவருடைய குற்றம். அதுமட்டுமல்ல; வாஷிங்டன் உடன்படிக்கை ஏற்பட்டதில் சம்பந்தமுள்ள ஜப்பானியர்களில் அநேகமாய் எல்லோரும் கொலையுண்டது குறிப்பிடத்தக்க விஷயம். 1932 வரை, ஏதோ தனிப்பட்ட கொலைகள்தான் நடந்து வந்தன. அந்த வருஷம் பிப்ரவரியில் கொலைக் கூத்துச் சொல்லமுடியாது. நிஷ்ஷோ இனேய் என்ற பழைய ராஜதந்திரி, மிகச் சிறந்தவரென்று எல்லோராலும் மதிக்கப்பட்ட நிதி மந்திரி, கொல்லப்பட்டார். ஜப்பான் அடுத்துள்ள நாடுகளுடன் சமரஸமாய் வாழ வேண்டுமென்று விரும்பிய பாரன் டான் என்ற ஒரு பாங்க் அதிகாரிக்கும் அதே கதி நேரிட்டது.

ஜப்பானின் சமீப கால சரித்திரத்தில், ஆக்ரமிப்பு களை ஆரம்பித்த தேதிகள் நீங்கலாக, இரண்டு தேதிகள் அவசியம் குறிப்பிட வேண்டியவை. அவைதான் 1932 மே 15, 1936 பிப்ரவரி 26 இரண்டும். ஸர்வதேச சங்கத்தில் சேர்ந்து, வெளிநாடுகளுடன் உடன்படிக்கை களில் கையெழுத்திட்டு, பொதுவாக சமாதானக் கொள்கையை அவலம்பித்த சர்க்காரைத் தீர்த்துவிடுவதென்று ஒரு இளைஞர் கோஷ்டி சங்கற்பம் செய்துகொண்டது. கடற்படையைச் சேர்ந்த ஒன்பது அதிகாரிகள், 11 ராணுவ மாணவர்கள், 20 பிரஜைகள் சேர்ந்து, சர்க்காருக்கு எதிராக நேரடியான நடவ்டிக்கையை எடுப்பதென்று துணிந்தனர்.

முதல் மந்திரி, லார்ட் பிரிவி சீல், போலீஸ் தலைவர், ஸெயுகாய் கக்ஷியின் தலைமை ஸ்தாபனம், மின்சார ஸ்டேஷன்கள் இவற்றில் வெடிகுண்டுகளை விசுவதென்றும், இந்த வேலைகள் நடந்து கொண்டிருக்கையில் முதல்மந்திரி இனுகாய், லார்ட் பிரிவி சீல் கவுண்ட் மகினோ இருவரையும் சுட்டுக் கொல்வதென்றும் அவர்கள் தீர்மானித்தனர். ஜப்பானிய மக்களின் இருளைப் போக்கி ஜோதியை அவர்களுக்குக் காண்பிக்கும் இந்தப் புனிதமான வேலையில் குறுக்கிடுவோர் யாராயிருந்தபோதிலும் தேசத் துரோகிகள் என்று கருதி அவர்களை உடனே சுட்டுக் கொல்லவேண்டுமென்று அவர்கள் முடிவு செய்து கொண்டனர். இருள் வந்ததும் இவர்கள்

தங்கள் ராணுவ உடை தரித்து இரண்டு பிரிவுகளாகப் பிரிந்தனர். முதல் கோஷ்டியினர் முதல் மந்திரி வீடு சென்றனர். காவல் புரிந்த இரண்டு போலீஸ்காரரைச் சுட்டு வீழ்த்தினர். உள்ளே இருந்த முதல் மந்திரியின் உடலைச் சல்லடையாகத் துளைத்து விட்டனர். பிறகு இந்தத் தேசபக்தர்கள், போலீஸ் தலைமை ஸ்தாபனத்தையும் ஜப்பானிய பாங்கையும் முற்றுகை போட்டனர். ஆனால் அவர்களுடைய ஜம்பம் இங்கு சாயவில்லை. இரண்டாவது கோஷ்டியினரால் ஒரு சிலர் காயமடைந்தனரே தவிர வேறொன்றும் ஏற்படவில்லை. ஆறிடங்களில் முக்கியமான மெஷீன்களை உடைத்தெறிந்ததுடன் அவர்களுடைய விஷமம் நின்றது. இந்தச் செய்தியை 1933 மே மாதத்தில் ஜப்பானியப் பத்திரிகைகள் பிரசுரம் செய்ய அனுமதிக்கப்பட்டன. ஆனால், அவை இந்தப் படுகொலைகளைக் கண்டிக்கவில்லை. "தேசத்திற்கு எதிராகப் பலாத்காரம் பிரயோகிக்கப்பட்டால்தான் குற்றம். கலப்பற்ற தேச பக்தியிலிருந்து கிளம்பிய இந்தப் பலாத்காரம் நல்லதுதான்" என்று அவை போற்றிப் புகழ்ந்தன. அன்று முதல், ஜப்பானிய முதல் மந்திரி பதவிக்கு வருகிறவர்கள், தங்கள் சீட்டுக் கிழிந்ததென்றே கருதி, பதவியில் அமரவேண்டியதாயிற்று. லெப்டினெண்ட் ஜெனரல் நகாடா என்பவர் சிவிலியன்களுடன் ராணுவம் சமரஸமாய்ப் போக வேண்டுமென்று கருதிய ராணுவ

பீரோ தலைவர். அவருடைய கொள்கை அய்ஜாவா என்ற ராணுவ அதிகாரிக்குப் பிடிக்கவில்லை. ஆகவே நகாடாவை அய்ஜாவா கொலை செய்துவிட்டார்.

1936 பிப்ரவரி 26உ வந்தது. அன்றிரவு டோகியோவிலுள்ள பட்டாளம் கலகம் செய்து ஆறு மந்திரிகளைக் கொன்றுவிட்டது. ஒரு சவப் பெட்டிக்குள் புகுந்துகொண்டு, முதல் மந்திரி அட்மிரல் ஒகாடா உயிர் தப்பினர். போலீஸ் தலைமை ஸ்தாபனம், போஸ்டாபீஸ், தளபதி காரியாலயம், அரண்மனை முதலிய முக்கியமான இடங்களை யெல்லாம் துருப்புகள் கைப்பற்றி விட்டன. ஷிரோ னோனுகா, டேருஸோ என்ற தலைவர்களின் கீழ், 1,500 சோல்ஜர்கள் இதை யெல்லாம் செய்து விட்டனர். சக்ரவர்த்தியைச் சூழ்ந்து கொண்டு, ஜப்பானின் உண்மையான க்ஷேம லாபத்துக்கு விரோதமான ஆலோசனைகளை அவருக்குக் கொடுத்துக் கொண்டு, ஜப்பானிய ஏகாதிபத்தியத்தின் பெருமையைப் பாழ்படுத்திய ராஜதந்திரிகளைப் பலியிடுவது, சக்ரவர்த்தியின் பிரஜைகள் என்ற முறையில், தங்கள் கடமை என்று அவர்கள் பகிரங்கமாய் ஒரு அறிக்கை விடுத்தனர்.

வெளியிலிருந்து துருப்புகளை வரவழைத்தால் அவர்கள் கலகக்காரர்களுடன் சேர்ந்து விடுவார்களோ என்ற பயமிருந்தது. ஆனால், யுத்த மந்திரியான ஜெனரல் கவாஷிமாவும் இதர ராணுவத் தலைவர்களும் அவர்

களுக்கு உற்சாகமளிக்க மறுக்கவே, கலகத்தை ஒடுக்கு வது சுலபமாயிற்று. சக்ரவர்த்தி பிறப்பித்த உத்தரவைச் சிரமேல் வகித்து கலகக்காரர் வேறிடத்துக்குப் பந்தோ பஸ்து வேலைக்குச் சென்றனர். உள்நாட்டு மந்திரி கோடோ என்பவரைத் தலைவராகக் கொண்ட ஒரு புது மந்திரி சபை நியமிக்கப்பட்டது. இந்த மந்திரி சபை கலகக்காரருடன் சமரஸம் செய்துகொள்ள முற்பட்டது. சமரஸப் பேச்சுக்கள் மறுநாள் முறிந்துவிட்டன. ஆனால், ஜப்பான் முழுவதையுமே எதிர்த்துப் போரிடு வது சாத்தியமில்லை என்று தெரிந்து அவர்கள் பணிந்து விட்டனர். கலகத்துக்கு மூலகாரணமான மூவர் ஹரா கிரி (குடல்களைக் கிழித்துக் கொண்டு பிராணனை விடுவது) செய்துகொண்டனர். கென்சிகி அயோஷிமா என்பவரின் மனைவியும் அவருடன் தற்கொலை செய்து கொண் டாள். துருப்புகள் ஆயுதங்களை எடுத்துச் செல்ல அனு மதித்த இரண்டு மேஜர்கள் தங்களைச் சுட்டுக் கொண்ட னர். கலகக்காரரின் பிரகடனத்தைத் தயாரித்த நப ரும் தன்னை மாய்த்துக்கொண்டான்.

"ஆசியா ஆசியாக்காரர்களுக்குத்தான்" என்பது ஜப்பானிய ராணுவத்தின் கோஷமானது கண்டு ராஜ தந்திரிகள் கலக்க மடைந்தனர். நிதானக் கொள்கையை சர்க்கார் அனுஷ்டிப்பது அதனால் அசாத்யமாயிற்று. ஜெனரல் அராகி யுத்த மந்திரியா யிருப்பது ராணுவத் துக்குப் பிடிக்கவில்லை. ஜெனரல் ஹயாஷி அந்த ஸ்தா

னத்துக்கு வந்தார். இந்த ராணுவப் புரட்சிக்குப் பின், வெளிநாட்டு மந்திரியாயிருந்த ஹிரோடா முதல் மந்திரி யானார். அவர் ராணுவ அதிகாரிகள் கிழித்த கோட்டை மீறி நடக்கவேயில்லை.

1936 ஜுலை 14௳, யுத்த மந்திரி ஜெனரல் டெராஷி, ஆயுத விஸ்தரிப்புக்கு 6 வருஷங்களில் 17½கோடி பவுன் வேண்டுமென்று கேட்டார். கடற்படை மான்யங்கள் பிறகு வருமென்று எச்சரித்தார். அமெரிக்க கடற்படைப் பெருக்கும், ஸோவியத் ரஷ்யா ஸைபீரியாவில் யுத்த ஏற்பாடுகளைச் செய்து வருவதும், வேறுவழியின்றி ஜப்பானை ஆயுத விஸ்தரிப்பில் இறக்கியிருப்பதாக ஜெனரல் டெராஷி தெரிவித்தார். சென்ற வருஷம் நடைபெற்ற பொதுத் தேர்தலில் ராஜீயக் கக்ஷிகளுக்கே அதிக மெஜாரிடி இருந்த போதிலும் ராணுவத்துக்குப் பிடித்த மான தனிப்பட்ட மந்திரி சபையே அமைக்கப்பட்டதி லிருந்து ஜப்பானில் மீண்டும் ராணுவமே ஆதிக்கம் பெற்றுள்ள தென்பது வியக்தமாயிற்று.

ஜப்பானிய ராணுவமும் சக்ரவர்த்தியுந்தான் உண்மையிலேயே ஜப்பான் என்று கூறலாம். ரஷ்யா தவிர வேறு எல்லாத் தேசங்களிலும் பணந்தான் பேசு கிறது என்பது மறுக்க முடியாத உண்மை. ஜப்பானி லும் மிட்ஸுயி, இவாஸாகி, ஸுமீமோடோ, அஸானோ, யாஸுதா என்ற ஐந்து குடும்பங்கள்தான் தேசிய வாழ்க்கையையே கட்டியாள்கின்றன. ராணுவம் என்

றைக்குத் தங்களைக் கவிழ்த்துவிடுமோ என்ற பயம் இந்தக் கோடீச்வரக் குடும்பத்தினரின் மனதைவிட்டு அகல்வதில்லை. ஜப்பானிய ராணுவம் முதலாளிகளுக்கு விரோதமானது. அதை பாஸிஸ்ட் என்றும் விவரிப்பதற்கில்லை அது பிற்போக்காளரின் ஸ்தாபனமு மல்ல. ஜப்பானின் பிரத்தியேகப் 'போக்குக்கு இசைந்தவாறு அது ஒரு தனி எழுச்சி. ராணுவந்தான் தன்னலத் தியாகம் செய்து நடக்கமுடியு மென்பது ஜப்பானில் எங்கும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள ஸித்தாந்தம். சக்ரவர்த்தியிடம் விசுவாசம், கண்யமாக நடந்து கொள்வது, வீரத்தைப் போற்றுவது, நேர்மையாகவும் உண்மையுணர்ச்சியுடனும் நடந்து கொள்வது, எளிய வாழ்க்கை நடத்துவது இவைதான் ராணுவ வீரர்களின் அடிப்படையான கோட்பாடுகள் என்பது பல வருஷங்களுக்கு முன்னமேயே பிரகடனம் செய்யப்பட்டுள்ள விஷயம்.

ஜப்பானிய ராணுவம் ஒரு திசையிலும், பொது ஜன அபிப்பிராயம் வேறு திசையிலும் இருப்பதாகத் தோன்றலாம். ஆனல், உண்மையிலேயே 1932 படுகொலைகளுக்குப் பிறகு, ராணுவம் சொல்வதுதான் சரி: மந்திரிகள் அதற்குக் கீழ்ப்படிந்தே தீரவேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. கொஞ்ச காலமாக, தொழிற் சங்கங்கள் கிளம்பியுள்ளதற்குக் காரணம், ராணுவ அதிகாரிகள் அவை அவசியமென்று கருதுவதால்தான்.

தற்போதைய ஜப்பானைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமானால், அதன் ராணுவ மனப்பான்மையை நன்றாகத் தெரிந்து கொள்வது அவசியம். உலகத்திலேயே ஜப்பானி லிருப்பதைப் போன்ற மனப்பான்மையுள்ள ராணுவம், கடற்படை, விமானப்படை கிடையாது. டோகியோ பூகம்பத்திலும்; பிறகு ஒஸாகா வெள்ளக் கஷ்ட நிவாரணத்திலும் ராணுவம் அளித்த உதவி அபாரமானது. ஜனங்களுக்கு ராணுவத்திடமுள்ள மதிப்பு இதன் விளைவாகப் பன்மடங்கு உயர்ந்தது. ஆனால், இந்த ராணுவங்கூட சக்ரவர்த்தியின் கட்டளைகளை எக்காலத்திலும் மீறி நடப்பதில்லை. 'புஷீதோ' என்ற கோட்பாடு இதை அடிப்படையாக வற்புறுத்துகிறது.

ஏகாதிபத்ய ரிசர்வுகள் சங்கம், யுவர் லீக் என்ற இரண்டு ஸ்தாபனங்கள் இருக்கின்றன. இவை ஒவ்வொன்றிலும் பத்து லக்ஷம் மெம்பர்களுக்குக் குறையாம லிருக்கிறார்கள். ராணுவத்திடம் இவர்களுக்கு அழிக்க முடியாத நம்பிக்கையுண்டு. "ராஜீயக் கக்ஷிகளைக் கலைத்து விடுக" என்று ஜெனரல் மட்ஸுவோகா ஒரு முறை கூறியபோது, இந்த இரண்டு ஸ்தாபனங்களுந் தான் அவருக்குப் பூர்ணமான அனுதாபத்தைக் கொடுத்தவை. 1932 மே மாதத்தில் இனுகாய் படுகொலை முதல் இன்று வரை, ராணுவ ஆதிக்கமே இருந்து வருகிறது. ஜப்பானிய ராணுவம் ஒரு தினுசான சோஷலி

சத்தில் நம்பிக்கையுள்ளது. அவர்களுடைய திட்டம் இக்தி காடா என்பவர் எழுதியுள்ள ஒரு புஸ்தகத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

1936-ல் சின ஸோவியத்துகள் சின சர்க்காருடன் ஒத்துழைக்க முற்படவே ஜப்பானுக்குக் கலக்கமேற்பட்டது. ஸோவியத் ராணுவம் பற்றி ஜப்பானிய ராணுவ இலாகாக்களின் தலைவர் ஜெனரல் தெய்ஜி ஒகமூரா 1935-ல் கூறியிருப்பதாவது :

"சீனப் பொதுவுடைமைப் படைகள் திறமையுடன் போரிடக்கூடியவை. அவற்றை அழிக்க சீன சர்க்காரால் முடியவில்லை. ஆகையால் அந்த வேலையை ஜப்பான் செய்ய வேண்டும். சீனுவிலிருந்து அவர்களை விரட்ட ஒரு லக்ஷம் ஜப்பானியத் துருப்புகள் தேவை. இந்த விஷயத்தில் ஜேனரல் சியாங்-கே-ஷேக்குடன் ஒத்துழைக்க நாம் தயார்."

1936 பிப்ரவரியில், ஜப்பானிய பார்லிமெண்டில் இதைப் பற்றி ஒரு ராணுவப்பேர்வழி கேள்விகேட்டார்.

"சீனுவைச் சுத்தப்படுத்துவதற்கு ராணுவத்துக்கு ஒரு லக்ஷம் துருப்புகளை சர்க்கார் கொடுக்கப் போகிறார்களா ?" என்பது கேள்வி.

"இல்லை" என்று பதிலளித்தார் ஜப்பானின் லார்ட் பிரிவி ஸீலாகிய வைகவுண்ட் ஸைடோ. இது கழிந்த இரண்டே வாரங்களில் நடைபெற்ற ராணுவக் கலகத்தில் அவர் சுட்டு வீழ்த்தப்பட்டார்.

மேல்நாடுகள் வேறிடத்தில் அதிக சிரத்தை காட்டி வரும்போதே சீனுவை ஓரளவுக்காவது ஜெயித்துவிட வேண்டுமென்பது ஜப்பானிய ராணுவத்தின் துணிபு. சர்க்கார் தலைவர்கள் குறுக்கே நின்றது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. தங்களுக்கு யுக்தமெனத் தோன்றியதைச் செய்து திருவதென்று ராணுவம் தீர்மானித்தது.

1936 ஜுலை 23ல் ஜப்பூனெங்கும் பிரம்மாண்டமான ஒத்திகைகள் நடைபெற்றன. விமானப் படையெடுப்பைச் சமாளிக்க 2,30,000 தொண்டர்களடங்கிய படைக்கு சகலவிதமான நுணுக்கங்களுடன் பயிற்சி அளிக்கப்பட்டது.

———

## பதினென்ருவது அத்தியாயம்

## கீழ்க்கோடியும் அந்நிய வல்லரசுகளும்

**வர்**த்தக உலகில் ஜப்பானுக்கும் பிரிட்டனுக்குந் தான், எல்லா மார்க்கெட்டுகளிலும் கடுமையான போட்டி இருந்து வருகிறது. ஜப்பானியத் தொழில் அமைப்பும், ஜப்பானியரின் தேச பக்தியும், உழைப்பும், ராணுவ ஆதிக்கமும் அந்நாட்டின் பொருளாதார அமைப்பை யுத்த ரீதியில் வைத்துள்ளன. ஆகவே, எல்லா நாடுகளிலும், பிரிட்டன் தலைதூக்க முடியாதவாறு போட்டி போட ஜப்பானுல் முடிகிறது.

1929-ல் உலகில் வர்த்தக மந்தம் தோன்றியது. அதற்கு முந்திய நான்கு வருஷங்களை 1924-28-ஐ எடுத்துக்கொண்டு பார்த்தால், அக்காலத்திய சராசரியை விட, 1931-ல் உலக வர்த்தகம் 25% குறைவாயிருந்தது. 1932-ல் குறைவு 40% ஆக உயர்ந்து விட்டது. ஆனால் ஜப்பானிய ஏற்றுமதி வர்த்தகம் மாத்திரம் பின்வருமாறு வளர்ந்து வந்தது.

| வருஷம் | ஏற்றுமதி | |
|---|---|---|
| 1931 | 98·7 | கோடி யென். |
| 1932 (10 மாதம்) | 108·5 | ,, |
| 1933 (9 மாதம்) | 158·0 | ,, |

ஜப்பானின் ஏற்றுமதிகளில் முக்கியமானது பருத்தி ஜவுளி. சதுர கஜக் கணக்குப்படி பிரிட்டனுக்கும் ஜப்பானுக்குமிருந்துவந்த போட்டியைக் கீழ்க்கண்ட புள்ளி விவரங்கள் விளக்குகின்றன.

| வருஷம். | பிரிட்டன். (கோடி சதுர கஜம்) | ஜப்பான். (கோடி சதுர கஜம்) |
|---|---|---|
| 1928 | 386·6 | 141·8 |
| 1929 | 367·1 | 179·0 |
| 1930 | 240·6 | 157·1 |
| 1931 | 171·6 | 141·3 |
| 1932 | 219·8 | 203·1 |
| 1933 (6 மாதம்) | 154·9 | 156·8 |

1928-ல் பிரிட்டன் ஏற்றுமதி செய்த நார்ப்பட்டு ஜவுளியின் மதிப்பு ஜப்பானிய நார்ப்பட்டு ஏற்றுமதியின் மதிப்பைப் போல் 8 பங்கு இருந்தது. 1932-ல் இந்த இனத்தின் கீழ் ஜப்பானிய ஏற்றுமதி, பிரிட்டிஷ் ஏற்றுமதியைவிட மும் மடங்காகிவிட்டது. சீனுவுக்குக் கம்பள ஜவுளிகளை அனுப்புவதிலும் பிரிட்டன் ஜப்பானை முந்திக் கொண்டது. 1933-ல் ஆஸ்ட்ரேலியாவிலிருந்து அதிக மான கம்பள மயிர் வாங்கியது ஜப்பான்தான்.

எகிப்திலும் பிரிட்டிஷ் ஜவுளி இறக்குமதியை ஜப்பானியப் போட்டி மிகவும் குறைத்து விட்டது.

டச்சு கிழக்கிந்தியத் தீவுகளில் ஜப்பானிய ஜவுளிகள், சைக்கிள்கள், வர்ணம், உலோக சாமான்கள் முதலிய வைகளை ஜப்பான் விற்கும் விலைக்கு வேறு எந்தத் தேச மும் விற்பனை செய்ய முடியாது. இங்கு ஹாலந்தே முதன்மை ஸ்தானம் இழந்துவிட்டது. 1927-ல் பிரிட்ட னும் ஜப்பானும், முறையே 13·1 கோடி, 17·7 கோடி கஜம் ஜவுளியை ஜாவாவுக்கு அனுப்பின. 1932-ல் இந்தப் புள்ளிகள் முறையே 3·8 கோடி, 30·6 கோடியாகி விட்டன.

இராக் 1931-32-ல் 98,000 பவுன் பெறுமான ஜப் பானிய சாமான்களை இறக்குமதி செய்தது. 1932-33-ல் இது 4,25,000 பவுனுய் உயர்ந்தது. பிரிட்டனும் இத் தாலியும் இந்த மார்க்கெட்டிலிருந்து நெருக்கி வெளியேற் றப்பட்டன. மேற்கு ஆப்பிரிக மார்க்கெட்டையும் ஜப்

பான் பிடிக்க வாரம்பித்தது. கிழக்கு ஆப்பிரிக இறக்குமதிகளில் ஜப்பான்தான் முதன்மை ஸ்தானம் பெற்றிருக்கிறது.

1933-ல் முதல் எட்டு மாதங்களில் ஜப்பான், முந்திய வருஷத்தில் அதே காலத்தைவிட 140% மெஷின்கள், 106% உலோக சாமான்கள், 104% விளையாட்டுப் பொம்மைகள், தெர்மாஸ் பிளாஸ்க் வகையறு 90%, கண்ணாடி 84%, பின்னல் ஜவுளி 72%, பீங்கான் 70% அதிகமாய் உற்பத்தி செய்திருக்கிறது.

வர்த்தக மந்தக் காலத்தில் ஜப்பான் இம்மாதிரி கழுத்தறுக்கும் போட்டியில் ஈடுபட்டது கண்டு முதலாளித்வ நாடுகள் தத்தளித்தன. 1933 நவம்பருக்குள் 37 நாடுகளில் ஜப்பானிய இறக்குமதிகள் மீது தடைகளும் நிர்ப்பந்தங்களும் விதிக்கப்பட்டன. பிரிட்டன் தான் மற்றெல்லா நாடுகளையும்விட அதிகமாய்ப் பாதிக்கப்பட்டதால், 1934 ஜனவரியில் பல கன்சர்வேடிவ் பார்லிமெண்ட் மெம்பர்கள் பெரிய ஆர்ப்பாட்டம் நடத்தி, ஜப்பானுடன் எல்லா வர்த்தக உறவுகளும் அறுபடவேண்டும் என்று ஆர்ப்பரித்தனர். "அநீதமான வர்த்தக முறைகளின் மூலம் பிரிட்டனுக்கு நஷ்டம் விளைவித்து ஜப்பான் முன்னேறியுள்ளது" என்று 30-11-33-ல், பிரிட்டிஷ் கன்சர்வேடிவ் பத்திரிகையாகிய லண்டன் "டைம்ஸ்" கூறியிருக்கிறது.

பிரிட்டன், இத்தருணத்தில்தான் ஜப்பானின் போட்டியைச் சமாளிக்கப் பல அசாதாரண முறைகளை அனுஷ்டிக்க வாரம்பித்தது. பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாடுகள் பரஸ்பரம் அதிகச் சலுகைகளைச் செய்து கொடுக்கும், ஒட்டாவா ஒப்பந்தம் 1933-ல் தான் கையெழுத்தாயிற்று. ஜப்பானிய சாமான்களுக்கு எல்லா பிரிட்டிஷ் நாடுகளிலும் கடுமையான இறக்குமதி வரிகள் விதிக்கப்பட்டன. இந்தியா, ஜப்பானுக்கும் பிரதான மார்க்கெட்டு தான். ஆயினும், பிரிட்டன் ஜப்பானிடமிருந்து அதைப் பறித்துவிடச் செய்த முயற்சிகள் அனந்தம். 1933 ஏப்ரல் 11உ ஜப்பானியத் துணிகளின் இறக்குமதியைக் கட்டுப்படுத்தும் மசோதா இந்திய அசெம்ப்ளியில் நிறைவேற்றப்பட்டது.

இதில் இந்திய முதலாளிகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன் பூர்ணமாய் ஒத்துழைத்தது குறிப்பிடத்தக்கது. ஜப்பானுக்கு வர்த்தகச் சலுகைகளை யளித்து இந்தியா 1905-ல் ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டிருந்தது. அந்த ஒப்பந்தத்தையும் பிரிட்டன் நிராகரித்து விட்டது.

1905 முதல் 1932 வரை இந்தியாவுக்கு அனுப்பிய ஏற்றுமதிகளைவிட, அங்கிருந்து ஜப்பான் அதிகமாகவே இறக்குமதி செய்து வந்தது. 1932-ல்தான் ஜப்பானிய ஏற்றுமதிகள், இந்தியாவிலிருந்து இறக்குமதிகளைவிட 756·3 லக்ஷம் யென் அதிகமாயிருந்தன. இதற்குக்

காரணம் இந்திய மார்க்கெட்டிலிருந்து பிரிட்டிஷ் ஜவுளிகளை ஜப்பான் அதிகமாய் விரட்டியதே. தவிர பிரிட்டிஷ் சாமான் பகிஷ்காரமும் ஜப்பானிய வர்த்தகத்துக்குக் கொஞ்சம் உற்சாகமளித்தது.

இந்தியாவுடன் ஜப்பானிய வர்த்தகம் எப்படிப் பெருகி வந்தது என்பதைக் கீழ்க்கண்ட புள்ளிகள் விளக்குகின்றன:

## இந்தியாவிற்கு ஜப்பானிய ஏற்றுமதிகள்.

கோடி யென்களில்

| | 1930 | 1931 | 1932 |
|---|---|---|---|
| பருத்தி ஜவுளி | 6 | 5 | 8 |
| பட்டு ,, | 1¾ | 2 | 3¼ |
| பருத்தி நூல் | ·65 | ·55 | 1·4 |
| பின்னல் ஜவுளி | ·8 | ·4 | ·66 |
| கண்ணாடி | ·3 | ·2 | ·4 |
| பீங்கான் | ·2 | ·1 | ·3 |
| இரும்பு சாமான் | ·17 | ·17 | ·33 |
| பித்தளை ,, | ·19 | ·11 | ·29 |

1932 வரை, ஜப்பானின் வெளிநாட்டு வியாபாரத்தில், அமெரிக்கா முதல் ஸ்தானத்தையும், சீனாவும், இந்தியாவும் இரண்டாவது மூன்றாவது ஸ்தானங்களையும் வகித்து வந்தன. மஞ்சூரியப் போருக்குப் பின் சீன வர்த்தகம் குறையவே, இந்தியா இரண்டாவது ஸ்தானத்தை அடைந்தது. மொத்த ஜப்பானிய ஏற்றுமதி

களில் 31% அமெரிக்காவுக்கும் 10% இந்தியாவுக்கும் சென்றன. ஜப்பானிய இறக்குமதிகளில் 35% அமெரிக்காவிலிருந்தும் 8% இந்தியாவிலிருந்தும் வந்தன. 1905 ஒப்பந்தத்தைப் பிரிட்டன் ரத்துச் செய்துவிட்டதன் விளைவாக ஜப்பானிய ஏற்றுமதி வர்த்தகமும் கப்பல் தொழிலும் வெகுவாகப் பாதிக்கப்பட்டன. ஜப்பான் இந்தியாவிலிருந்து அதிகமாய் இறக்குமதி செய்வது பருத்தியும் இரும்புந்தான்.

கோடி யென்

| | 1930 | 1931 | 1932 |
|---|---|---|---|
| பருத்தி. | 14·8 | 11·3 | 9·2 |
| இரும்பு. | 3·6 | 2·5 | 2·0 |

இந்தியாவில் சராசரி உற்பத்தியாகும் பருத்தி 48 லக்ஷம் பேல். இவற்றில் 1931-ல் 11 லக்ஷம் பேல்களும், 1932-ல் 15 லக்ஷம் பேல்களும் ஜப்பானுக்கு வந்தன. இந்தப் பருத்தி மார்க்கெட்டை இந்தியா இழந்த போதிலும் பரவாயில்லை; தன் ஜவுளிகள் ஓங்கினல் போதுமென்ற கெட்ட எண்ணத்துடன் பிரிட்டன் தன் இஷ்டம் போல் இந்திய இறக்குமதி வரிகளை மாற்ற முற்பட்டது. லங்காஷயர் வர்த்தகர்கள் இடைவிடாமல் கூச்சலிட்டதன் பேரில் பிரிட்டன் அனுசரணையாக நடந்துகொண்டது. 1930-ல் பிரிட்டிஷ் ஜவுளிகளுக்கு 15%, மற்ற ஜவுளிகளுக்கு 20% ஆக இருந்த இறக்குமதி வரி, 1931-ல் 25%, 31¼% ஆயிற்று. ஆனல்,

1932-ல் இந்திய ஸத்யாக்ரஹத்தை முறியடித்த சர்க்கார், நுணிச்சலுடன் கேட்பாரின்றி, ஜப்பானிய சாமான்கள் மீது வரியை 50% ஆக்கியது. 1933 ஏப்ரலில் பிரிட்டிஷ் ஜவுளி வரிக்கும் ஜப்பானிய வரிக்கும் 50% வீதாசாரம் வித்தியாஸமிருந்தும் ஜப்பானிய சாமான்களுடன் போட்டிபோடச் சாத்தியமில்லாமல் பிரிட்டன் தத்தளிக்கவே, ஜப்பானில் தொழில் நிலைமை மோசமாயிருப்பதாகவும், அநீதப் போட்டியில் ஈடுபடுவதாகவும், தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்றும் 1933 மே 2உ, ஸ்ரீ. லேவி என்ற கன்சர்வேடிவ் மெம்பர் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் ஓலமிட்டார். 1905 இந்தோ - ஜப்பானிய ஒப்பந்தம் நிராகரிக்கப்பட்டதை ஆட்சேபித்து லண்டனிலிருந்த ஜப்பானிய ஸ்தானீகர் ஸ்ரீ. மட்ஸுதோா ஒரு கண்டனத்தைச் சமர்ப்பித்தார். பிறகு இந்தோ-ஜப்பானிய வர்த்தக ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்டது. ஆனல், அதற்குப் பூர்வாங்கமாக, 1933 ஜூன் 7உ யன்று, ஒப்பந்தம் சம்பந்தமாக ஜப்பானின் வேண்டுகோளுக்குப் பதிலளிக்குமுன், ஜப்பானிய ஜவுளி மீது வரியை 75% ஆக உயர்த்திவிட்டனர். ஜப்பான் இந்தியப் பருத்தியைப் பகிஷ்கரித்தது. பகிஷ்காரம் அநேகமாய்ப் பூர்ணமாயிற்று. கடைசியாக வர்த்தக ஒப்பந்தம் அடுத்த வருஷத்தில் செய்து கொள்ளப்பட்டது. இதன் மூலம் ஜப்பான் இந்தியாவுக்கு அனுப்பவேண்டிய ஜவுளிக்கும் இந்தியாவிலிருந்து வாங்கவேண்டிய பருத்திக்

கும் ஒரு தாராதர விதாசாரம் ஏற்படுத்தப்பட்டது. ஆனால் பிரிட்டன் அதற்குள் ஒட்டாவா சலுகையைப் பெற்றுக்கொண்டது மட்டுமின்றி, பிரிட்டிஷ் ஜவுளிமீது இறக்குமதி வரியையும் குறைக்கச் செய்தது. அது மட்டுமல்ல; இந்தியாவிலிருந்து பிரிட்டன் பருத்தி வாங்கித் தீரவேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லை. ஏதோ பசப்பு வார்த்தைகள் கூறி, ஜப்பானைவிட மிகமிகக் கொஞ்சமாகத்தான் இந்தியப் பருத்தியை வாங்குகிறது. ஜப்பானுடன் செய்துகொண்ட ஒப்பந்தம் 1936-ல் காலாவதியாயிற்று. ஆனால், அதைப் புதுப்பிப்பது பற்றி இன்னம் திருப்திகரமான ஏற்பாடு நடைபெறவில்லை. ஒட்டாவா ஒப்பந்தம் இந்தியாவுக்கு விரோதமானதென்று கூறி இந்திய அசெம்பிளி அதை நிராகரித்தும், பிரிட்டன் அதன்படி பலன்களை இன்னும் அனுபவித்து வருகிறது. இந்தியாவுடன் வர்த்தக பேரம் நடைபெறு வது இதற்கு ஒரு வியாஜமாக எடுத்துக் காண்பிக்கப் படுகிறது. இதெல்லாம் ஜப்பானுக்கு ஆத்திரத்தையும் கோபத்தையும் வளர்த்தன. இந்தியாவைப் போலவே, எல்லா பிரிட்டிஷ் காலனிகளிலிருந்தும் ஜப்பானிய சாமான்கள் நெருக்கப்பட்டன. கெனியா, உகாந்தா, டங் கனிகா, எகிப்து, மலாய் நாடு, சோமாலிலாந்து-எல்லாம் ஜப்பானுக்குப் பிரதிகூலமான மார்க்கெட்டுகளாயின. இடையே, சீனுவில் ஜப்பானிய துவேஷம் வளர்ந்து வருவதன் காரணமாக, பிரிட்டிஷ் ஜவுளிக்கு அதிகக்

கிராக்கி ஏற்பட்டு வந்திருக்கிறது. இவ்வாறு பிரிட்டனுக்கும் ஜப்பானுக்கும் பல வருஷங்களாகவே வர்த்தக யுத்தம் நடந்துவந் திருக்கிறது.

சீன வர்த்தகம் சம்பந்தமாக இரண்டு நாடுகளுக்குமிடையேயுள்ள உறவைச் சற்று கவனிப்போம்.

சீனவை வல்லரசுகள் பங்கிட்டுக் கொள்ளும் சூழ்ச்சியைப் பல ஸர்வதேச சிக்கல்கள் தடுத்துவிட்டன. ஆனல் சீனவில் தங்கள் பொருளாதார ஆதிக்கத்தை நிலைநாட்டிப் பெருக்கிக் கொள்வதில் எல்லா வல்லரசுகளுக்கும் மிகுந்த சிரத்தையிருந்து வருவது உலகமறிந்ததே. சீனவின் ஜனத்தொகை 49 கோடி. ஆனல், உலகின் மொத்த வர்த்தகத்தில் சீனவின் வீதாசாரம் 2%தான். ஆகையால் இவ்வளவு பெரிய மார்கெட்டைப் பெருக்கிப் போஷிப்பதில், ஜப்பான், பிரிட்டன், அமெரிக்கா மூன்றும் போட்டிபோட்டு வருவதில் ஆச்சரிய மொன்றுமில்லை. சீனவுடன் இந்த நாடுகள் செய்து வந்துள்ள வர்த்தகத்தைப் பற்றிய கீழ்க்கண்ட புள்ளிகள் நிலைமையை நன்கு விளக்கும்:

(முதல் 5 மாதங்களில்)

| | 1912 | 1928 | 1929 | 1930 | 1931 | 1932 | 1933 |
|---|---|---|---|---|---|---|---|
| பிரிட்டன் | 18·8 | 9 | 9 | 8 | 9 | 11 | 10 |
| அமெரிக்கா | 8·3 | 17 | 18 | 18 | 22 | 25 | 21 |
| ஜப்பான் | 17 8 | 26 | 27 | 25 | 20 | 14 | 9 |

1933-ல் ஜப்பானிய வியாபாரம் குறைந்ததற்குக் காரணம் சீன ஜப்பானிய யுத்தமே. ஆயினும் வட சீனுவில் ஜப்பானிய ஆதிக்கமும் கள்ள வர்த்தகமும் அபரிமிதமாகிக் கொண்டுவந்ததால், ஜப்பானின் எதிர்காலப் போட்டியைப்பற்றி பிரிட்டனில் கவலை அதிகரித்து வந்தது. அமெரிக்காவும் தன் வியாபாரத்தைப் பெருக்கி வந்ததால் பிரிட்டன் ராஜதந்திர முறைகளின் மூலம் அமெரிக்காவுடன் மீண்டும் நேசம் பாராட்ட ஆரம்பித்தது. இதையெல்லாம் பார்த்து, ஜப்பானுக்கு பிரிட்டனிடம் சந்தேகம் அதிகரித்துள்ளது. வெகு சீக்கிரத்தில் இந்தியரிடையே எற்பட்டுள்ள விழிப்பின் விளைவாக இந்திய மார்க்கெட்டைப் பிரிட்டன் அநேகமாய் இழந்துவிடும். அந்த நிலைமையில் சீனுவைத் தவிர பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளுக்குத் தங்கள் சரக்கை விற்க இடமில்லை. ஆகவே, பிரிட்டன் சீனுவிலுள்ள உரிமைகளைக் காப்பாற்றிப் பெருக்கிக்கொள்ள அவசியம் நேரிட்டால், ஆயுத பலத்தை உபயோகிக்கத்தான் செய்யுமென்பதை உணர்ந்தே, ஜப்பான் பல வருஷங்களாகவே தன் ஆயுத பலத்தையும், கடற்படை பலத்தையும் பெருக்கி வந்திருக்கிறது. ஒரே அடியாகச் சீனுவை ஜெயித்து ஜீர்ணிப்பதும் சாத்தியமில்லை யாதையால், 1931-32-ல் மஞ்சூரியா, 33-ல் ஜிஹோல், 34-ல் வட சீனுமீது ஆதிக்கம், 37-ல் வடசீனுவையும், பிரிட்டிஷ் உரிமைகள் அதிகமாயுள்ள யாங்ட்ஸீ பிரதேசத்தையும்,

ஸ்வீகரித்துக் கொள்வதுபோன்ற வேலைகளை ஜப்பான் படிப்படியாகச் செய்து வருகிறது. பிரிட்டன் கிழக்கோடியில் தன் உரிமைகளை விட்டுக் கொடுக்கவேண்டும், அல்லது அவற்றிற்காக ஜப்பானுடன் போராடவேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அமெரிக்கா என்ன பேசிய போதிலும் ஜப்பானைத் தாக்க வராது என்று ஜப்பானிய நிபுணர்கள் கருதுகின்றனர்.

தொன்று தொட்டு ஜப்பானுக்கு விரோதமாகப் பிரிட்டன் ஒவ்வொரு சமயத்திலும் நடந்து வந்திருப்பதாக ஜப்பானிய ராணுவ அதிகாரிகள் இயற்றியுள்ள பல நூல்கள் கூறுகின்றன. பிரிட்டன்தான் ஜப்பானின் பரம விரோதி என்று ஜப்பானியரிடையே பிரசாரம் செய்யப்பட்டு வருகிறது. ஜப்பானிய ஜனத்தொகைப் பிரச்னை தீர்க்கப்பட வேண்டுமானல், ஆஸ்ட்ரேலியாவில் ஜப்பான் எவ்வாருயினும் இடம் பெற்ருக வேண்டியிருக்கும் என்று ஜப்பானிய ராஜ தந்திரிகள் கூறியுள்ளனர். ஜப்பானிய விஸ்தரிப்பைத் தடுப்பதற்காக, அமெரிக்காவுடன் சேர்ந்தோ, அல்லது தனியாகவோ பிரிட்டன் ராணுவ நடவடிக்கைகளை எடுக்கக்கூடும் என்பதையும், பஸிபிக் மகாநாட்டில் ஏற்படும் நெருக்கடியிலிருந்துதான் இந்த யுத்தம் கிளம்பப் போகிறதென்றும், 1936-ல் டோடா இஷிமாரு என்ற ஜப்பானிய ராணுவ அதிகாரி ஒரு ருசிகரமான புத்தகத்தில் விவரித்திருக்கிருர். "ஜப்பான் பிரிட்டன்மீது போர் தொடுக்க

வேண்டும்" என்பது அந்த நூலின் பெயர். இந்த யுத்தம் எவ்வாறு, எப்படி நடந்தபோதிலும் அதற்கெல்லாம் தயாராக, தற்காப்புப் பிளான்கள் வகுத்து வைக்கப்பட்டுள்ளன என்பதை அவர் அந்தப் புத்தகத்தில் விளக்கமாய்க் கூறியிருக்கிறார். அத்தகைய யுத்தத்தில் அமெரிக்காவும் பிரிட்டனும் ஒன்று சேராமலிருக்கவும், பிரிட்டன் தன் முழுபலத்துடன் தாக்காமலிருக்கவும் பக்குவமான ஸர்வதேச நெருக்கடிகளை, ஜெர்மனி, இத்தாலி இவற்றுடன் சேர்ந்துகொண்டு ஜப்பான் ஒன்றன் பின் ஒன்றாக சிருஷ்டித்து வருகிறது.

பிரிட்டன் தூங்கிக்கொண்டிருக்கவில்லை. எதற்கும் தயாராகத் தன்னைப் பலப்படுத்திக் கொண்டு வருகிறது. பஸிபிக் முகவாயிலுள்ள ஸிங்கப்பூர்தான், கீழ்க் கோடியிலுள்ள பிரிட்டிஷ் உரிமைகளின் மர்ம ஸ்தானமாயிருந்து வருகிறது. இந்தியா, சீனு, ஆஸ்ட்ரேலியா, ஜப்பான் முதலிய நான்கு தேசங்களின் வர்த்தக மார்க்கங்களும் இங்கு சந்திக்கின்றன. பிரிட்டிஷ் பலமும் அந்தஸ்தும் ஆசியா சம்பந்தப்பட்டவரை இதையே பொறுத்திருக்கின்றன. 80 வருஷங்களுக்கு முன் காட்டுமிராண்டிகள் வசித்த கானகமாயிருந்த இவ்விடம் இப்போது அபார முக்கியத்துவம் பெற்றுள்ளது. 1932-ல் இந்தத் துறைமுகத்தில் 20,000 கப்பல்களுக்குமேல் நங்கூரம் பாய்ச்சின. இந்தியா அல்லது கானடாவைப் போல் மலாய் நாட்டைப் பிரிட்டன் ஜெயிக்கவில்லை.

ஜோஹோர் சுல்தான் என்பவரிடமிருந்து இதை விலைக்கு வாங்கி, பிறகு கிழக்கிந்திய கம்பெனி ஸ்வாதீனப்படுத்திக் கொண்டது. பிறகு அது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் ஒரு பகுதியாகச் சேர்ந்தது. 26 மைல் அகலமுள்ள ஒரு பெரிய தீவில் இந்நகரம் அமைக்கப்பட்டிருக்கிறது. நகர மக்களில் பெரும்பான்மையோர் சீனர்களே. சில வருஷங்களுக்கு முன்னர்தான் இந்த ஸ்தலத்தைப் பிரிட்டன் உலகத்திலேயே முதன்மையான கடற்படைத் தளமாக்கியது. ஸிங்கப்பூர் கோட்டை வேலை ஆரம்பமான பிறகு பிரிட்டிஷ்-ஜப்பானிய ஐக்கியமும் கைவிடப்பட்டது. இது ஜப்பானின் அவநம்பிக்கையையும் சந்தேகத்தையும் அதிகரித்தது. சீனாவில் தனக்குள்ள உரிமைகளை மட்டுமின்றி, நியூஜீலாந்து, ஆஸ்ட்ரேலியா, கிழக்கிந்தியத் தீவுகள் முதலியவற்றின் பாதுகாப்பையும் உத்தேசித்தே பிரிட்டன் இந்த தளத்தைக் கட்டுவது தெரிந்தது. சீனாவில் ஜப்பான் தன் ஆதிக்கத்தை விஸ்தரித்துக் கொள்ளாமல் தடுப்பதற்குப் போராடவேண்டுமானால் கீழ்க்கோடியில் பிரிட்டனுக்குப் பலம் வாய்ந்த ஒரு கடற்படை தளம் அவசியம். தவிர, அமெரிக்காவின் நேசத்தை இழக்காமலிருக்க வேண்டுமானால், பஸிபிக்கில் பிரிட்டிஷ் உதவி இன்றியமையாத தென்று அவர்கள் கருதும் நிலைமை அவசியமானது. கீழ்க்கோடியில் அமெரிக்காவுக்கு நல்ல கடற்படை நிலையம் கிடையாது. ஆகையால் ஜப்பானுடன் நேரிடக்கூடிய

எந்தத் தகராறிலும் ஸிங்கப்பூர் கடற்படை நிலையத்தையே அமெரிக்கர் நம்பியிருக்குமாறு பிரிட்டன் செய்து விட்டது. ஆகையால், ராஜதந்திர முறைப்படியும் இதன் முக்கியத்துவம் வரவர அதிகரித்து வருகிறது. பிரிட்டனில் தொழிற் கக்ஷி அதிகாரத்துக்கு வந்தபோது சமாதானத்தில் தங்களுக்குள்ள அடிப்படையான நம்பிக்கையை உலகிற்கு எடுத்துக் காட்டி நிரூபிக்கும் முறையில், ஸிங்கப்பூர் நிலைய வேலையை நிறுத்தி வைத்தனர். ஆனால், ஆயுதப் பரிகரண மகாநாடு குப்புறக் கவிழ்ந்த பிறகு, கனவேகத்துடன் இந்த வேலை முடுக்கிவிடப் பட்டது. இன்று அது அநேகமாய்ப் பூர்த்தியாகி விட்டதென்று கூறலாம்.

## ஹாலந்தின் உரிமைகள்

ஸிங்கப்பூருக்கு அருகாமையிலுள்ள டச்சு கிழக்கிந்தியத் தீவுகள் மிகவும் மர்மமான இடத்திலிருக்கின்றன. அவற்றின் முக்கியத்துவத்தை மிகைப்படுத்திக் கூறமுடியாது. இங்கு டச்சு ஆதிக்கம் ஏற்பட்டு 300 வருஷங்களுக்கு மேலாகிறது. டச்சு சர்க்கார் இந்தத் தீவுகளின் இயற்கை வளத்தை நன்ருக உபயோகித்து வந்துள்ளனர். ஆனால் இன்னம் நல்ல அபிவிருத்திக்கு இடமிருந்து வருகிறது. ஜாவாவின் விவசாயம் உலகத்திற்கு ஒரு படிப்பினையாகும் என்று எல்லோராலும் போற்றப்பட்டு வருகிறது. கரும்பு, ரப்பர், மிளகு

முதலியவை அபரிமிதமாய் விளைகின்றன. நெருக்க மான பெரிய காடுகளும் ஸுமட்ராவில் இருக்கின்றன. ஜாவாக் காரர்களுக்கும் நிப்பானியருக்கும் சுபாவத்திலேயே அதிகமான நட்பு உண்டு. இவ்வளவு வளமான தீவு கள்மீது ஜப்பான் திருஷ்டி வைத்துள்ளது. நெருக் கடியான சமயத்தில் அதை ஸ்வீகரித்துக் கொள் வதற்கு வேண்டிய பிளான்களும் தயாராயிருக்கின்றன. மேல்நாட்டு வல்லரசுகளுடன் கடலில் போரிட்டு வெற்றி பெறவேண்டுமானால், இவை தம்வச மிருந்தே தீர வேண்டு மென்பதை ஜப்பானிய ராணுவ அதிகாரிகள் அறிவர். பிரிட்டிஷ் பிரதேசங்கள் இவற்றை யடுத்தாற் போலுள்ளன. தவிர ஸிங்கப்பூரும் இவ்விடத்துக்கு அருகாமையில்தா னிருக்கிறது.

கிழக்கிந்தியத் தீவுகளின்மீது ஆதிக்கம் அவசிய மேன் என்பது கீழ்க்கண்டவற்றிலிருந்து புலப்படும். கீழ்க்கோடியில் பிரிட்டிஷ் ஆதிக்கம் ஓங்கியிருப்பதற்கு அடிப்படையான காரணம் இந்தியா அதன் ஏகபோகமா யிருந்துவருவதே. அதற்குச் செல்லும் வர்த்தக மார்க் கத்தை என்னவாயினும் பாதுகாப்பதென்று பிரிட்டன் உறுதிகொண்டுள்ளது. இந்த மார்க்கம் பிரிட்டனின் ஜீவநாடி என்று பன்முறை பிரிட்டிஷ் மந்திரிகள் அறி வித்துள்ளனர். ஜிப்ரால்டர், மால்டா, பெரிம், எடன் முதலியவற்றில் பலத்த பந்தோபஸ்து இருந்து வரு கிறது. சாம்ராஜ்யத்தின் கீழ்க்கோடியைக் காப்பதில்

ஸிங்கப்பூருக்கு அவர்கள் முக்கியத்துவம் அளித்திருப்பதில் ஆச்சர்ய மொன்றுமில்லை. சீனுவுடன் பிரிட்டனுக்கு முன்னெல்லா மிருந்துவந்த தகராறுகளெல்லாம் வர்த்தக சம்பந்தமானவைகளே. ஹாங்காங்கையும், ஷாங்ஹாயையும், பிரிட்டன் அபாரமான பணத்தைச் செலவழித்துத் தன் சீன வர்த்தகத்தின் மக்கிய ஸ்தானங்களாக்கி யிருக்கிறது. யாங்ட்ஸீ பள்ளத்தாக்கிலும் இதாவிடங்களிலும் பிரிட்டன் ஏராளமான மூலதனமும் போட்டிருக்கிறது. இவற்றையெல்லாம் பாதுகாக்கவும் இந்தப் பிரதேசங்களில் ஏதாவது தகராறுகள் கிளம்பினுல் அவற்றைச் சமாளிக்கவும், ஸிங்கப்பூரில் பலம் பொருந்திய ஒரு கடற்படை அவசியம். ஆஸ்ட்ரேலியாவையும் நியூஜிலாந்தையும் ஜப்பான் ஆக்கிரமிக்காமலிருப்பதற்கும் இது இன்றியமையாதது.

சீனுவுக்குக் கிழக்கே அமெரிக்காவுக்குச் சொந்தமாயுள்ள பிலிப்பைன் தீவுகளுக்கு இன்னம் சில வருஷங்களில் பரிபூர்ண சுதந்திரமளிக்கப்பட்டு விடும். அமெரிக்கா இதற்கு இணங்கியதிலிருந்து எவ்வாருயினும் கிழக்கோடி தகராறுகளிலிருந்து கட்டிக்கழித்துக் கொள்ளவே அமெரிக்கர் ஆவல் கொண்டுள்ளனர் என்பது நிதர்சனமாகத் தெரிகிறது. அமெரிக்கா முற்றிலும் பிலிப்பைனிலிருந்து விலகுமானுல் ஜாவாவை ஜப்பான் சுலபமாகப் பிடித்துக் கொள்ளலாம். ஆனுல், ஜப்பானுக்கு அங்கு இடம் கிடைத்தால் பின்னுல் கிழக்கோடி

யில் பிரிட்டிஷ் உரிமைகளுக்கு (இந்தியா, மலேயா, ஆஸ்ட்ரேலியா) ஏற்படக்கூடிய பேராபத்தை யுத்தேசித்தாவது பிரிட்டன் ஹாலந்துக்காகப் போரிட நேரிடும். இவற்றையெல்லாம் உணர்ந்துதான் பிரிட்டனும், ஹாலந்தும், அமெரிக்காவும் கீழ்க்கோடி விவகாரங்களில் நெருங்கிய சம்பந்தம் வைத்துக் கொண்டிருப்பது.

## பிரெஞ்சு உரிமைகள்

பிரான்ஸின் காலனிகளில் மிகவும் முக்கியமானது இந்தோ-சீனு. இது சீனுவுக்கு நேர் தெற்கே இருக்கிறது. தெற்கு சீனுவுடன் பிரான்ஸ் இதன் மூலமாக நல்ல வியாபாரம் செய்கிறது. ஐரோப்பிய விவகாரங்களில் பிரிட்டன் தன்னைக் கைவிடாமலிருப்பதற்காக இந்தோ-சீனுவை பிரான்ஸ் உபயோகித்துக் கொள்கிறது. கீழ்க்கோடியில் பிரிட்டன் யுத்தத்தில் ஈடுபட்டால், இது ஒரு முக்கியமான படைத்தளமாயிருக்கும். தவிர, ஷாங்ஹாயில் பிரெஞ்சுக் குடியேற்றம் மிகவும் முக்கியமானது. தெற்கு சீனுவில், பிரெஞ்சு கம்பெனிகள் ரயில்வேக்களைப் போட்டிருக்கின்றன. இவ்வளவு உரிமைகளையும் கீழ்க்கோடியில் வைத்துக்கொண்டிருக்கும் பிரான்ஸ், கட்டாயம் பிரிட்டனுக்கு உப-பலமாக இருக்கும் என்பதைப் பற்றிச் சந்தேகமில்லை. இந்தோ-சீனு மார்க்கமாக பிரான்ஸ், சீனுவுக்கு யுத்த தளவாடங்கள் அனுப்புவதை ஆட்சேபித்து, 1937 நவம்பர் மத்தியில் ஜப்பானிய சர்க்கார் ஆட்சேபணை செய்துள்ளனர். ர்ஷ

யாவுடன் பிரான்ஸ் பரஸ்பர உதவி உடன்படிக்கையின் மூலம் பந்தப்பட்டிருப்பதால், கிழக்கோடியில் யுத்தம் தோன்றுமானல், பிரான்ஸ் தனித்து நிற்பது சாத்திய மில்லே.

## அமெரிக்காவும் ஜப்பானும்

"பஸிபிக் சமுத்திரத்தில் ஆதிக்கம் செலுத்துவது பற்றி அமெரிக்காவுக்கும் ஜப்பானுக்கும் போட்டி யுண்டு. இதற்காகத்தான் ஜப்பானியக் கடற்படை பெருக்கப்பட்டு வருகிறது. அமெரிக்காவும் ஜப்பானும் இந்த ஆதிக்கத்துக்காக வெகு சீக்கிரத்திலோ, அல்லது சில வருஷங்கள் கழித்தோ போரிடத்தான் நேரிடும்" என்று பல அறிவாளிகள் சில வருஷங்களாகக் கூறி வரு கின்றனர். பஸிபிக் பிரதேசம் சம்பந்தமாய் அமெரிக்கா வின் கொள்கையை இங்கு சுருக்கமாய் ஆராய்வோம்.

1924-ல் அமெரிக்காவில் அந்நியர் குடியேறுவதைப் பற்றி ஒரு சட்டம் நிறைவேறியது. அதன்படி, ஜப் பானியர் அமெரிக்காவில் குடியேறுவது அடியோடு தடை செய்யப்பட்டது. 1908-ல் தலைவராயிருந்த தியோடோர் ரூஸ்வெல்ட் ஜப்பானுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்துக்கு இது விரோதமானதென்று அப் பொழுதே ஜப்பானியர் புகார் செய்ய ஆரம்பித்தனர்.

சீனா சம்பந்தமாக அமெரிக்காவின் கொள்கை, ஆங்கிலத்தில் "Open Door Policy" என்று அழைக்கப் படுவது. எல்லா நாடுகளும் பார பட்சமின்றி சீன

வர்த்தகத்தில் அனுமதிக்கப்படும் என்றும், ஒன்றுக் கொன்று அதிகமான சலுகைகள் காண்பிக்கப்பட மாட்டா என்பதுமே இந்தக் கொள்கையில் முக்கியமான கருத்துக்கள். 1899-ல் இது அங்குரார்ப்பணமாயிற்று. பிறகு, 1922-23ல் நிறைவேறிய ஒன்பது வல்லரசுகள் உடன்படிக்கையில் இந்தக் கொள்கை ஊர்ஜிதம் செய்யப் பட்டது. அது மட்டுமல்ல. ஒப்பந்த நாடுகள், சீனவின் பிரதேச உரிமைகளை இதன் மூலம் உத்தரவாதம் செய்தன. வாஷிங்டனில் ஒப்புக்கொள்ளப்பட்ட இந்த உடன்படிக்கையை வல்லரசுகள் எவ்வளவு தூரம் கவுரவித்து வருகின்றன என்பதையே கீழ்க் கோடியின் சரித்திரம் முக்கியமாகப் பொறுத்திருக்கிறது. இதன் விளைவாக ஜப்பானுக்கு, அதை யடுத்துள்ள கடல்கள் மீது கிரியாம்சையில் ஆதிக்க மேற்பட்டது. பஸிபிக் கடலில் கடற்படை நிலையங்களை அமைக்கும் பிளான்களை அமெரிக்கா கைவிட்டது.

"சீனவில் ஒப்பந்த நாடுகளுக்குள்ள உரிமைகளையும் க்ஷேம லாபங்களையும் ஒருபுறம் உத்தரவாதம் செய்யவும், மற்றொரு புறம் சீன மக்கள், தங்கள் ஆதிபத்ய உரிமைக்கும் சுதந்திரத்துக்கும் பங்கமில்லாத விதத்தில் ஓங்கி வளர முழு சந்தர்ப்பத்தை யளிக்கவும் மிகுந்த ஜாக்கிரதையுடன் இந்த ஸர்வதேசக் கொள்கை தயாரிக்கப்பட்டிருக்கிறது" என்று அமெரிக்க வெளிநாட்டு மந்திரியாயிருந்த ஸ்டிம்ஸன் 1932-ல் கூறியிருக்கிருர்.

9 வல்லரசுகள் உடன்படிக்கைப்படி நடக்க ஒப்பந்த நாடுக ளெல்லாம் கடமைப்பட்டுள்ளவை என்றும், மஞ்சூரி யத் தகராறின்போது, அமெரிக்காவின் மனப்பான் மையை விளக்கி அவர் ஒரு அறிக்கையை வெளியிட் டார். இந்த உடன்படிக்கைக்கு மாருக ஏற்படக்கூடிய எந்த நிலைமையையும், எந்த சமரஸத்தையும் அமெரிக்கா ஏற்றுக்கொள்ளாது என்பதையும், அதே வருஷம் ஜன் வரி 7உ யன்று அவர் சீனுவுக்கும் ஜப்பானுக்கும் அறி வித்துவிட்டார். சீனு இழக்கக்கூடிய உரிமைகளும் அதிகாரங்களும் மீண்டும் அதைச் சேருவதற்கு வேண் டிய ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டுமென்பதையும் அவர் பிரஸித்தப் படுத்தினுர். இதை யனுசரித்து 1932 மார்ச் 11உ சங்க அசெம்பிளியில் ஒரு தீர்மானம் நிறை வேறியது. சங்க உடன்படிக்கைக்கு விரோதமான முறைகளின் மூலம் ஏற்படும் எந்த நிலைமை அல்லது ஏற்பாட்டையும் சங்க நாடுகள் எதுவும் அங்கிகரிக்கக் கூடாது" என்பது அந்தத் தீர்மானத்தின் தாத்பரியம்.

சீனுவின் வடகோடியில் இப்போது மஞ்சுகோ என்று அழைக்கப்படும் 3 சீன மாகாணங்களை ஜப்பா னிய ராணுவம் கைப்பற்றியபோது, இந்த ஆக்கிரமிப் பை அங்கிகரிப்பதில்லை என்று அமெரிக்க சர்க்கார் காட்டிய வழியை உலகம் பின்பற்றியது. உடன்படிக்க கைகளுக்கும் ஸர்வதேச ஒழுக்க முறைக்கும் மாருக, எடுத்துக்கொள்ளப்படும் எந்த நடவடிக்கையும் செல்லத்

ஆக்கதல்ல என்பது கொள்கை ரூபத்தில் ஒப்புக்கொள் ளப்பட்டது.

மன்னுரை தலைக்கேறியிருந்த ஜப்பான் அமெரிக் காவின் இந்த மனப்பான்மையிலிருந்து ஒரு விஷயத் தைத் தெரிந்துகொண்டது. ஆசியா சம்பந்தப்பட்ட வரை, 9 வல்லரசுகள் உடன்படிக்கைக் காலத்திலிருந்த நிலைமையை நிர்த்தாரணம் செய்ய அமெரிக்கா திடசங் கற்பம் செய்து கொண்டிருப்பது ஜப்பானுக்குப் புலப் பட்டது. ஆகவே, உடன்படிக்கைகளின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டால், தன் இஷ்டப்படி நடந்துகொண்டு, சீனவைக் கொஞ்சங் கொஞ்சமாய் விழுங்க முற்படலாம் என்ற துணிச்சல் ஜப்பானுக்கு ஏற்பட்டது. மஞ்சூரிய விவகாரம் சம்பந்தமாக எவ் வளவு கடுமையான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்ட போதிலும், வெளிநாடுகள் தங்கள் ராணுவ பலத்தை உபயோகிக்க எளிதில் துணியமாட்டா என்பது தெரியவே ஜப்பானுக்குத் திமிர் தலைக்கேறிவிட்டது.

1932 ஆகஸ்ட் 25உ யன்று ஜப்பானிய வெளி நாட்டு மந்திரி கவுண்ட் உசீடா, மஞ்சுகோவை அங்கி கரிப்பது ஒன்றுதான் வடசீனப் பிரச்னையைத் தீர்க்க வழியென்றும், அங்கு சீனவுக்கு எவ்விதமான அதிகா ரத்தையும் அளிப்பதற்குத் தாங்கள் சம்மதிக்க முடியா தென்றும் தெரிவித்து விட்டார். மஞ்சுகோ சர்க்காரை ஜப்பான் அங்கிகரித்தது ஒன்பது வல்லரசு உடன்படிக்

கையை மீறியதல்ல என்றும் அவர் அபிப்பிராயப் பட்டார். சீன மக்கள், சீனாவுக்குள் எந்தப் பாகத்திலும் ஒரு சுதந்திர சர்க்காரை ஸ்தாபிக்கக் கூடாதென்று அந்த உடன்படிக்கை தடைசெய்யவில்லை யென்றும் அவர் ஒரு வக்கீல் போல் வாதித்தார். அது மட்டுமல்ல, தகாறுகளைத் தீர்த்துவைப்பதற்கு யுத்தத்தை ஒரு சாதனமாக உபயோகிப்பதில்லை என்று எல்லா நாடுகளும் கையெழுத்துச் செய்துள்ள பாரிஸ் சமாதான ஒப்பந்தத்தையும் ஜப்பான் மீறவில்லை என்று அவர் கர்ஜித்தார். இது சம்பந்தமாய் அவர் செய்த வியாக்கியானம், எதிர்காலத்திய ஆக்ரமிப்புக்கு அப்போதே ஆதரவு தேடும் தொனியில் இருந்தது. அவர் கூறியதாவது:

"தன் பிரதேசத்துக்கும், தன் உரிமைகளுக்கும் க்ஷேம லாபத்துக்கும், அடுத்தாற்போலுள்ள பேராபத்துக்களை ஒழிப்பதற்காக அவசியமெனத் தனக்குப் புலப்படும் நடவடிக்கைகளைத் தன் யுக்தானுசாரப்படி எடுத்துக் கொள்வதைச் சமாதான உடன்படிக்கை தடுக்கவில்லை. தற்காப்பு ஏற்பாடுகள், ஒரு நாட்டின் எல்லைக்குள் மட்டும் இருக்க வேண்டுமென்பதில்லை. அதற்கு வெளியிலும் அவை வியாபித்திருக்கலாம்."

சங்க நாடுகள் உறுதியான நடவடிக்கைகளுக்குச் சம்மதியாமல் பிரிட்டிஷ் சர்க்காரின் தலைமையின் கீழ், மஞ்சூரிய விவகாரத்திலிருந்து விலகி விட்டன. அமெரிக்கா மட்டும் தனித்து நின்று 9 வல்லரசு உடன்படிக்

கையை நிலைநாட்ட முன்வரவில்லை. இதற்காக அமெரிக்காவைச் சரித்திரம் குறை கூறமுடியாது. ஆனால், அமெரிக்கா, சீனாவின் உண்மையான நண்பன் என்பது மட்டும் சந்தேகமற நிரூபிக்கப்பட்டது.

சீன மக்கள் அமெரிக்காவுக்குள் குடியேறக் கூடாதென்று சட்டமிருந்தபோதிலும், 'சீனர்களின் உத்தாரணத்துக்காக' அமெரிக்கா, பல கோடி டாலர்களைச் சீனாவில் போட்டிருக்கிறது. சீன சர்க்காருக்கும் நிறைய கடன் கொடுத்திருக்கிறது. வர்த்தக லாபம் எல்லா நாடுகளின் பொதுவான இலட்சியம். ஆனால், இன்னம் சில ஏகாதிபத்தியங்களைப் போல், மறைமுகமாக்கூட, சீனாவில் அமெரிக்கா ராஜீய அபிலாஷைகளைக் கொண்டிருக்கவில்லை.

பிலிப்பைன் தீவுகள் 1898-ல் தான் அமெரிக்காவின் ஆதிக்கத்துக்குட்பட்டன. இங்கு அமெரிக்கா இடம் பிடித்தது முதல், ஜப்பானுக்கு அமெரிக்காவிடம் சந்தேகம் எப்பொழுதும் வளர்ந்து வந்திருக்கிறது. அமெரிக்காவிலும் ஜப்பானைப்பற்றி சந்தேகம் ஓயவே இல்லை.

1933 ஜனவரி 17உயன்று, தலைவர் ரூஸ்வெல்ட் விடுத்த ஒரு முக்கியமான அறிக்கை, புதிய சர்க்காரின் கீழ்க்கோடிக் கொள்கை பழைய கொள்கையின் தொடர்புதான் என்பதைத் தெளிவு படுத்திவிட்டது.

"ஸர்வதேச உடன்படிக்கைகளின் புனிதத்தை நிலைநாட்டுவதுதான் அமெரிக்காவின் வெளிநாட்டுக்

கொள்கையாயிருக்க வேண்டும் என்பதைத் தெளிவு படுத்த நான் முற்றிலும் தயாரா யிருக்கிறேன். தேசங் களுக்கிடையே யுள்ள உறவுகள் இதையே அடிப்படை யாகக் கொண்டிருக்கவேண்டும்" என்று தலைவர் ரூஸ் வெல்ட் கூறினர்.

ஜப்பானில் இது கோபத்தை உண்டு பண்ணியது. 1933 ஜனவரி 17உ யன்று யோகஹாமாவில் அமெரிக்க ஸிங்கர் தையல் கம்பெனியின் கிளையாபீஸ் தாக்கப்பட் டது. ஒஸாகாவிலுள்ள (அமெரிக்க) நேஷனல் பாங்குக் குள் பலர் புகுந்தனர். முக்டெனில் அமெரிக்க கான் ஸலை ஜப்பானிய சோல்ஜர்கள் தாக்கினர். பிறகு கூட இதே மனப்பான்மைதான் நீடித்து வந்தது.

1914-ல் வட அமெரிக்காவுக்கும் தென் அமெரிக் காவுக்கும் இடையே, அட்லாண்டிக், பஸிபிக் மகா சமுத்திரங்களைச் சேர்ந்த பனமா கால்வாயை அமெரிக்கா வெட்டியது. பிலிப்பைனைக் கைப்பற்றிய பிறகு, பஸி பிக் சமுத்திரத்தில் அமெரிக்கா ஏற்றுக்கொண்ட முக் கியமான பொறுப்பு இதுதான். இந்தக் கால்வாயின் விளைவாக நினைத்த மாத்திரத்தில் அமெரிக்காவின் கடற்படை முழுவதையும் பஸிபிக் சமுத்திரத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பது சாத்தியமாயிற்று. ஆகை யால், அமெரிக்காவின் ராணுவ பலம் சம்பந்தப்பட்ட வரை, இந்தக் கால்வாயின் முக்கியத்தை மிகைப்படுத் திக் கூறமுடியாது.

ஆனல், பஸிபிக் சமுத்திரத்தின் நடு மையத்தி லுள்ள ஹவாயி தீவுகள்தான் பஸிபிக் சமுத்திரத்தில் அமெரிக்காவின் முக்கியமான காவல் நிலையம். இந்தத் தீவுகள் பஸிபிக் வர்த்தக மார்க்கத்திலுள்ளவை. அமெ ரிக்காவிலிருந்து சீன, ஜப்பானுக்கும், ஆஸ்ட்ரேலியா நியூஜிலாந்துக்கும் இதன் வழியாகத்தான் போகவேண் டும். பல எரிமலைகள் கடலிலிருந்து கிளம்பி இந்தத் தீவு கள் உண்டாயின. பஸிபிக் தீவில் பல நூறு தீவுகளி ருந்த போதிலும் ஹவாயீக்கு அருகாமையில் வெகு தூரத்துக்குத் தீவுகள் கிடையாது. இவை, அமெரிக்கா வின் மேற்குக் கடற்கரையிலிருந்து 2,400 மைல் தூரம் இருக்கின்றன. அமெரிக்க மக்கள் தங்கள் முழு நாகரிகம் இங்கு பிரதிபிம்பிக்கும்படி செய்திருக்கிறார்கள். இதைத் தங்கள் தற்காப்புக்கான முக்கியமான கடற்படை தள மாக அமெரிக்க சர்க்கார் அமைத்துள்ளனர். ஹவாயீ நிர்வாகத்தின் வரவு செலவுகள் சரிக்கட்டும் நிலைமையி லிருந்து வருகின்றன. இந்தத் தீவுகள் அமெரிக்காவின் கைக்கு வந்து முப்பது வருஷங்களாகின்றன. ஹவாயீ தீவுகளின் பூகோள அமைப்பைப் பார்த்தால் பஸிபிக் சமுத்திரத்துக்கு அது கேந்திரஸ்தானமாய் விளங்கு வதுதென்படும். விமானங்கள் நவீன யுத்தங்களில் உப யோகிக்கப்படுவதால், ஹவாயீ தீவுகளின் பிரயோஜனம் அமெரிக்காவுக்குப் பன்மடங்கு அதிகமாய் விட்டது. இந்தத் தீவுகளின் ஜனத்தொகையில் ஜப்பானியர் 42%

அமெரிக்கர் 11% தான். பிரிட்டிஷ்காரரும் ஜெர்மனியரும் 16%. ஜப்பானியர் வெகுகாலமாகவே இங்கு ஏராளமாய் வந்து குடியேறியுள்ளனர். இங்குள்ள ஜப்பானியர் கலப்பு மணம் செய்துகொள்வதில்லை. ஜப்பானிலிருந்து வேண்டிய அளவுக்கு கன்னிகைகள் வரவழைக்கப்படுவது வழக்கம். அமெரிக்க நாடுகளின் எல்லைக்குள் பிறப்பவர்க ளெல்லோரும் அமெரிக்க வோட்டர்கள் என்று அரசியல் சட்டம் கூறுகிறது. அதன்படி இங்குள்ள 47% ஜப்பானியரும் அமெரிக்கப் பிரஜைகளே. இவர்கள் ஸர்வதேச நெருக்கடிகளின் போது என்ன செய்வார்க ளென்பது ஒரு பெரிய பிரச்னை. அமெரிக்க சர்க்கார் எதற்கும் தயாராகத்தான் இருக்கின்றனர்.

ஹவாயிக்கு அடுத்தாற்போல் பஸிபிக்கிலுள்ள பிலிப்பைன் தீவுகள் முக்கியமானவை. இவை முன்னர் ஸ்பெயினுக்குச் சொந்தமாயிருந்தவை. ஹாங்காங்கிலிருந்து 634 மைல்; யோகஹாமாவிலிருந்து 1,800 மைலில் இவை உள்ளன. மொத்தம் பிலிப்பைனிலுள்ளவை 7000 தீவுகள். அவற்றில் 462தான் ஒரு சதுர மைலுக்கு மேற்பட்ட விஸ்தீரணமுள்ளவை. பிரதான தீவுகள் பதினொன்றுதான். அவை ஒவ்வொன்றும் 1000 சதுர மைலுக்கு மேற்பட்டவை. பிலிப்பைன் ஜனத்தொகை 140 லக்ஷம். 1933 ஜனவரி 17-ல் பிலிப்பைன் சுதந்திரச் சட்டம் அமெரிக்காவில் நிறைவேறியது. கீழ்க்கோடியில் ஸ்திரமற்ற நிலைமை இருந்து

வரும்போது இம்மாதிரி செய்வது தகாதென்று தலைவர் ஹூவர் ஆட்சேபித்துப் பார்த்தும் பயனில்லை. பிலிப்பை னில் ஜப்பானியரும் சீனரும் இருக்கின்றனர். அவர்கள் சண்டைபோட்டுக் கொண்டால், வெகு சமீபத்திலுள்ள ஜப்பான் தன் பிரஜைகளின் உரிமைகளைக் காப்பாற்றுவ தாகச்சாக்குச் சொல்லி, பிலிப்பைனில் குறுக்கிடக்கூடும். ஜப்பானியத் தளபதிகள் பகிரங்கமாக இம்மாதிரி கூறி யுள்ளனர். ஆகவே, அமெரிக்க சர்க்கார் பிலிப்பைன் தலைநகரான மனிலாவில், நல்ல உறுதியான கோட்டை களை அமைத்துத் தற்காப்பு ஏற்பாடுகளைப் பலப்படுத்தி யுள்ளனர். ஆனால், அமெரிக்காவிலிருந்து இது வெகு தூரத்திலிருப்பதால் அங்கிருந்து உதவி வருவதற்குள் ஜப்பான் பிலிப்பைனை ஸ்வீகரித்துக்கொள்ளக் கூடும். பிலிப்பைனிலிருந்து 1500 மைல் தூரத்திலுள்ள குவாம் என்ற தீவு அமெரிக்க கடற்படை தளத்துக்கு மிகவும் ஏற்றது. ஆனால், ஜப்பான் 9 வல்லரசு உடன் படிக்கையில் கையெழுத்துச் செய்கையிலேயே குவாமில் கடற்படை நிலையங்களை அமைப்பதில்லை என்ற உத்தர வாதத்தை அமெரிக்காவிடமிருந்து பெற்றுள்ளது. ஜப்பான் என்ன அதிக்ரமம் செய்தபோதிலும், ஜன நாயக முறைப்படி உலக அபிப்பிராயத்துக்கு அஞ்சி நடந்துகொள்ளும் அமெரிக்கா உடன்படிக்கையை மீறத் துணியவில்லை. ஆகையால், ஹவாயீ தீவுகளைத்தான் எல்லாவற்றிற்கும் அமெரிக்கா நம்பவேண்டியிருக்கிறது,

கடற்படை ஒப்பந்தத்தையும் ஜப்பான் ஏற்றுக்கொள்ள வில்லே. சீன-ஜப்பானிய நெருக்கடி வலுக்குமானல், பஸிபிக்கில் யுத்தம் வரக்கூடுமென்பது அமெரிக்கா அறிந்ததே. ஆகையால்தான் எல்லா சந்தர்ப்பங்களேயும் எதிர்நோக்கி விவரமான பிளான்களே அமெரிக்க சர்க்கார் தயாரித்திருப்பதாகத் தெரிகிறது. பனுமா கால்வாய்க் கும் விசேஷமான பந்தோபஸ்து ஏற்பாடுகள் செய்யப் பட்டிருக்கின்றன. பிலிப்பைனுக்குச் சுதந்திரமளிக்கப் படுகிறதாயினும், அதன் விளைவாக மேற்கு பஸிபிக் சமுத்திரத்தில் ராஜீய நிலைமையின் தராதரம் அமெ ரிக்காவுக்குப் பிரதிகூலமாகுமாறு விடமுடியாதென்று அமெரிக்க வெளிநாட்டு மந்திரி 1933-ல் தெரிவித்து விட்டார். 1943-ல் பிலிப்பைன் சுதந்தர நாடாகும். ஆயினும் பிறகுகூட பிலிப்பைனில் ராணுவக் கடற்படை நிலயங்களை வைத்துக்கொள்ளும் அதிகாரம் அமெரிக்கா வுக்கு இருந்துவரும் என்று பிலிப்பைன் சுதந்திர மசோதாவில் ஒரு ஷரத்து இருக்கிறது.

பனுமா கால்வாய்க்குப் பாதுகாப்பாகத் தரையிலும் கடலிலும் கோட்டைகள் அமைக்கப்பட்டுள்ளன. அமெ ரிக்க கடற்படையின் முக்கியமான பகுதிகள் பஸிபிக் கில்தான் இருக்கின்றன. 1933 மார்ச்சில் இந்தப் பிரதே சத்தில் 9,500 சோல்ஜர்கள் வைக்கப்பட்டிருந்தனர். ஹவாயி தீவுகளில் 14,000 துருப்புகளும், பிலிப்பை னில் 11,000 துருப்புகளும் இருக்கின்றன. டீண்ட்ஸி

னில் (வட சினுவில்) 750 அமெரிக்கத் துருப்புகள் உண்டு. நெருக்கடியான நிலைமை ஏற்பட்டால் ஹவாயி தீவில் 30,000 துருப்புகளுக்கு வேண்டிய வசதிகள் தயாராயிருக்கின்றன. ஆனல், பெரிய யுத்தம் நேரிட்டால், இதெல்லாம் கொஞ்சமும் போத மாட்டா. ஹானலூலுவை அடுத்தாற்போலுள்ள பெர்ல் துறைமுகத்தில் முதல்தரமான கடற்படையை யும் விமானப் படையையும் அமெரிக்கர் வைத் திருக்கிருர்கள். ஆகையால், அமெரிக்காவின் மேற்குக் கடற்கரையை ஜப்பானியக் கடற்படை தாக்குவது சாத் தியமில்லை. பனமா கால்வாயின் பத்திரத்துக்கும் அவர்களால் ஆபத்து விளைவிக்க முடியாதென்பது ராணுவ நிபுணர்களின் அபிப்பிராயம். "ஜப்பானியக் கடற்படையோ அல்லது விமானப் படையோ, அமெ ரிக்காவின் மேற்குக் கடற்கரையைத் தாக்க 6,000 மைல் தாண்டிச் செல்லவேண்டும். அங்கே போகப் பெரிய படை வேண்டியிருக்கும். அப்போது ஜப்பானியத் துறைமுகங்கள் போதிய பந்தோபஸ்தின்றி யிருக்க நேரிடும். இந்த நிலைமையில் அமெரிக்காவுக்கு நண்ப ஞகிய பிரிட்டன், ஜப்பானைத் தன் கடற்படையைக் கொண்டு நொறுக்கிவிட முடியும். ஜப்பான் அமெ ரிக்கா தாக்குவதற்கு வேண்டிய வசதிகள், அமெரிக்கா வுக்குச் சொந்தமான தீவுகளில் இல்லை. ஹானலூ லுவிலிருந்து யோகஹாமா 3,500 மைல் தூரம்.

ஹவாயி தீவுகள் அமெரிக்காவின் தற்காப்புக்கு உபயோகமே ஒழிய, ஜப்பானைத் தாக்குவதற்கு முடியாது. ஆகையால்தான் அமெரிக்காவும் ஜப்பானும் பஸிபிக்கில் போர் புரியமாட்டா" என்று சிலர் கூறுகிறார்கள். ஆனால், இதில் ஒரு விஷயம் கவனிக்கத் தக்கது. ஸிங்கப்பூர் கடற்படை நிலையம் இத்தகைய யுத்தத்தில், அமெரிக்கக் கப்பல்களுக்கு இடமளிக்கக் கூடும். என்பது மறக்கமுடியாத விஷயம். ஆனால், அது நிறைவேறுவதற்குப் பரிபூர்ணமான பிரிட்டிஷ்-அமெரிக்க ஐக்கியம் அவசியம். ஜப்பான் அமெரிக்காவைத் தாக்குவதென்று வைத்துக்கொண்டால், குவாம் தீவுகளையும், பிலிப்பைன் தீவுகளையும் பிடித்துவிட முடியும். அடுத்தாற்போல் ஹவாயிமீது ஜப்பான் திருஷ்டி வைக்கலாம். அங்குள்ள பெருவாரியான ஜப்பானிய மக்கள் அதற்கு அனுசரணையாகக் கிளம்பலாம். ஆனால், அமெரிக்காவின் பகத்தான விமானப் படையும், பிரிட்டிஷ் கடற்படையும் ஜப்பானை நிர்மூலமாக்கிவிடக் கூடும். பிரிட்டன் தனக்குப் பூர்ணமான உதவியளிக்குமென்ற உத்தரவாதமில்லாமல், சீனுவில் தன் உரிமைகளைக் காப்பாற்றவோ, ஸர்வதேச ஒழுங்கு முறையை நிலைநாட்டவோ, உடன்படிக்கைகளின் கௌரவத்தை நிர்த்தாரணம் செய்யவோ, அல்லது வேறு எந்தக் காரணத்துக்காகவோ, அமெரிக்கா, ஜப்பானை அறைகூவி அழைக்கத் துணியாது. இது மிகவும் முக்கியமான விஷயம்.

ஜப்பானுக்கு இது தெரியாமலில்லை. தவிர, அமெரிக்கா ஜப்பானிய ஆலைப் பண்டங்களை விற்பனை செய்வதற்குப் பிரதான மார்க்கெட்டாயிருந்து வருகிறது. 1931-ல் ஜப்பானின் மொத்த வெளிநாட்டு வியாபாரத்தில் 32% அமெரிக்காவுடன் நடந்திருக்கிறது. இதை இழக்க, சாதாரணமாய் ஜப்பான் விரும்பாது என்பது நிச்சயம். ஜப்பானிய கிருஷிகர்களுக்குப் பிழைப்பளிக்கும் பட்டுத் தொழிலை ஆதரிப்பது அமெரிக்காவே. அமெரிக்காவைப் பகைத்துக் கொண்டால் புகைந்து போகவேண்டியது தான் என்று ஜப்பான் உணர்ந்துள்ளது. ஆகையால், கீழ்க் கோடியில் நடைபெறும் எந்தத் தகராறிலும், ராஜதந்திரச் சூழ்ச்சிகளின் மூலம் அமெரிக்கா பங்கெடுக்காமற் செய்து விடவேண்டுமென்று ஜப்பானிய ராஜதந்திரிகள் கருதி வந்திருக்கின்றனர். பிரிட்டனும் அமெரிக்காவும் ஒன்று சேராமலிருப்பதற்கும், பிரிட்டன் கீழ்க்கோடியில் தன் முழு கடற்படை பலத்தையும் பிரயோகிக்கக்கூடிய நிலைமை எற்படும்படி விடாமலிருக்கவும், ஜப்பானிய ராஜதந்திரம் அரும்பாடுபட்டு வந்திருக்கிறது. இத்தாலியிலும் ஜெர்மனியிலும் இருந்துவரும் நிலைமையை ஜப்பான் தனக்கு அநுகூலமாக உபயோகித்துக் கொண்டுள்ளது. பிரிட்டனுக்கு ஜீவநாடி போன்றது மத்திய தரைக்கடல் வர்த்தக மார்க்கம் என்று முன்னமேயே கூறியுள்ளோம். அதன் பந்தோபஸ்தைப் பற்றியும், ஐரோப்பிய உலகில் எப்பொழுது குண்டு வெடிக்

குமோ என்று தோன்றும் மத்திய ஐரோப்பாவிலும், நிச்சயமற்ற நிலைமையை இடைவிடாமல் ஏற்படுத்தி வரும் பொறுப்பை, இத்தாலியும் ஜெர்மனியும் ஏற்றுக் கொண்டுள்ளன. ஆகையால், பிரிட்டன் தன் முழு கடற்படை பலத்தையும் பஸிபிக் கடலுக்குக் கொண்டு போக முடியாது. அப்படிச் செய்து விட்டால், கிழக் கோடியிலிருக்கக்கூடிய பிரிட்டிஷ் கடற்படை ஜப்பானுக்கு ஒரு பிரமாதமல்ல. அமெரிக்கா தனித்து நிற்குமாறு செய்துவிட்டால் நிர்ப்பயமாய் நினைத்ததைச் செய்யலாம் என்பது ஜப்பானின் துணிபு. விமானப் படையிலும் ராணுவ அமைப்பிலும் இன்று தலை சிறந்து விளங்கும் ஸோவியத் யூனியன் தலையிடாம லிருப்பதற்காக வேண்டி, இத்தாலி, ஜெர்மனி, ஜப்பான் மூன்றும் அதற்கு எதிரிடையான ராணுவக் கூட்டுறவை ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றன. ஆகையால், ரஷ்யா தன் மேற்குப் புறத்தையும் கிழக்குப் புறத்தையும் பாதுகாக்க ஏற்பாடுகள் செய்வதிலேயே முழு கவனத்தையும் செலுத்தவேண்டி யிருக்கும். பரஸ்பர உதவி யளிப்பதாக வாக்களித்துள்ள பிரான்ஸின் உதவிக்கு இந்த நிலைமையில் ரஷ்யா போவதற்கில்லை. பிரான்ஸும் அதன் உதவிக்கு வாாமல் தடுப்பதற்குத்தான் இன்று ஸ்பெயினில் சர்க்காரை, பிராங்கோ மூலம் இத்தாலியும் ஜெர்மனியும் எதிர்க்கின்றன. ஸ்பெயின் அவர்கள் ஆதிக்கத்துக்கு வந்துவிட்டால், பிரான்ஸ் மூன்று திசை

களில் விரோதிகளால் சூழப்பட்டிருக்கும். அதன் நிலைமை நித்ய கண்டமாய்விடும். பிரிட்டன், இந் நிலைமையைக் கண்டு யார் விவகாரத்திலும் தலையிடாமல் ஒதுங்கி யிருக்கும்படி செய்து, தங்கள் மனுசையைத் தீர்த்துக்கொள்ளலாம் என்று ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் மூன்றும் கருதுகின்றன. ஜப்பான் சீனுமீது படையெடுத்ததை இந்த இரண்டு நாடுகளும் ஆதரிப்பதும், தங்கள் கூட்டு ராணுவ பலத்தைப் பற்றி ஜம்பம் பேசுவதும், இத்தாலி, ஜெர்மன்-ஜப்பான் உடன்படிக்கையில் சென்ற நவம்பரில் சேர்ந்ததும், இந்த வல்லரசுகளின் மனப்பான்மையை நன்கு விளக்குகின்றன. ஆனால், சமீபத்தில் பிரெஞ்சு உதவி முதல் மந்திரி ஸ்ரீ. லியான் புளும் கூறியவாறு, பிரிட்டன், ரஷ்யா, பிரான்ஸ் மூன்றும் உலகத்தில் ஸர்வதேச ஒழுக்கத்தை நிலைநாட்ட ஐக்கியப்பட்டால் அமெரிக்காவும் அதில் சேருவது நிச்சயம். அமெரிக்கா, கீழ்க்கோடியில் பூர்ணமான கவனம் செலுத்த முடியாமலிருப்பதற்காக, ஹிட்லரும் முஸொலீனியும் சதி செய்து 1937 நவம்பரில், தென் அமெரிக்காவிலுள்ள பிரேஸீலில், ஒரு பாஸிஸ்ட் ஆட்சியைத் தோற்றுவித்துள்ளனர். அமெரிக்காவின் கவனம், இதன் விளைவாக ஓரளவுக்குச் சிதறுண்டு கிடக்கும். ஆயினும், அமெரிக்காவின் தற்காப்புக்கு ஆபத்து விளைவிக்கக் கூடியவாறு பிரேஸீல் வளரமுடியாது. ஆகையால், எந்த அதிக்ரமத்தையும் அட்டூழியத்தையும்,

அமெரிக்க-பிரிட்டிஷ்-பிரெஞ்சு-ரஷ்ய ஐக்கிய முன்னணியின் பின்னுலிருந்து சமாளிக்க, ஏனைய சிறு நாடுகள் மன முவந்து முன் வருவது திண்ணம்.

## ரஷ்யாவின் நிலைமை

1917 நவம்பரில் ரஷ்ய ஏகாதிபத்தியம் வீழ்ச்சியுற்றது. அன்று நிறுவப்பட்ட ஸோவியத் ரஷ்யாவுக்கு நாடு பிடிக்கும் ஆசையில்லை. உலகில் எங்கும் சமாதானமும் சுபிட்சமும் நிலவவேண்டு மென்பதே அதன் கொள்கை. ரஷ்யாவின் சோஷலிஸ்ட் சமூக அமைப்பு பரிபக்குவமடைவதற்கு, உலகில் சமாதானம் நிலவுவது இன்றியமையாதது என்பதை ஸ்டாலின் உட்பட எல்லா ரஷ்யத் தலைவர்களும் பகிரங்கமாகப் பின் முறை எடுத்துரைத் திருக்கிறார்கள்.

ஏகாதிபத்திய ரஷ்யாவுக்கும் சீனுவுக்கும் இருந்து வந்த சம்பந்தம் முன்னரே விவரிக்கப்பட்டுள்ளது. சென்ற நூற்றுண்டின் கடைசியில், லியோடிங் தீபகற்பம் ஜப்பானிடமிருந்து ரஷ்யாவின் ஆதினத்துக்கு வந்தது. 1900-ல் பாக்ஸர் எழுச்சியின்போது, ரஷ்யா மஞ்சூரியா முழுவதையும் கைப்பற்றியது. பிறகு, பல எச்சரிக்கைகளை அனுப்பிய பின், 1905 டிசம்பரில் ஜப்பான்-ரஷ்யா யுத்தம் நடந்ததும், ரஷ்யா தோற்றதும் எல்லோரும் அறிந்ததே. இதில்தான் மஞ்சூரிய உரிமைகளையெல்லாம் ரஷ்யா பறி கொடுத்தது. வட மஞ்சூரி

யாவில் மட்டும் ரஷ்யாவுக்குக் கொஞ்சம் அதிக உரிமைப் பிரதேசம் ஒதுக்கப்பட்டிருந்தது.

போல்ஷிவிக் சர்க்கார் ரஷ்யாவில் வந்த பிறகு சமீப காலம் வரை பொதுவுடைமைப் புரட்சி உலகெங்கும் தோற்றுவிப்பது அவர்களுடைய கொள்கையா யிருந்த தல்லவா? அதை யனுசரித்து, டாக்டர் ஸன்-யாட்-ஸேன் காலத்தில் ரஷ்யா, மைகேல் போரோடீனை அனுப்பி சீனாவில் ஸோவியத் இயக்கத்தைப் பரப்பியதும், பல இன்னல்களுக்கிடையே ஸோவியத் சீனா ஸ்தாபிக்கப் பட்டதும், இன்று ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரில் ஸோவியத் சீனாவிலுள்ளோர் முன்னணியிலிருப்பதும் நாம் அறிந்ததே. ஸோவியத் சீனா மூலமும், பிறகு, சீன தேசிய சர்க்காருக்கு ஸோவியத் சீனா அளித்துவரும் ஆதரவின் மூலமும், ரஷ்யா, கீழ்க்கோடியில் தன் மதிப்பை உயர்த்திக்கொண்டு வந்தது. சீனாவும் ரஷ்யாவும் ஐக்கியப்பட்டால், தன் எண்ணம் ஈடேறாதென் றறிந்த ஜப்பான், எப்பொழுதுமே, பொதுவுடைமையை உடைப்பதற்கென்று கூறி, சீன சர்க்காரை, தங்கள் மக்களில் ஒரு சாரார்மீது நீடித்துப் படையெடுத்துப் பாப்பராக்கியதும் ஏற்கனவே விவரிக்கப்பட்டுள்ளது. சீனாவின் வடகோடி மாகாணமாயிருந்த வெளி மங்கோலியா, சமீப வருஷங்களில் ஒரு ஸோவியத் குடியரசானதும், அதனுடன் ரஷ்யா பரஸ்பர உதவி ஒப்பந்தம் செய்துகொண்டிருப்பதும், ஜப்பானுக்குக் கவலை

விளைவித்தது. சீன மக்களுக்கு ரஷ்யா உதவியளிப்பதைத் தடுக்க வேண்டுமென்பது ஜப்பானின் முக்கியமான கொள்கை. பொதுவுடைமை எதிர்ப்பு உடன்படிக்கை இந்தக் கொள்கையில் ஒரு பகுதி.

ரஷ்ய முதல் மந்திரி எம். மாலடோவ், 1933 நவம்பர் 7உ பேசுகையில், சீன சம்பந்தமாய் ரஷ்யா ஒரு நடுநிலைமைக் கொள்கையை அனுஷ்டிக்குமென்றும், பிறநாடுகளின் ஆதிபத்ய, பிரதேச உரிமைகளை ரஷ்யா கவுரவிக்கும் என்றும் தெரிவித்தார். ஆனால், பிறகு நடந்த பல சம்பவங்கள், ரஷ்யாவின் இந்தக் கொள்கை மாறுவதற்கு ஹேதுவாயின. ஜப்பான், மஞ்சூரியாவை அடுத்துள்ள கிழக்கோடி ரஷ்யாமீது திருஷ்டி வைத்திருப்பதும், மஞ்சூரியாவை அதற்காக விரைவில் ஒரு போர்க்களமாக்கி வருவதும் தெரிந்தது. ரஷ்யா-மஞ்சூரிய எல்லைப்புறத்தில் அடிக்கடி ஸோவியத்-ஜப்பானியத் துருப்புகள் மோதலாயின. ஸோவியத்மீது ஆக்ரமிப்பதற்கு பல சாக்குப்போக்குகளும் சிருஷ்டிக்கப்பட்டன. ஜப்பானுடன் கூடியவரை சமாஸமாய்ப் போகலாம் என்ற நோக்கத்துடன் வட மஞ்சூரியாவில் தங்களுக்குச் சொந்தமாயிருந்த சீன கிழக்கு ரயில்வேயையும் ரஷ்யா ஜப்பானிய சர்க்காருக்கு விற்றுவிட்டது. ஆயினும் ஜப்பான் நிற்கவில்லை. தன் போக்கையே அனுஷ்டித்தது.

இதற்கிடையே, வெளி மங்கோலியா ஸோவியத் குடியரசானதைக் கண்ட சீன சர்க்கார், ரஷ்யா சீனமீது

ஆக்ரமிக்கக் கருதியிருக்கலா மென்று நினைத்தனர். பொதுவுடைமையைக் கண்டு கதி கலங்கும் பிரிட்டன், அமெரிக்கா போன்ற முதலாளி நாடுகள் குத்திக்கொடுக்கவே, சீனு ரஷ்யாமீது நீண்டகாலம் வரை சந்தேகம் கொண்டிருந்தது. ஆனுல், கிரியாம்சையில், நாடு பிடிப்பது ஜப்பான்தான் என்பதும், மஞ்ஞசை ரஷ்யாவுக்கு லவலேசமும் கிடையாதென்பதும் புலப்படவே, மீண்டும் சீன சர்க்கார் ரஷ்யாமீது நேசப்பான்மை கொண்டுள்ளனர். சீன-ஜப்பானிய யுத்தம் ஆரம்பமானபின், இந்த செப்டம்பரில், ரஷ்யாவும் சீனுவும் அனுக்ரமிப்பு ஒப்பந்தம் செய்துகொண்டுள்ளன. சீன முதல் மந்திரி சியாங்-கே-ஷேக்கின் மனைவி சமீபத்தில் விடுத்துள்ள அறிக்கைகளிலிருந்தும், ரஷ்யா பிரஸ்ஸெல்ஸ் மகாநாட்டில் காட்டிய மனப்பான்மையிலிருந்தும், இந்த யுத்தத்தில், ரஷ்ய விமானங்களும் தளவாடங்களும் சீன சர்க்காருக்கு வந்துகொண்டிருப்பதை உலகம் அறிந்தது.

ஜப்பானின் போக்கை உத்தேசித்து கிழக் கோடியில் ரஷ்யா தன் தற்காப்பு ஏற்பாடுகளைப் பலப்படுத்துவது அவசியமாய் விட்டதென்று ஸ்ரீ. மாலடோவ், 1933-ல் மாஸ்கோ ஸோவியத் கூட்டமொன்றில் தெரிவித்தார். ஜப்பான் ரஷ்யாவுடன் அனுக்ரமிப்பு ஒப்பந்தம் செய்துகொள்ள மறுக்கவே, ஜப்பானின் உண்மை நோக்கம் நன்ருய் வெளிப்பட்டது. முன்னதாகவே அறிவித்துவிட்டுத்தான் போர் தொடங்கவேண்டு மென்ற நியதி

மதியீனம் என்று ஜப்பானிய ராஜதந்திரிகள் பகிரங்கமாய்ப் பன்முறை கூறியுள்ளனர். ஆகவே, கிழக் கோடியில் ரஷ்யா ஜரூராய் வேலைகளைக் கவனிக்கத் தொடங்கியது. "சீக்கிரத்தில் நாம் தாக்கப்படலாம்; தயாராயிருக்க வேண்டும்" என்று ககானேவிஷ் 1933 ஜனவரி 22உ தெரிவித்தார். மஞ்சூரியாவில் ரஷ்யா எல்லையருகில் ஜப்பானின் இடைவிடாத முஸ்திபுகளும் இந்தப் பயத்தைப் பெருக்கின. 1933 டிசம்பர் 11உ ஸோவியத் சர்க்கார் பிறப்பித்த உத்தரவுப்படி, கிழக்கோடியில் ஏராளமான ஜனங்கள் குடியேற்றப்பட்டனர். அங்கு போகிறவர்களுக்குப் பல சலுகைகள் தரப்பட்டன. பெரிய விமானப் படையும், விளாடிவாஸ்டக் என்ற துறைமுகத்தில் நல்ல கடற்படையும் வைக்கப்பட்டன. மாஸ்கோவிலிருந்து விளாடிவாஸ்டக் வரை, ரயில்பாதை, ராணுவ அவசரங்களை யுத்தேசித்து, இரண்டு பாதைகளாக்கப்பட்டது; ஒன்று போவதற்கு; மற்றொன்று வருவதற்கு. இதையெல்லாம் கண்டு பீதியடைந்த ஜப்பானிய இரகசியப் போலீசார், லஞ்சம் முதலியன கொடுத்து, கிழக்கு ஸைபீரியாவில் பல ஒற்றர்களைச் சிருஷ்டித்தனர். ரஷ்யாவுக்கு எதிராகச் சரியான தருணத்தில் துரோகம் செய்ய ஒரு பெரிய சதிகாரக் கும்பல் தோற்றுவிக்கப்பட்டது. ஆனால், சமீபத்தில் ஸோவியத் இரகசியப் போலீசார், இதையெல்லாம் கண்டுபிடித்து, தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டு விட்டனர்.

ஸகல அதிகாரங்களும் படைத்துள்ள பழைய முடியரசு, முதல் ஸோவியத் நாட்டைத் தன் பெரிய பகைவனாகக் கருதுகிறது. ரஷ்யாவுக்கு நாடு பிடிக்கும் ஆசையில்லையென்றாலும், ஸர்வதேச சிக்கல்களின் விளைவாக, ஜப்பானிய அபிலாஷைகளுக்கு பாதகம் விளைவிக்கும் நிலைமையில் அவர்கள் இருப்பதை ஜப்பான் மறக்கவில்லை. அந்நாட்டுடன் அனுக்ரமிப்பு ஒப்பந்தம் செய்துகொள்ள ஜப்பான் திட்டமாக மறுத்துவிட்டது கவனிக்கத்தக்கது. ராணுவ வெறியர்களால் ஆளப்படும் ஜப்பான் எந்த நிமிஷத்தில் என்ன செய்யுமோ என்ற எண்ணத்துடன், (அனுக்ரமிப்பு ஒப்பந்தத்துக்கு ஜப்பான் இணங்க மறுத்தபின்) கிழக்கோடியில் ரஷ்யா தற்காப்பைப் பலப்படுத்தியது. 1936-ல் கிழக்கோடியில், 3 லக்ஷம் துருப்புகள், 1000 விமானங்கள், 600 டாங்குகள், 40 சப்மரைன்கள், மஞ்சுகோ எல்லையை அடுத்தாற்போல் 1000 கோட்டைகள்— இவற்றை ரஷ்யா தயாராக்கி வைத்துள்ளது. சீனவில் பெரியதோர் பகுதி ஸோவியத் மயமாகி வந்ததாலும், வெளி மங்கோலியா அதன் ஆதினத்தின் கீழ்ப் போய் விட்டதாலும், ஸர்வதேச சங்கத்தில் ஸோவியத் ரஷ்யா சேர்ந்துவிட்டதாலும் ஜப்பானின் திகில் அதிகரித்தது. ஆசியாவில் தன் அபிலாஷைகளை ரஷ்யா நிறைவேற வொட்டாது என்ற பயம் ஜப்பானைப் பலமாய்ப் பிடித்துக் கொண்டது. ரஷ்யாவும் ஜப்பானிய ஆக்கிரமிப்பை

எதிர்பார்த்து எதற்கும் தயாரான நிலைமையில்தான் இருக்கிறது. எந்த எதிரியையும் தோற்கடிக்கக்கூடிய நிலைமையில் ஸோவியத் ரஷ்யா இருப்பதாக நவம்பர் 29உ எம். லித்விருவ் லெனின்கிராடில் கூறியது வெறும் ஜம்பப் பேச்சல்ல. ரஷ்யா அத்தகைய பலம் பெற்றிருப்பது உண்மை.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்

## சீன யுததம் உலக யுத்தமாகுமா?

சீனுவில் மேல்நாடுகளுக்கு இருந்து வரும் உரிமைகள் பல. அவற்றில் முக்கியமானவை ஒன்பது வல்லரசுகள் உடன்படிக்கை மூலம் ஊர்ஜிதம் செய்யப்பட்டுள்ளவைகளே. இந்த உடன்படிக்கைக்குக் காரணமாயிருந்த பல விஷயங்கள் எற்கனவே விவரிக்கப்பட்டுள்ளன.

பிரிட்டனும் ஜப்பானும் செய்து கொண்டிருந்த உடன்படிக்கைதான் எல்லாவற்றிலும் முக்கியமானதென்று சீனு கருதியது. இந்த உடன்படிக்கையின் பலத்தை நம்பித்தான் பிரிட்டன் சீன மண்ணின்மீது அடியெடுத்து வைத்து, தன் ஆக்கிரமிப்பை ஆரம்பம் செய்ததென்று ஆசிரியர் வில்லபி என்பவர் எழுதியிருக்கிருர். சீனுவுக்கு அனுப்பிய 21 கோரிக்கை

களில் அடங்கியுள்ள ஆக்கிரமிப்புக் கொள்கையை ஜப்பான் அனுஷ்டித்தால் தான் குறுக்கிடப் போவ தில்லை என்ற உத்தரவாதத்தை ஜப்பானுக்குப் பிரிட்டன் அளித்திருக்க வேண்டுமென்று அவர் கருதுகிறார். இதே போன்ற உத்தரவாத மிருந்ததால்தான் 1904-ல் ரஷ்யாவை ஜப்பான் தாக்கத் துணிந்தது என்பது இந்த மிகப்பெரிய சரித்திராசிரியரின் கருத்து. வாஷிங்டன் மகாநாடு கூட்டப்பட்டதன் காரணம் ஜப்பானின் ஏகாதி பத்திய அபிலாஷைகளுக்கு எவ்விதத்தில் முட்டுக் கட்டை போடலாம் என்பதைக் கவனிப்பதற்குத்தான் என்று பச்சையாகக் கூறிவிடலாம். இந்த வாஷிங்டன் மகாநாட்டின் விளைவாக மூன்று முடிவுகள் ஏற்பட்டன. முதல் பலன், கடற்படை பலத்தை நிர்ணயிக்கும் ஒப் பந்தம். பிரிட்டன், அமெரிக்கா, ஜப்பான் மூன்றின் கடற்படை பலமும், முறையே 5 : 5 : 3 என்ற விதாசாரத்தில் இருக்கவேண்டுமென்று ஒப்புக்கொள் ளப்பட்டதாகும். மகாநாட்டின் முக்கியமான நோக்கம் இதன் மூலம் நிறைவேறியது.

அடுத்தபடி முக்கியமானது பிரிட்டன், பிரான்ஸ், ஜப்பான், அமெரிக்கா ஆகிய நான்கு நாடுகளும் செய்து கொண்ட ஒப்பந்தம். இதன் மூலம் தங்களிடையே, பஸிபிக் பிரதேசத்தில் ஏற்படும் தகராறுகளை எப்படித் தீர்த்துக் கொள்வது என்பதைப்பற்றி இந்த நான்கு வல்லரசுகளும் ஒரு முடிவுக்கு வந்தன. பஸிபிக் சமுத்

திரத்தை யொட்டியுள்ள பிரதேசங்களில் உடன்படிக்கைகள் மூலம் ஒப்புக்கொள்ளப் பட்டுள்ள பிரதேச இத்யாதி உரிமைகளைப் பற்றிக் கிளம்பும் தகராறுகளை முதற்படியாக ராஜதந்திர முறைப்படி தீர்க்க முயற்சிக்க வேண்டும். அது தவறினல் அவை ஒரு மகாநாடாகக் கூடி ஆலோசித்துத் தகராறைச் சரிப்படுத்திக்கொள்ளவும், வேறு வல்லரசின் ஆக்கிரமிப்புச் செய்கையின் விளைவாக, ஒப்பந்த நாடு, அல்லது நாடுகளின் உரிமைகள் பயமுறுத்தப்பட்டால், ஒப்பந்த நாடுகள், தனியாகவோ அல்லது கூட்டாகவோ அப்போதைய நிலைமையைச் சமாளிக்க என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதைப் பற்றி பூர்ணமாக மனம் விட்டு விவாதித்து மிகவும் பயன் தரத்தக்க ஏற்பாடுகளை நிர்ணயிக்கவேண்டும். பஸிபிக் தீவிலுள்ள (ஜப்பானுக்குக் கொடுக்கப்பட்ட) மான்டேட் தீவுகள், இந்த உடன்படிக்கையின் வரம்புக்கு உட்பட்டவை என்பதும் தெளிவாக்கப்பட்டது. இது ஒரு அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டது.

மூன்ருவது ஏற்பாடு ஒன்பது வல்லரசுகள் உடன்படிக்கை என்பது. இந்த உடன்படிக்கையில் பிரிட்டன், அமெரிக்கா, ஜப்பான், பிரான்ஸ், சீனு, பெல்ஜியம், இத்தாலி, ஹாலந்து, போர்ச்சுகல் இவைதான் முதலில் கையெழுத்துச் செய்தன. பிறகு, ரஷ்யா, ஜெர்மனி உட்பட இன்னம் பல நாடுகளும், இந்தியா உட்பட பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலுள்ள பெரிய நாடுகளும்

இதில் கலந்துகொண்டன. உடன்படிக்கை நாடுகள், சீனாவின் பிரதேச ஆதிபத்திய, நிர்வாக சுதந்திரத்தைக் காப்பாற்றுவதாகவும், எல்லாத் தேசங்களுக்கும் சீன முழுவதிலும் வர்த்தகம் செய்யவும் தொழில்களை நடத்தவும் சம உரிமையும் சந்தர்ப்பமும் இருக்குமாறு பார்த்துக் கொள்ளத் தம் செல்வாக்கு முழுவதையும் உபயோகிக்க வேண்டும் என்பதும், சீனாவில், எந்த ஒப்பந்த நாடும் விசேஷ உரிமைகளையோ, அல்லது பிரத்தியேகச் சலுகைகளையோ பெற முயற்சிக்கக் கூடாதென்றும், சீனாவின் நிலைமையை அத்தகைய சுயநலத்துக்காகப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாதென்றும் அவை ஒப்புக்கொண்டன.

இந்த ஒப்பந்தத்தை யனுசரித்த உரிமைகள் தவிர, இன்னம் பல உரிமைகளும் சீனாவில் வெளிநாடுகளுக்கு உண்டு. இவற்றை நிர்ணயிக்க 1925-26-ல் இரண்டு கமிஷன்கள் நியமிக்கப்பட்டன. ஒன்று சீன ஏற்றுமதி இறக்குமதி வரிகளை நிர்ணயிப்பதற்கு; மற்றொன்று குற்றமிழைக்கும் அந்நியர்களை விசாரிக்கும் உரிமையை அந்தந்த ஸ்தானீக அதிகாரிகளிடையே ஒப்படைப்பதற்குத் திட்டம் வகுப்பதற்காக. இந்தக் கமிஷன்கள் தங்கள் வேலைகளைச் செய்வதில் சற்று தயக்கம் ஏற்பட்டது. வரிக் கமிஷன் ஏதோ சொற்ப வரி விதாசாரத்தையே சிபார்சு செய்தது. சீன மூன்று வருஷ காலத்துக்குள் தன் இஷ்டப்படி வரி விதிக்கச் சுதந்திரம் கோரியது. இதற்கு ஒரு நிபந்தனை விதிக்கப்பட்டது. அது பூர்த்தி

யாகவே, 1929 பிப்ரவரிமுதல், சீனுவுக்கு வரி சுதந்திரம் கிடைத்தது. ஆனால், முக்கியமான எல்லாத் துறைமுகங்களிலும், முக்கியமான நதிகளிலும் எவ்விதமான நிர்ப்பந்தமு மில்லாமல், பந்தோபஸ்துக்காக ராணுவ உதவியை வைத்துக்கொண்டு வர்த்தகம் செய்யவும் தொழில் நடத்தவும், எல்லா நாடுகளுக்கும் உரிமையுண்டு. பிறகு, ஐரோப்பிய நாடுகளும் அமெரிக்காவும் சீனுவுக்குக் கொடுத்துள்ள கடன்களுக்கெல்லாம், சீன சர்க்காரின் கடற்சுங்க வருமானமே ஈடுகாட்டப்பட்டுள்ளது. ஒப்பந்த நாடுகளுக்குச் சீனுவின் சுங்கவரி நிர்வாகத்தில் உரிமையுண்டு. கடனைச் சுலபமாய் வசூலிப்பதற்காகவே இந்த ஏற்பாடு செய்துகொள்ளப்பட்டது. சீன சுங்கவரி இலாகாவின் தலைவர் ஸர். ராபர்ட் மெய்ஸ் என்ற ஆங்கிலேயர்.

ஏழு வருஷங்களுக்கு முன், ஜப்பான் பிரிட்டனின் நண்பனு யிருந்தது. தன் இளைய சகோதரன் என்று ஜப்பானைப் பிரிட்டன் முதுகில் தட்டிக் கொடுத்து வந்தது. ஆனுல், இன்று அந்தத் தம்பி, பிரிட்டனுக்குப் பலவிதங்களில் பகையாளியாய் விட்டது. ஒன்பது வல்லரசு உடன்படிக்கையை அடியோடு உதறித் தள்ளிவிட்டு, ஜப்பான் சீனுவை விழுங்கத் தொடங்கி, கீழ்க்கோடியில் பிரிட்டிஷ் உரிமைகளை யெல்லாம் அறைகூவி அழைக்க முற்பட்டிருப்பதே இப்போது ஏற்பட்டுள்ள புதிய உறவுக்குக் காரணம். தான் அக்கிரமமாய் எதையும் செய்வதாக் ஒப்புக்கொள்வோர்

வெகு அபூர்வம். தன் ஆக்ரமிப்புக்களுக் கெல்லாம் ஜப்பான் 'நியாயமான' காரணம் காட்டுகிறது. வாஷிங் டன் மகாநாட்டிலும், பிறகு லண்டனில் நடைபெற்ற கடற்படை மகாநாட்டிலும், தான் பிரிட்டனாலும் அமெ ரிக்காவாலும் வஞ்சிக்கப்பட்டதாக நம்பி, அவற்றை மீறி நாடு பிடிக்கவும், பிரிட்டிஷ், அமெரிக்கக் கடற்படை களுக்கு எவ்விதத்திலும் குறைவில்லாத கடற்படை யைக் கட்டுவதிலும் ஜப்பான் முனைந்திருக்கிறது. பொரு ளாதாரத் தேவை, ஜனப் பெருக்கு, மூலப் பொருட்கள் இல்லாமை, ஜப்பானின் பந்தோபஸ்தைப் பற்றியும், ஆசியாக் கண்டத்திலுள்ள நிலப்பரப்பில் உள்ள விசேஷ உரிமைகளைப் பற்றியும் ஏற்பட்டுள்ள பயம், சீனவின் பிடிவாதமும் திறமையற்ற ஆக்ஷியும், ஜப்பானுக்கு எதி ரிடையாகச் சீன அனுஷ்டிக்கும் கொள்கை, சீனவில் பொதுவுடைமை, கீழ்க்கோடியில் ரஷ்யாவின் ராணுவ ஏற்பாடுகள் இவற்றையெல்லாம் உத்தேசித்துத்தான், ஜப்பான் தற்காப்புக்கு வேண்டிய வேலைகளை அவ்வப் பொழுது செய்யவேண்டி யிருப்பதாகக் கூறுகிறது. எது எப்படி யிருந்தபோதிலும் ஒன்பது வல்லரசு உடன்படிக்கையை ஜப்பான் தாக்க ஆரம்பித்து ஏழு வருஷங்களாகின்றன. 1931-ல் இருந்த நிலைமை இன்று பஸிபிக் பிரதேசத்தில் இல்லை. மஞ்சூரியா, ஜிஹோல், ஹோபெய், சாஹார், உட்புற மங்கோலியா, இவை படிப் படியாய் ஜப்பானின் ஆதீனத்தின்கீழ் வந்து விட்டன.

இன்று ஸுயுவான், ஷான்ஸி, ஷாண்டுங் இவையும் ஜப்பானிய ராணுவத்தின் கையில் இருக்கின்றன. ஆக்கிரமிப்பு வெகு ஜரூராய் நடைபெறுகிறது. தங்கள் உதய சூர்யன் எப்பொழுதுமே வளர்ந்து வரும் பிரகாசத்துடன் இலங்குமென்றும், அது ஒருக்காலும் அஸ்தமிக்கப் போவதில்லை என்றும் ஜப்பானியர் பெருமை பேசுகின்றனர். ஒவ்வொரு சீன மாகாணமாக, ஜப்பானிய ஏகாதிபத்திய ஆக்ரமிப்புக்குப் பலியாய்க் கொண்டிருக்கிறது. வல்லரசுகள் ஆட்சேபனைகளையும் அழுத்தமான கண்டனங்களையும் அனுப்புகின்றன. தத்தம் உரிமைகளைக் காப்பாற்றிக் கொள்ளத் தற்காப்பு ஏற்பாடுகளைச் செய்து வருகின்றன. ஜப்பானின் ஆக்ரமிப்பைப்பற்றி கவனிக்க மகாநாடும் கூட்டி ஒன்றும் செய்யாமல் கலைந்தன. ஆனால், கோடிக்கணக்கில் தங்கள் உடைமைகள் பறிபோயும், வர்த்தகம் அழிந்துபோயும், எதிர்காலம் அபாயமாயுமிருக்கும் இந்த நிலைமை நீடிக்குமா? சீனுவில் முதல் பிரிட்டிஷ் சொத்து தாக்கப்பட்டால், உடனே பிரிட்டன் யுத்தத்தில் துள்ளிக் குதித்துவிடும் என்ற நினைப்பெல்லாம் மலையேறிவிட்டது. எல்லா வல்லரசுகளும், தங்க ளிஷ்டப்படி நடவடிக்கை எடுத்துக்கொள்ளும் நிலைமையில் இருக்கவில்லை. சாத்திய சாதனங்களைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. ஆனல் ஜப்பானிய ஆக்ரமிப்பு இப்படியே நீடிக்குமாறுவிட்டால் தங்களுடைய வர்த்தகமும், ராஜீய உலகில் ஆதிக்கமும், பல நூற்றுண்டுகளா

யிருந்துவரும் ஏகாதிபத்தியமும் முற்றுப்பெறும் என்பது பிரிட்டனுக்குத் தெரியும். ஆயுத விஸ்தரிப்பில் பிரிட்டன் கடைசியாகஇறங்கியதால்,நீடித்த போருக்குப் போதிய அளவுக்கு வேண்டிய தளவாடங்கள் பிரிட்டனிடம்தயாராக இல்லை. ஆனால், பல வருஷங்களில் செய்திருக்கவேண்டிய ஆயுதங்களைப் பிரிட்டன் ஒரு சில மாதங்களில் தாயாரித்து விட்டது; இன்னம் தயாரித்து வருகிறது. இப்போது பிரிட்டிஷ் பலம், கொஞ்சம் சீராகத் தான் இருக்கிறது. ஆகையால் ஐரோப்பாவில் மத்யதரக் கடல் நிலைமையும், மத்ய ஐரோப்பிய நிலைமையும் சீர்திருந்துவதற்காகப் பிரிட்டன் இப்போது காத்துக் கொண்டிருக்கிறது. எப்படியாவது ஹிட்லரையும் முஸோலீனியையும் திருப்தி செய்விக்கப் பாடுபடுகிறது. இந்த முயற்சியில் வெற்றி கிடைத்தால் உடனே பிரிட்டிஷ் கடற்படையில் பெரும் பகுதி 'பந்தோபஸ்து'க்காக என்று கிழக்கோடிக்கு வரும். ஏதேனும் ஒரு சம்பவத்தை முகாந்தரமாக வைத்து ஜப்பானைத் தாக்கக் கூடும். அப்போது பெரிய யுத்தம் மூள்வது நிச்சயம். தவிர, பிரிட்டிஷ் கொள்கை, கொஞ்சம் பொறுத்து, ஜப்பான் அலுத்திருக்கும் சமயத்தில், புகுந்து தாக்குவதாயு மிருக்கலாம். ஆனால், ஒன்று மட்டும் நிச்சயம். அமெரிக்கா, பிரான்ஸ் - இவற்றின் உதவியும் ஒத்துழைப்பு மின்றி பிரிட்டன் போரில் ஈடுபடப் போவதில்லை. இப்போதைய போக்கைப் பார்த்தால்

அமெரிக்க - பிரிட்டிஷ் ஐக்கியம் ஏற்படும் போலத்தான் தோன்றுகிறது. ஜப்பானை மட்டந்தட்டாமல் வளர விட்டால், பிறகு தங்களுக்கு அபத்துத் தான் என்பதை இரண்டு நாடுகளும் தெரிந்து கொண்டுவிட்டன. பிரிட்டன் ஜப்பானைத் தாக்கினுல், ரஷ்யாவும் பிரிட்டனுடன் சேர்ந்துகொள்ளும். அப்பொழுது யுத்தம் கிழக்கோடியில் மட்டுமிராமல் ஐரோப்பாவிலும் பரவுவது நிச்சயம். பொதுவுடைமை - எதிர்ப்பு உடன்படிக்கையில் ஜப்பானுடன் கையெழுத்துச் செய்துள்ள ஹிட்லரும் முஸொலினியும் எந்த நிமிஷத்தில் என்ன செய்வார்கள் என்று சொல்லமுடியாது. ஆகவே, கிழக்கோடிப் பிரச்னையை நாம் தன்னந் தனியாக மதிப்பிட்டு விமர்சனம் செய்வது சாத்தியமில்லை. ஆனுல் ஒன்று மட்டும் நிச்சயம். சீனுப் பிரச்னையில், இத்தாலி ஜெர்மனி தவிர மற்ற எல்லா வல்லரசுகளும் ஒரே அபிப்பிராயங் கொண்டுள்ளன. ஒரு பெரிய யுத்தம் இந்தப் பிரதேசத்தில் நடைபெற்ருல், அதன் போக்கு எவ்வாறிருக்கும் என்பதைப் பற்றி அபரிமிதமான புத்தகங்கள் எழுதப்பட்டுள்ளன.

ஜப்பான் இப்படியே போனுல், இன்னம் சில வருஷங்களுக்குள், அதை எந்த வல்லரசும் எதிர்க்க முடியாத நிலைமை ஏற்பட்டுவிடும். அதைப் பிரிட்டனே, அமெரிக்காவோ, ரஷ்யாவோ விரும்பவில்லை. அதற்கு பிரேக் எப்பொழுது போடப்படும் என்பது மேற்கு ஐரோப்பிய நிலைமையையே பொறுத்திருக்கிறது. இந்த

ஐரோப்பிய நிலைமை இப்போது மிகவும் மோசமா யிருப்பதை உணர்ந்தே, ஜப்பான் தன் புது ஆக்கிர மிப்பை முடுக்கி விட்டிருக்கிறது. 'காற்றுள்ள போதே தூற்றிக்கொள்' என்ற கொள்கையை ஜப்பான் உறுதி யுடன் அனுஷ்டித்து வருகிறது. உடன்படிக்கைகளின் புனிதத்தை ஜப்பான் கொஞ்சமும் மதிக்கவில்லை. இப் போது ஜப்பானில் முதல் மந்திரியாயிருக்கும் இளவரசர் கோனேய் விடுத்த கீழ்க்கண்ட அறிக்கை மிகவும் முக்கியமானது. அவர் கூறினர்:

"தங்களைவிட அதிருஷ்டத்தில் குறைவாயுள்ள தேசங் கள் அல்லது மக்களின் அவசரத் தேவைகளையும் சாமர்த்தியத் தையும் கொஞ்சமேனும் மதியாமல், அத்தியாவசியமான மூலப் பொருட்களை யெல்லாம் பலம் பொருந்திய நாடுகள் விநி யோகித்துள்ளன. இப்போதுள்ள உலக ஏற்பாட்டின் கீழ் இருந்துவரும் நிலைமை இதுதான். உலக யுத்தத்துக்குப் பிறகு ஏற்பாடான விநியோகம் இதில் முக்கியமாய்க் குறிப் பிடத்தக்கது. இம்மாதிரி பல நூற்றுண்டுகளாக அநீதி யான நிலைமை இருந்து வருவதால், அடிக்கடி ஸர்வதேச உறவுகள் பாதிக்கப் படுகின்றன. நிலப் பரப்பு, உற்பத்திச் சாதனங்கள் இவற்றின் விநியோகம் இப்போதுள்ளவாறே இருந்து வருவதை ஆயுத பலத்தைக்கொண்டு நிர்த்தாரணம் செய்வதால்தான் தகராறுகளும் யுத்தங்களும் உண்டா கின்றன. பழைய புட்டிகளில் புதிய சாராயத்தை ஊற்று வது புத்திசாலித்தனமல்ல. முன்னர் பிற்போக்காக உறங்கிக் கொண்டிருந்த நாடுகள், உலக ராஜீய மேடையில் தோன்றி

யுள்ள 'புதிய சாராயங்களுக்கு' உரித்தான பாகம் கொடுக்க வேண்டும். அவை, தம் சாமர்த்தியத்தையும் திறமையை யும் உணர்ந்துள்ளன. உலகத்தை அவை கலக்கி வரு கின்றன. அவற்றை, இப்போதுள்ள நிலைமை என்ற பழைய புட்டியில் அடைத்தால், புட்டி உடையத்தான் செய்யும்."

ஜப்பான், ஜெர்மனி, இத்தாலி மூன்றுந்தான் இந்தப் "புதிய சாராயங்கள்". இவைதான் அதிகமான கெடுபிடி செய்கின்றன. இப்போதுள்ள நிலைமையைப் பலாத்கார மாய் மாற்ற, இவை மூன்றும் கூட்டுறவாய் முயற்சிக் கின்றன. ஜெர்மனியும் இத்தாலியும், ஸ்பெயின்மீது படையெடுத்து, அங்கு தங்கள் ஆதினத்துக்கு உட் பட்ட ஒரு கையாளின் ஆதிக்கத்தை ஸ்தாபிக்கும் முயற்சியில் முனைந்திருக்கின்றன. ஜப்பானும் சீனுவில் ஒரு 'பொம்மை சர்க்காரை' ஏற்படுத்திவிட் டிருக் கிறது. 1914-ல் இருந்த நிலைமை இப்பொழுது வந்து விட்டதாக பிரெஞ்சு உதவி முதல் மந்திரி ஸ்ரீ. புளும் கூறுகிறார்.

ஆம், பாஸிஸ்ட் ராணுவ ஏகாதிபத்தியங்கள் ஒரு புறமும், ஜனநாயகத்தை ராஜீயத் துறையில் மட்டும் அனுஷ்டிக்கும் மற்ற ஏகாதிபத்தியங்களும் இன்று எதிரிடையாக இருந்து, 1914-ன் நிலைமையை மீண்டும் ஏற்படுத்தி யிருப்பதில் ஆச்சரிய மொன்றுமில்லை. அவற்றிடையே அவ்வளவு தூரத்துக்கு விரோதம்

வளருவதற்கான காரணங்கள் உலகில் இருந்துவருகின்றன.

பத்தொன்பதாவது நூற்றுண்டின் கடைசிக்குள், உலகத்தைப் பெரிய வல்லரசுகளெல்லாம் பங்கு போட்டுக் கொண்டுவிட்டன. 1884-முதல் 1900-வரை 16-வருஷ காலத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் விஸ்தீர்ணம் 37லக்ஷம் சதுரமைல் அதிகமாயிற்று. இந்தப் பிரதேசத்தின் ஜனத்தொகை 570லக்ஷம். பிரான்ஸ் அதிகமாய்ப் பிடித்துக்கொண்டது 35 லக்ஷம் சதுரமைல். இங்கு ஜனத்தொகை 360 லக்ஷம். 10 லக்ஷம் சதுரமைல் விஸ்தீர்ணமும் 170லக்ஷம் ஜனசங்கியையும் கொண்டதுமான காலனிகளை ஆப்ரிகாவில் ஜெர்மனி ஸ்வீகரித்துக் கொண்டது. ஆனல், மகாயுத்தத்துக்குப் பிறகு இவை பிரிட்டிஷ் மாண்டேட் பிரதேசங்களாய்விட்டன. அமெரிக்காவுக்கு கியூபா, பிலிப்பைன் தீவுகள், ஹவாயீ தீவுகள், அலாஸ்கா முதலியவை கிடைத்தன. இத்தாலி, இரிட்ரீயாவையும்,சோமாலிலாந்தையும் வட ஆப்ரிகாவில் கைப்பற்றியது. பாரசிகம், ஆப்கானிஸ்தானம், மத்திய ஆசிய நாடுகள், இவற்றின்மீது ஆதிக்கம் செலுத்துவது பற்றி ரஷ்யாவுக்கும் பிரிட்டனுக்கும் இடைவிடாத தகராறு இருந்துவந்தது. மொராக்கோ சம்பந்தமாக ஜெர்மனி, பிரான்ஸ், ஸ்பெயின் மூன்றும் சிலுசிலுத்துக் கொண்டிருந்தன. பெல்ஜியம் காங்கோவைப் பிடித்து அதைச் சுரண்டி வந்தது. 1914-ல் மகா யுத்தம் ஆரம்ப

மானபோது, சீனு தவிர, மற்ற எல்லா நாடுகளும் ஏகாதிபத்தியங்களின் சொத்துக்களாய்விட்டன. சீனு வீழ்ச்சியடையாமைக்குக் காரணம், அதைப் பிரித்துக்கொள்வது சுலபமா யில்லாததுதான். ஆனல், சீனு சம்பந்தமாகத்தான் 1914-க்குப் பிறகு, ஏகாதிபத்தியங்களிடையே போட்டியும், சூழ்ச்சிகளும், சதிகளும் மலிந்து கிடந்தன என்பது எல்லோரு மறிந்ததே. 19-வது நூற்றுண்டில் உலகம் பங்கிடப்பட்ட விதத்திலிருந்து எல்லா ஏகாதிபத்தியங்களும் சம பலனையடையவில்லை. பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ் மூன்றும் தழைத்தோங்க ஜெர்மனியும் இத்தாலியும் திணறின. ஆகையால் உலக நாடுகளைப் புதிய விதத்தில் மீண்டும் பங்கிட்டுக் கொள்வதற்காகத்தான் உலக யுத்தம் நடைபெற்றது. ஆனல், இதன் விளைவாகப் பழைய பெரிய ஏகாதிபத்தியங்களே மீண்டும் வலுவடைந்தன. ஜப்பானுக்குக் கிடைத்த ஜெர்மன் காலோனின், மார்ஷல் தீவுகள் யானைப் பசிக்குப் பொரி போலிருந்தது. இந்த யுத்தத்தினல் கிடைத்த பெரிய பலன் ஸோவியத் ரஷ்யா ஸ்தாபிக்கப்பட்டது தான். ஆனல், மிகுந்த ஜன நெருக்கமும், ராணுவ உணர்ச்சியும், திறமையும் படைத்த மூன்று நாடுகளுக்கு விமோசனம் கிடைக்கவில்லை. ஜெர்மனி கவிழ்க்கப்பட்டது. இத்தாலிக்கு இந்தக் கொள்ளையில் நியாயமான பங்கு கிடைக்கவில்லை. ஜப்பானியப் பிரச்னை தீரவில்லை.

ஆகவே அவை ‘படைத்துள்ள’ ஏகாதிபத்தியங்கள் மீது மற்றொரு போர் தொடுத்து, நாடு பெறுவதற்காகத் தம் சமூக அமைப்புகளையே மாற்றிக்கொண்டு உலகத்தையே கலக்கி வருகின்றன. சீனு என்னவாகும் என்று எப்படிச் சொல்வது? வல்லரசுகள் சீக்கிரம் தலையிடாவிடில், ஜப்பான் இன்னும் சில மாதங்களில் சீனக் கடற்கரையோரமுள்ள மாகாணங்களை யெல்லாம் பிடித்து விடலாம். போர் இரண்டு வருஷமாவது நீடிக்கும் என்று ஜப்பானியரே ஒப்புக்கொண்டுள்ளனர். ஆனுல் என்ன நடைபெறு மென்று நிச்சயமாய்ச் சொல்வதற்கில்லை. ஐரோப்பிய நிலைமை சீர்திருந்தினுல், கிழக்கோடியில் போர் நெருங்கும். சீக்கிரத்திலோ, அல்லது கொஞ்சம் கழித்தோ, பிரிட்டனும் ஜப்பானும் கிழக்கே மோதப்போவது நிச்சய மென்றுதான் தோன்றுகிறது.

ஆனுல், இந்த யுத்தங்களின் விளைவு என்ன? ஒரு பெரிய மகா யுத்தம் வருமானுல், ஜப்பான் அதில் சமாளிப்பது துர்லபமே. அதன் பொருளாதார அமைப்பு நீடித்த யுத்தத்தில் உடைந்து போவது நிச்சயம். 1935-36-ல் ஜப்பானிய பட்ஜெட்டில் 68% ராணுவ இலாகாக்களுக்காக ஒதுக்கப்பட்டது. 1936-37-ல் 130 கோடி யென். (50%), 1937-38 பட்ஜெட்டில் 131 கோடியென் (47%) ராணுவ விஸ்தரிப்புக்குச்செலவழிக்கப்பட்டன. இதே மாதிரி நிலைமை நீடிப்பது சாத்தியமில்லை. ஜெர்மனியும் இத்தாலியும் அதே

மாதிரித்தான். பிரிட்டன், ரஷ்யா, அமெரிக்கா மூன்றும் வெற்றியடைந்தாலும் மிகவும் பலவீனமடைந்துபோம். தவிர, யுத்தங்களுக்கும், அநீதிக்கும், வறுமை, பிணி, பசி எல்லாவற்றிற்கும் பெருவாரியான மக்களைச் சுரண்டி அதிகாரம் செலுத்தும் ஏகாதிபத்தியங்கள்தான் மூல காரணம் என்பது தெளிவாகப் புலப்பட்டு விட்டது. இந்த ஏகாதிபத்தியச் சுரண்டலை ஒழிப்பதென்று உலகெங்குமுள்ள பாமர மக்கள் உறுதியுடன் தீர்மானித்துள்ளனர். இந்தியா, பாலஸ்தீன், கிழக்கிந்தியத் தீவுகள், பிரிட்டிஷ் அமெரிக்கத் தீவுகள், மடகாஸ்கர், நேடால், டங்கனீகா, மால்டா, எகிப்து, பிஜி, கயானா போன்ற பிரிட்டிஷ் ஏகாதிபத்திய அடிமை நாடுகளில் கொந்தளிப்பு வலுத்து வருகிறது. பிரெஞ்சு மொராக்கோவிலும், ஸிரியாவிலும், பிரெஞ்சு இந்தியாவிலும் அப்படியே. அமெரிக்காவில் பயங்கரமான வேலையில்லாத் தொல்லை இருந்து வருகிறது. ஆகையால் அடுத்தாற்போல்; ஏகாதிபத்தியங்கள் ஒரு பெரிய யுத்தத்தில் ஈடுபடும் பக்ஷத்தில், உலகெங்கும் பெரிய புரட்சிகள் தோன்றக்கூடுமென்று நம்ப இடமிருக்கிறது. சென்ற மகா யுத்தத்தின் விளைவாக ஸோவியத் ரஷ்யா ஸ்தாபிதமானது போல், அடுத்த யுத்தத்தின் காரணமாக, உலகத்தின் பல பாகங்களில், ஏகாதிபத்தியங்களும், முதலாளித்துவமும்; பாஸிஸமும் கவிழ்ந்து போய் ஒரு புதிய உலகம் சிருஷ்டிக்கப்படுவது நிச்சயம்.

## பதின்மூன்ருவது அத்தியாயம்

## சீன—ஜப்பான் யுத்தம்

## 1937 ஜுலை—டிசம்பர்

“சமாதானமே இத்தாலியின் கோரிக்கை: ஆனல், அது பரிபூர்ணமான ஆயுதபலத்துடன் கூடிய சமாதான மாயிருக்க வேண்டும்” என்று சொல்லிக் கொண்டே, ஸீனர் முஸொலீனி பல வருஷங்களாகவே அபிசினியாவை விழுங்குவதற்கு ஏற்பாடு செய்து வந்தார். அபிசினியாவை ஆக்ரமிப்பதற்கு வேண்டிய ஆயுத பலமும், ஆள் பலமும், பக்குவமான ஸர்வதேச நிலைமையும் ஏற்பட்டவுடனே, தென்கிழக்கு அபிசினியாவில் ஒகாடன் மாகாணத்தில், அந்த யுத்தம் ஆரம்பமாவதற்கு ஒரு வியாஜமாக ‘உவால்—உவால் சம்பவம்’ சிருஷ்டிக்கப் பட்டது. அபிசினிய காவற் படைகள் தங்களுடன் மோதியதாக ஒரு கதையைக் கட்டிவிட்டு, தங்கள் ‘தற்காப்பை’ உத்தேசித்து, இத்தாலியர் நடவடிக்கை யெடுக்கவேண்டி யிருப்பதாகச் சொல்லி போர்முரசு கொட்டினர். அதேபோல்தான் ஜப்பானும் இன்று நடைபெறும் போராட்டத்தைச் சிருஷ்டித்தது. அபிசினியாதான் இத்தாலிய ஏகாதிபத்தியத்துக்கு முதல். பலியாகுமென்று சில ராஜதந்திரிகள் தவிர இதரர்களுக்கு முன்னடியே தெரியாது. ஆனல், சீன சம்பந்தப்பட்ட

வரை, ஜப்பானின் உத்தேசத்தைப் பற்றி கொஞ்சங் கூட யாருக்கும் ஸந்தேகம் இருந்ததே கிடையாது. சீனுவை அவ்வப்பொழுது கொஞ்சங் கொஞ்சமாய் விழுங்குவதுதான் ஜப்பானின் கொள்கை என்பது 1931 முதல் நிதர்சனமாகப் புலப்பட்டது. ஆனுல், எந்தத் தருணத்தில், எவ்விதமாக ஜப்பான் தன் போராட்டத்தைத் தொடங்கும் என்பதுமட்டுமே நிச்சயமற்றிருந்தது. ஆனுல், பல சந்தர்ப்பங்களின் விளைவாக, ஜப்பான் இவ்வருஷம் தன் ஆக்ரமிப்பை நடத்தியே தீர வேண்டியது அவசியமாயிற்று. சீன ஸோவியத் இயக்கம் 1936-ல் தேசமெங்கும் செல்வாக்குப் பெற்று வந்ததால், சியாங்-கே-ஷேக்குடன் சீன ஸோவியத் அதிகாரிகள் சமாஸம் செய்துகொண்டு ஜப்பானிய எதிர்ப்பு இயக்கத்தைப் பலப்படுத்தி வந்ததால், ஜப்பானுக்கு திகில் அதிகமாயிற்று. தன் எண்ணம் நிறைவேற முடியாதவாறு சீனுவின் பலம் வளர்ந்துவிடக் கூடாது என்பதில் ஜப்பானுக்கு சிரத்தையுண்டு. ஆகவே, பக்குவமான சமயத்தில் ஸர்வதேச நிலைமை ஆக்ரமிப்புக்கு அனுகூலமாயிருக்கையில், ஜப்பான் தாக்க வாரம்பித்தது அதற்கு வேண்டிய ஒரு சாக்கு கிடைக்காமற் போகாதல்லவா? அந்த சாக்குதான் ‘லுகோசியோ சம்பவம்’ என்பது. 1934-35-ல் வடசீன அதிகாரிகளுடன் ஜப்பான் கொஞ்சிக் குலாவி, பல தில்லுமில்லுகளைச் செய்து, ஸ்தல ஒப்பந்தங்களைச் செய்து கொள்ள முற்பட்டது

வாசகர்களறிந்ததே. ஹோபெய்-சாஹார் ராஜீய கவுன்சி லுடன் ஜப்பான் செய்துகொண்ட ஒப்பந்தப்படி, பொது வுடைமையையும் கொள்ளைக் கூட்டங்களையும் எதிர்த்துப் பொரிடுவதில், வட சீன அதிகாரிகளுக்கு உதவியா யிருக்கவும், ஜப்பானிய உரிமைகளின் தற்காப்புக்காக வும், வட சீனுவில் பல முக்கியமான விடங்களில் ஜப் பானியர் துருப்புகளை வைத்துக் கொள்ளலாம் என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். அதேமாதிரி, பீகிங், டீண்ட்ஸின் போன்ற முக்கிய நகரங்களில் ஏராளமான துருப்புகள், ஸ்தானீக காரியாலயங்களின் காவற்படைக ளென்று வைக்கப்பட்டிருந்தன. தவிர, ஒப்பந்தத்தி லுள்ள சில ஷரத்துகளின்படி, ஷூயுவான் மாகாண எல்லையிலும் ஷான்ஸி எல்லையிலும் சில விடங்களில் ஜப் பானியத் துருப்பு விடுதிகள் இருந்து வந்தன. இரண்டு வருஷங்களாகவே, ஜப்பானியர், இவர்களைக் கொண்டு, வட சீனுவின் ராணுவ வசதிகளையெல்லாம் நுணுக்கமா கத் தெரிந்து கொண்டிருந்தனர். தங்கள் எதிர்கால ஆக்ர மிப்புத் திட்டத்தை, ஒரு அல்ப விவரம் விடாமல் தயா ரித்து வைத்தனர். சீன பெரிய மதிலுக்கு வடபுறம், அபரிமிதமான துருப்புகளையும் நவீன போர் சாதனங் களையும் அமைத்தனர். கிழக்கு ஹோபெயில், டீண்ட் ஸினுக்குச் சற்று வடக்கேயிருந்து மஞ்சுகோ எல்லே வரை, அவர்களுடைய படைத் தளமாயிருந்து வந் தது. சீனுவும், எல்லாவற்றையும் அறிந்துதான், அந்தப்

பிரதேசத்துக்கு அருகாமையில், தற்காப்பு ஏற்பாடு களுக்குத் தன்னை தயாராக்கிக் கொண்டிருந்தது. ஜப்பானியர் ஒப்பந்தத்தில் குறிப்பிட்ட பிரதேசங்களில் எங்காவது தங்கள் துருப்புகளுக்கு கெட்டித்த துப்பாக்கிகளுடன் பயிற்சியளிப்பதாயிருந்தால் முன்னதாகவே சீன அதிகாரிகளுக்குத் தெரிவித்து அவர்களுடைய சம்மதத்தைப் பெறவேண்டும் என்ற நியதியுண்டு. ஆனல், ஸர்வதேச ஒழுக்கமுறை வெறும் எட்டுச் சுரைக்காய் என்று இறுமாப்புடன் கொக்கரித்த ஜப்பானிய ராணுவ வெறியர்களுக்கு இந்த நியதிகளெல்லாம் எம்மாத்திரம்? அவர்கள் தான்தோன்றித் தனமாக, தங்கள் ராணுவ நோக்கங்களையே இலக்காக வைத்து, இஷ்டம் போல் கெடுபிடி செய்து வந்தனர்.

## போர் ஆரம்பம்.

இம்மாதிரி நிலைமை யிருக்கையில்தான், 1937 ஜூலை 8வ யன்று டோகியோவிலிருந்து கீழ்க்கண்ட செய்தி உலகத்திற்குக் கிடைத்தது:

டோகியோ; ஜூலை 8:

“வடசீனவில் நள்ளிரவில் பெங்டாய் என்ற விடத்துக்கு அருகில் ஒத்திகை நடத்திக் கொண்டிருந்த ஜப்பானியத் துருப்புகளை, ஸுங்-கோயுவான் என்ற சீன தளபதியின் 29வது ராணுவம் தாக்கியது. இருதரப்பினருக்கும் மேற்

கொண்டு படை பலம் வந்தது. கடுமையான யுத்தம் நடந்து வருவதாக அறிவிக்கப்படுகின்றன. பீரங்கிகளும் மெஷீன்களும் உபயோகிக்கப்படுகின்றன என்று பீகிங்கி லிருந்து அறிவிக்கப்படுகிறது."

## ஒத்திகை காரணம்

பீகிங்கிலிருந்து நேரடியாக அன்று கிடைத்த செய்திப்படி ஜப்பானியத் துருப்புகள் அத்துமீறி வந்து, ஆக்கிரமுட்டத்தக்க விதத்தில் நடந்து கொண்டதாகத் தெரிந்தது. இரவில் ஜப்பானிய ஒத்திகையைக் கண்ட சீனர் அதைப் படையெடுப்பு என்று நினைத்துத் தாக்கிய தாகவும், அதுவே போரில் கொண்டுபோய்விட்டதென் றும் ஜப்பானியர் சால்ஜாப்புக் கூறினர். சீன துருப்புகள் அங்கிருந்து வாபஸாக வேண்டுமென்று கேட்டனர். சீன தளபதி இணங்கவில்லை. சீன வெளிநாட்டு மந்திரி வாங்-வாங்-ஹுய், சியாங்-கே-ஷேக்கை கலந்தாலோசிக்க விமான மார்க்கமாய் நான்கிங் சென்றார். இந்த சம்பவம் வெறும் ஒத்திகையிலிருந்து கிளம்பியதல்லவென்றும் பீகிங்கை திடீரெனத் தாக்க நடைபெற்ற ஒரு முயற்சி யென்றும் அன்றே வேறிடங்களில் நடைபெற்ற நிகழ்ச்சி கள் நிரூபிக்கின்றன. பெங்டாய் அருகிலுள்ள லுகோ சியோவில்தான் இந்தப் போர் மூண்டது. இந்த சம்பவத் தைப்பற்றிச் செய்தி கிடைத்தவுடன், டீண்ட்ஸின் அரு கில் ஜப்பானியர் முன்னேறி,பிரஜைகளை நிர்த்தூளியாக்கி

லுங்-வாங்-மியா என்ற நகரைக்கைப்பற்றி, நாற்புறமும் சூழ்ந்துகொண்டு அங்கிருந்த சீனர்களை நிராயுதபாணி களாக்கினர். அது மட்டுமல்ல; தயாராய் டீண்ட்ஸினுக்கு வடபுறம் வைத்திருந்த தளவாடங்களை பீகிங் நோக்கி அன்றே அனுப்பினர். 12 டாங்குகள், பீரங்கிகளையும் துருப்புகளையும் ஏற்றிக்கொண்டு எட்டு லாரிகள் அங்கு சென்றன. டீண்ட்ஸினை ஜப்பானியர் தாக்கலாயினர். வட சீன நிலைமையை உத்தேசித்து, ஜப்பானியக் கடற்படையின் மூன்றாவது பிரிவு உடனே அங்கு போகுமாறு ஜப்பானியக் கடற்படை மந்திரி உத்தரவிட்டார். இவ்வாறு போர் ஆரம்பமாயிற்று.

அதிகப்படி துருப்புகளும் தளவாடங்களும் கிடைக்கும் வரை, அதிக நஷ்டம் ஏற்படாமல் தவிர்க்க வட சீனாவிலிருந்த ஜப்பானியத் தளகர்த்தர்கள் ஒரு உபாயம் செய்தனர். லுகோசியோ சம்பவத்தை சமரசமாய்த் தீர்த்துக்கொள்ள விரும்புவதுபோல் அடிக்கடி நடித்தனர். இடையிடையே தாக்கியும் வந்தனர். சமரசம் ஏற்படுவதாகத் தோன்றி, துருப்புகள் தற்காலிக ஏற்பாட்டின்படி பின்வாங்கியவுடனே, ஜப்பானியர் உடனே ஓடோடியும் வந்து சீனர் காலி செய்த கோட்டைகளைப் பிடித்துக்கொண்டனர். ஜப்பானிய மந்திரி சபையும் 9ஆ கூடி, யுத்த இலாகா எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளை அங்கீகரித்தது. சீனர், அன்று பீகிங்கிலும் டீண்ட்ஸினிலும் ராணுவச் சட்டத்தைப் பிரயோகித்தனர்.

மறுநாள் வடசீன ரயில்பாதைகள் எதிரிகள் வசமாகாமல் தடுக்க, சீன மத்திய சர்க்கார் நான்கு குதிரைப் படைகளை அனுப்பினர். ஆனால், ஜப்பானியர் கடும் போரிட்டு, துங்-ஷிங்-ஹாங், வாங்பிங் என்ற இன்னுமிரண்டு நகரங்களைப் பிடித்துக் கொண்டு பீகிங் கோட்டை வாயிலை நெருங்கினர். அங்கிருந்து அவர்கள் நகரைச் சூழ்ந்துகொண்டு, மேற்கே பல கிராமங்களைப் பாழாக்கினர். இந்த யுத்தங்களில் எல்லாம் சாதாரண பிரஜைகள் பெருவாரியாய் பலியாயினர்.

மறுநாள் 12உ ஜப்பானியர் சமரஸம் பேசுவதாகப் பாவித்து, இடைக் காலத்தில் புதுபலத்தைப் பெற்றனர். டோகியோவிலிருந்து இரண்டு சைன்யங்கள் கிளம்பின. பீகிங்குக்கு வெளியே 20,000 ஜப்பானிய சோல்ஜர்கள் சேர்ந்தனர். மஞ்சூரியாவிலிருந்தும் டீண்ட்ஸினிலிருந்தும் ஜப்பானியத் துருப்பு ரயில்கள் பீகிங் நோக்கி வந்த வண்ணமாயிருந்தன.

சீனு, மேற்கொண்டு ஆக்ரமிப்பைத் தடுக்க முழு பலத்தையும் பிரயோகிப்பதென்று தீர்மானிக்கவே, ஜப்பானிய சர்க்கார், இந்த சம்பவத்தை, வடசீன அதிகாரிகளுடன் தாங்கள் சமரஸமாய்த் தீர்த்துக்கொள்ள விரும்புவதாக ஒரு அறிக்கை விட்டனர். ஆனால், சீன-மத்திய சர்க்கார் அங்கீகரிக்காத எந்த சீன-ஜப்பானிய ஒப்பந்தமும் செல்லுபடியாகாது என்று சீன வெளிநாட்டு மந்திரி உறுதியுடன் கூறிவிட்டார்.

ஜூலை 13 : ஜப்பானுக்கு எதிராக சீனாவெங்கும் கிளர்ச்சி வலுத்தது. சீன சர்க்கார் யுத்த ஏற்பாடுகள் செய்தனர்.

பிரிட்டனும் அமெரிக்காவும் சஞ்சல மடைந்தன. லண்டனிலுள்ள சீன ஜப்பானிய ஸ்தானிகர்களை பிரிட்டிஷ் அமெரிக்கப் பிரதிநிதிகள் அழைத்து சமரஸமாய்ப் போகுமாறு புத்தி கூறினர்.

நெருக்கடி சற்று தளர்ந்தது. ஹோபெய் அதிகாரிகளுடன்தான் நேரடியாக பேரம் பேசுவதென்று ஜப்பானிய மந்திரி சபை தீர்மானித்தது. சீன மத்திய சர்க்காரின் துருப்புகளும் விமானங்களும் தெற்கேயிருந்து வடக்கே அனுப்பப் பட்டால், நிலைமை மிகவும் மோசமாய்விடுமென்று ஜப்பானிய ஸ்தானாதிபதி சீன சர்க்காரை மிரட்டினார். அம்மாதிரி செய்வது, 1934-ல் ஹோபெய்க்கு மாகாண சுயாட்சியளித்த டாங்கு ஒப்பந்தத்தை மீறியதாகுமென்று அவர்கள் உறுமினர். 13,000 அதிகத் துருப்புகள் ஜப்பானிலிருந்து வந்தன.

உணவுப் பொருட்கள், தொழிலாளர், ராணுவ சப்ளைகள் முதலிய தேவைகள் தேசமெங்கும் சர்க்காருக்கு யுத்தகாலத்தில் சுலபமாய்க் கிடைப்பதற்காக சீன சர்க்கார் உத்தரவு பிறப்பித்தனர். ஆனால், துரத்ருஷ்டவசமாக, வடசீன தளகர்த்தர்களிடையே தீவிர அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. ஸூங்-சே-யுவான்,

தம்முடைய பழைய குணத்தை விடாமல், கிடைத்ததைச் சுருட்டும் மனப்பான்மையுடன் ஜப்பானுடன் சமரஸம் செய்துகொள்ள விரும்பினர். ஆனல், பீகிங் மேயர் சின்-டே-சூன், எதிர்த்து மும்முரமாய்ப் போரிட வேண்டுமென்றார்:

ஜூலை 14: சீன 15 விமானப் படைகளை போர் முனைக்கு அனுப்ப வித்தமாயிற்று. அவர்களுடைய ஆறு பெரிய பட்டாளங்கள் செஞ்சிலுவை வசதிகளுடன் ஹோபெய் நோக்கிச் சென்றன. ஜப்பானியர், பீகிங்-டீண்ட்ஸின் ரயில்வேவை கைப்பற்றுவதில் முனைந்தனர். 29வது ராணுவம், 'சட்டத்துக்கும் அமைதிக்கும்' விரோதியாதலால், அதை வெளியேற்று வீதற்காகவே ஜப்பானியத் துருப்புகள் வட சீனவுக்கு அனுப்பப் படுகின்றன என்று ஜப்பான் ஒரு பிரகடனம் விடுத்தது.

பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ. ஈடன், பிரெஞ்சு, அமெரிக்க சர்க்கார்களை, கீழ்க்கோடி நிலைமையைப்பற்றி தான் கலந்தாலோசித்து வருவதாக, பார்லிமெண்டில் தெரிவித்தார்.

ஜூலை 15, 16: பீகிங்குக்கு தென் மேற்கே, பாடிங்பு என்ற விடத்துக்கு சீன மத்ய சர்க்காரின் துருப்புகள் வந்து, ஹோபெய்க்குள் பிரவேசித்தன.

ஜப்பானியர், 7உ முதல் 16உக்குள், 31 கப்பல்களில் ஒரு லக்ஷம் துருப்புகளை வடசீனவுக்கு அனுப்பி

னர். அவர்களில் ஒரு பகுதியினர் கொரியாவில் வைக்கப் பட்டனர்.

அடுத்த கவ்வலுக்கு முன், ஜப்பான் மீண்டும் சமாஸம் பேசலாயிற்று. கீழ்க்கண்ட கோரிக்கைகளை சீனரிடம் சமர்பித்தனர்.

1. ஹோபெய் மாகாணத்தின் வடபாகத்தையும், சாஹார் மாகாணம் முழுவதையும், கிழக்கு ஹோபெயுடன் சேர்த்து, டீண்ட்ஸினைத் தலைநகராகக்கொண்ட ஒரு புதிய (ஜப்பான் சொற்படி ஆடும்) சுதந்திர நாட்டை ஸ்தாபிப்பது.

2. டீண்ட்ஸினுக்கு அருகிலுள்ள டாங்கு துறை முகத்தை, ஜப்பான், தன் கடற்படைத் தளமாக உபயோகித்துக்கொள்ளும்.

3. பீகிங் பிரதேசத்தை ராணுவ சூன்யமாக்கவேண்டும்.

4. ஜப்பானியரின் பாதுகாப்பிற்காக, பீகிங்கில் ஜப்பானியப் பட்டாளம் அநுமதிக்கப்பட வேண்டும்.

5. இப்பொழுது ஜப்பான் படை திரட்டவேண்டி ஏற்பட்டதற்கான செலவை இந்தப்புதிய நாடுதான் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

டீண்ட்ஸினில் சம்பாஷணைகள் நடந்துவருவதால், இவ்விஷயம் பற்றி ஊர்ஜிதமான தகவல் கிடைக்கவில்லை. ஆனல், இதேபோன்ற கோரிக்கைளை, 'மஞ்சூரிய லாரென்ஸ்' என்று கருதப்படும் ஜெனரல் டாய்ஹாரா என்பவர் 1935-ல் தயாரித்ததும், அவை பலனளிக்காமற் போனதும் ஞாபகமிருக்கலாம்.

ஜுலை 19: ஜப்பானின் கோரிக்கைகளை சீன சர்க்கார் பரிசிலனை செய்தனர். ராணுவத் தலைவர்கள் மகாநாடு கூடி, நான்கு குறைந்தபக்ஷநிபந்தனைகளைத்தயாரித்தனர். இவற்றை ஜப்பான் ஏற்றுக்கொண்டால்தான் சமாதானம் நிலவும். இல்லாவிட்டால், யுத்தம் நடைபெறவேண்டியது தான் என்று அவர்கள் தீர்மானித்தனர். மேற்படி நான்கு குறைந்த பக்ஷ நிபந்தனைகளாவன:

1. சீனுவின் பிரதேச, ஆதிபத்திய உரிமைகளை, எந்த ஒப்பந்தமும் பாதிக்கக்கூடாது.

2. ஹோபெய்-சாஹார் ராஜீயக் கவுன்சிலின் அந்தஸ்தை சீன மத்திய சர்க்கார் நிர்ணயித்துள்ளதற்கு மாருக, சட்ட விரோதமான எந்த விதத்திலும் மாற்றுவது அனுமதிக்கப்பட மாட்டாது.

3. சீன மத்ய சர்க்காரால் நியமிக்கப்பட்டிருக்கும் அதிகாரிகளை வெளியாரின் நிர்ப்பந்தத்தின் பேரில் ஸ்தல அதிகாரிகள் நீக்குவதை சீன சர்க்கார் ஆட்சேபிக்கின்றனர்.

4. 29-வது ராணுவம் இருக்கக்கூடிய இடங்களைப் பற்றி எவ்விதமான நிர்ப்பந்தமு மிருக்கக்கூடாது.

இவற்றுடன்கூட, சியாங்-கே-ஷேக், விளக்கமாய் கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்தார்:

"யுத்தம் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டாலும் சரி, சீனுவின் ஆதிபத்திய உரிமைகளைத் தியாகம் செய்யமுடியாது. யுத்தம் ஆரம்பமாய் விட்டால், முன் வைத்த காலை நாங்கள் பின் வைக்கப் போவதில்லை.

"ஜப்பானுடன் பேரம் பேசுவதற்கு நான்கு குறைந்த பக்ஷ நிபந்தனைகள் அடிப்படையாக ஒப்புக் கொள்ளப் பட வேண்டும்." என்று சியாங்-கே-ஷேக் கூறுகிறார். அவற்றில் மிகவும் முக்கியமானவை, சீனுவுக்குச் சொந்தமான பிரதேசங்களில் ஆக்ரமிப்புக் கூடாதென்ற பிரதேச உரிமையும், சீன சர்க்காரின் ஆதிபத்திய உரிமையுமே.

"சமாதானம் ஏற்படவேண்டுமென்ற கவலை எங்களுக்கு ரொம்பவும் உண்டு. ஆனால், என்னவானாலும் சரி; சமாதானம் இருந்தால் போதும் என்று கருதுபவர்கள் நாங்களல்ல. யுத்தம் ஆரம்பமான பிறகு சமாதானத்துக்கு அழைத்தால், தேசம் அடிமைப் பட்டு சீன மக்கள் அடியோடு அழிக்கப்படுவதற்குத் தான் அது ஹேதுவாகும்.

"ஹோகோசியா ஒத்திகையின் போது ஏற்பட்ட தகராறு திடீரென்று எதிர்பாராத விதமாகத் தோன்றிய சம்பவமல்ல என்பது தெளிவான விஷயம். எங்கள் விஷயத்தில் ஜப்பான் திட்டமான சில நோக்கங்களுடன் தான் இப்படிச் செய்கிறது. ஆகையால் சமாதானம் சுலபத்தில் ஏற்படாது. ஹோகோசியாவை ஜப்பானியத் துருப்புகள் பலவந்தமாய்க் கைப்பற்றுவதை நாங்கள் அனுமதித்தால், எங்களுடைய புராதனத் தலைநகரான பீகிங்கை இழக்க நேரிடும். மஞ்சுகோவுக்கு முக்டென் எப்படியிருந்ததோ, அப்படித்தான் வடசீனுவுக்கு பீகிங்.

ஹோபெயும், சாஹாரும் மஞ்சுகோவிலுள்ள நாலு வடகிழக்கு மாகாணங்களின் கதியையே அடையும்.

"நாங்கள் யுத்தத்தை ஆரம்பிக்கவில்லை. எங்களைத் தாக்குவதைத் தான் எதிர்க்கிறோம்."

ஆனால், சீனாவின் கோரிக்கைகளை ஜப்பானியர் அன்றே நிர்த்தாக்ஷண்யமாய் நிராகரித்து விட்டனர். "கிழக்கோடி நிலைமை மிகவும் மோசமாய் விட்டது. ஹோபெய்க்கு அனுப்பப்பட்டுள்ள 2,00,000 சீன மத்திய சர்க்கார் துருப்புகளும் விமானங்களும் உடனே பழைய இடத்துக்குத் திரும்பி விடவேண்டும்" என்று ஒரு 'இறுதியான' எச்சரிக்கையை ஜப்பானிய ராணுவப் பிரதிநிதி, சீன வெளிநாட்டு மந்திரியிடம் சமர்ப்பித்து விட்டார்.

டீண்ட்ஸினில் பிரிட்டிஷ் உரிமைகளைக் காப்பாற்றுவதற்காக, ஷாங்ஹைக்வான் என்ற துறைமுக நகரிலிருந்து பிரிட்டிஷ் காவற் படைகள் வரவழைக்கப்பட்டன.

ஜுலை 21: இதற்கிடையே, ஜெனரல் ஸுங்-சே-யுவான் துரோகம் செய்து விட்டார். தற்காலிகமாக, ஜப்பானியத் தளபதியுடன் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டார்.

ஜுலை 23: வட சீன அதிகாரிகள் கிழக் கண்டவை உட்பட ஜப்பானின் முக்கியமான கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டு விட்டதாக, ஜப்பானிய யுத்த இலாகா ஒரு அறிக்கை விடுத்தது:

ஜப்பான் விரும்பாத எல்லா சீன அதிகாரிகளும் வேலையிலிருந்து நீக்கப்படுவார்கள்.

ஜப்பானுக்கு விரோதமான எல்லா கிளர்ச்சிகளும் அடக்கப்படும்.

சீனப் பள்ளிக்கூடங்களில் வைக்கும் பாட புத்தகங்களை ஜப்பானிய அதிகாரிகள் தணிக்கை பார்ப்பார்கள்.

ஆனல், வட சீனுவிலிருந்த சீனத் துருப்புகளும், தளகர்த்தர்களும் ஜப்பானிய ஆக்ரமிப்புக்குப் பணியத் தயாராயில்லை. ஜப்பானியத் துருப்புகள் வட சீனுவிலிருந்து வாபஸ் பெறப்பட்டால், தங்கள் அனுமதியின் பேரில் ஸ்தல சர்க்காருடன் ஜப்பான் ஒப்பந்தம் செய்து கொள்ளலாமென்றுகூட சீன மத்திய சர்க்கார் கூறிப் பார்த்தனர். இதற்கு ஜப்பான் சம்மதிக்கவில்லை. போரை மும்முரமாய் நடத்த பெங்-யு-சியாங் என்ற புது தளபதியை அனுப்பினர். வடக்கே ஜப்பானியரை எதிர்க்காமலிருந்ததுடன், சீன சர்க்காரை, ஸூங் ஏமாற்றினுரென்ற செய்தி 23உ சியாங்-கே-ஷேக்குக்கு கிடைத்தது.

ஜூலை 26 : பீகிங்குக்கும் டீண்ட்ஸினுக்குமிடையே பிரமாதமான போர் நடைபெற்றது. பீகிங்கை ஜப்பானியர் சூழ்ந்து கொண்டனர்.

உலகத்தின் பல பாகங்களிலுள்ள சீனர், தாங்கள் பண உதவி அனுப்புவதாகவும், ஜப்பானை விளாச வேண்டுமென்றும் தந்தி யனுப்பினர்.

ஜுலை 28: ஜப்பான், மற்றொரு 'இறுதியான' எச்சரிக்கையைவிடுத்தனர். ஸுங்-சே-யுவான் ஒப்புக்கொண்ட நிபந்தனைகளை சீன மத்திய சர்க்கார் நிராகரித்தது கண்டு சீற்றமடைந்தனர். அவர்களுடைய எச்சரிக்கையாவது:

சீனத் துருப்புகள், அக்கிரமமாய், சட்டத்துக்கு விரோதமான காரியங்களைச் செய்வதாகக் கூறி அவற்றைக் கண்டித்து, ஜப்பானிய ராணுவ அதிகாரிகள் ஒரு அறிக்கை விடுத்தனர்.

சீனத் துருப்புகள் ஹோபெய் மாகாணத்துக்கு அனுப்பப்படுவது வடசீனவுடன் செய்துகொண்ட மாகாண சுயாட்சி ஒப்பந்தத்தை (ஹோமெட்ஸு) மீறியதாகுமென்று அறிக்கை கூறுகிறது.

"சமாதானமாய் தகராறைத் தீர்த்துக்கொள்வதற்கு எடுத்துக்கொண்ட எல்லா முயற்சிகளையும் செய்து பார்த்தாய் விட்டது. ஆகையால் சீனத் துருப்புகளை உறுதியுடன் தண்டிக்கவேண்டியது தவிர வேறுவழியில்லை" என்று அறிக்கை கூறுகிறது.

மேற்கொண்டு அறிக்கை கூறுகிறது:

"ஜப்பானுக்கு ஆத்திரமூட்டுமாறு நடந்து கொள்ளும் சீனத் துருப்புகள் மட்டுந்தான் தண்டிக்கப்படும். வட சீனவிலிருக்கும் பத்துக் கோடி சீனரைத் தாக்க வேண்டுமென்ற உத்தேசம் ஜப்பானுக்கு இல்லை"

ஜுலை 29: ஸுங்-சே-யுவான் தன் துரோகம் வெளியாகவே பீகிங்கிலிருந்து ஓட்டமெடுத்து,

பாடிங்பு போனர். சாங்-வே-சுங் என்பவர் அவருக்குப் பதிலாக தளபதியாக நியமனம் பெற்ருர். பீகிங் அருகில் சீனருக்குப் படு தோல்வி கிடைத்தது.

ஜெனரல் ஸூங்-சே-யுவான் துரோகத்தைப் பற்றி, சியாங்-கே-ஷேக் கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்தார்:

“பீகிங்கில் ஏற்பட்டிருக்கும் வருந்தத்தக்க நிலைமைக்கு நான் மட்டுமே ஜவாப்தாரி. 19வ யன்று நான் வெளியிட்ட நான்கு குறைந்த பக்ஷ நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டாலன்றி, ஜப்பானுடன் பேரம் பேசுவது சாத்தியமில்லை.

“பீகிங்கில், 29-வது ராணுவத்தில் எதிர்ப்பு நிலை குலைந்துவிட்டது. ஜெனரல் ஸூங்-சே-யுவான், அங்கிருந்து புறப்பட்டு விட்டார். லுகோசியா சம்பவத்திற்குப் பிறகு பாடி-குக்குப் போகுமாறு அவருக்கு உத்தரவு அனுப்பினேன். ஆனல், அவர் டீண்ட்ஸினிலும் பீகிங்கிலுமிருந்துகொண்டு, ஜப்பானின் அநீதி நிறைந்த கோரிக்கைகளைப்பற்றி, முடிவற்ற பேரங்கள் நடைபெறுவதற்கு இடமளித்துக் கொண்டிருந்தார்.

“பிறகு ஜெனரல் ஸூங்-சே-யுவானின் வேண்டுகோளின் பேரில், ஜப்பானியர் முன்னேற்றத்தை சீன மத்திய சர்க்காரின் துருப்புகள் தடுத்து நிறுத்தின. ஆகையால், போரிடுவதென்று ஸூங் தீர்மானித்தபோது கட்டுப்பாடாக எதிர்ப்பதற்கு வேண்டிய ஸந்நாஹங்கள் செய்யப்பட்டிருக்கவில்லை.

"பீகிங் எதிர்ப்பு நிலை குலைந்ததைக் கண்டு நான் மனச்சோர்வடையவில்லை. அது, ஒழுங்காய் நடைபெற்ற யுத்தத்தில் கிடைத்த தோல்வியல்ல. ராணுவ முறைப் படி பார்த்தால், இது அவ்வளவு முக்கியமானதுமல்ல.

"சீன மக்கள் சர்க்காரிடம் வைத்திருக்கும் உறுதி யான நம்பிக்கை வீண் போகாது என்பதை இனி நடை பெற விருக்கும் சம்பவங்கள் நிரூபிக்கப் போகின்றன.

"தான் ஒரு தனி நாடாக இருப்பதற்கும், ஆதிபத்ய உரிமைகளுக்காகவும் போர் செய்வதற்கு, சீனு இப் பொழுது தயாராயிருக்கிறது.

"ஸ்தல அதிகாரிகளுடன் ஒப்பந்தம் செய்துகொள்வ தென்ற பேச்சுக்கே இனி இடமில்லை.

"இது ஒரு தேசியப் பிரச்னையாகி விட்டது. மத் திய சர்க்காருடன்தான் ஜப்பான் இந்த விவகாரத்தைத் தீர்த்துக் கொள்ளவேண்டும்.

"தேச மக்கள் தங்கள் முழு ஆள் பலத்தையும், இதர வசதிகளையும், இந்த தேசியப் போராட்டத்துக்கு கொடுத்துதவவேண்டுமென்று வற்புறுத்துகிறேன்.

"கவுரவத்துடன் கூடிய நியாயமும், சமாதானமும் ஏற்படவேண்டுமானுல், சீனு, போர்க்களத்தில் இறுதி யான வெற்றியை முதலில் பெற்ருக வேண்டும். அது ஒன்றுதான் நமக்குள்ள வழி."

வட சீனுவில் பிரிட்டிஷ் பிரஜைகளின் பந்தோபஸ்து உத்தரவாதம் செய்யப்பட்டிருப்பதாக, ஸ்ரீ. ஈடன் ஜூலை

29உ காமன்ஸ் சபையில் அறிவித்தார். சீன-ஜப்பான் தகராறு சங்கத்துக்கு வருமா என்று எதிர்க்கக்ஷித் தலைவர் மேஜர் ஆட்லி கேட்டதற்கு,

"நிலைமை மிகவும் மோசமாகத் தானிருக்கிறது. ஆனால், இந்தப் பிரச்னையை சங்கத்தின்முன் கொண்டுவர வேண்டுமென்று எந்த சர்க்காரும் கேட்கவில்லை. ஜப்பானும் அமெரிக்காவும் சங்கத்தில் அங்கத்தினர்களாயில்லை. ஆகையால், இப்பொழுது இவ்விஷயமாய் அக்ஷதை போட்டுக்கொள்ள பிரிட்டன் தயாராயில்லை" என்று ஸ்ரீ. ஈடன் பதிலளித்து விட்டார்.

## ஆகஸ்ட்

1உ: சீனவெங்கும் பகிஷ்கார இயக்கம் வலுத்தது. வட சீனவில் ஒரு ஜப்பானியத் துருப்பு ரயில் கவிழ்க்கப்பட்டது. ஆனால், அவர்களுடைய துருப்புகள் பலமாய்த் தாக்கவே சீனர் பிகிங்குக்கு பின்வாங்க வேண்டியதாயிற்று.

2உ: சீனவெங்கும் ஜப்பானிய ஸ்தானீக காரியாலயங்களும் வர்த்தக ஸ்தாபனங்களும் மூடப்பட்டன. ஷாங்ஹாயில், ஜப்பானிய நெசவாலைகள் பட்டாள விடுதிகளாயின. ஜப்பானில், 1,60,000 ரிசர்வ் துருப்புகள் ராணுவ சேவைக்கு அழைக்கப்பட்டது.

ஷாங்ஹாயில் ஸோவியத் ஸ்தானீகர் காரியலாயத்தை ஜப்பானியர் முற்றுகையிட்டுப் பல தஸ்தவேஜிகளைக் கைப்பற்றினர். ரஷ்யா நஷ்ட ஈடு கேட்டது.

களுக்கும் இந்த முற்றுகைக்கும் சம்பந்தமில்லை என்று ஜப்பானிய சர்க்கார் பதிலளித்து விட்டனர்.

3௳: ஜப்பானிலிருந்து சீனரெல்லோரும் 5,000 மாணவர்கள் உட்பட தாய்நாடு திரும்பினர். சீன தலைநகராகிய நான்கிங்கிலிருந்து குழந்தைகளெல்லாம் வேறிடத்துக்கு பந்தோபஸ்துக்காக அனுப்பப்பட்டன.

4௳: அமெரிக்காவிலிருந்து சியாங்-கே-ஷேக், விமானிகளை வரவழைத்தார். ஜப்பான், சீன யுத்தத்துக்காக 24 கோடி பவுன் அனுமதித்தது.

டீண்ட்ஸினில் ரஷ்ய, ஆஸ்டிரிய ஸ்தானீகர் காரியாலயங்களைப் பிடித்து, நகரை, ஜப்பானியர் பூர்ணமாய் தங்கள் வசமாக்கிக் கொண்டனர்.

5௳: "பொதுவுடமையை எதிர்த்து ஒருமுகமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்வதில் சீனா ஒத்துழைக்க வேண்டுமென்று ஜப்பான் கேட்கிறது. இதுதான் ஜப்பானியக் கோரிக்கைகளில் மிகவும் முக்கியமானது. சீனாவிலுள்ள தீவிரவாதிகள் குறிப்பாக பொதுவுடமைக்காரர்கள் மீது, பலனேற்படக்கூடிய முறையில் ஆதிக்கம் ஏற்படுமானால், சீன ஜப்பானிய ஒத்துழைப்பு சாத்தியமாகும் என்று நான் நம்புகிறேன். வட சீனத் தகராறை ஸ்தல ஒப்பந்தத்தின்மூலம் தீர்த்துக் கொள்ள ஜப்பானிய சர்க்கார் விரும்புகின்றனர். அத்துடன் கூடவே, சீன-ஜப்பானிய உறவுகளை அடிப்படையாகத் திருப்பியமைக்கவும் அவர்கள் விரும்புகின்றனர்."

என்று ஜப்பானிய வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ. ஹிரோடா பார்லிமெண்டில் தெரிவித்தார்.

நான்கிங்கிலிருந்த ஜப்பானிய ஸ்தானாதிபதி ஸ்ரீ. காவாகோ, மீண்டும் சமரஸம் பேசலானார். பிகிங்-டீண்ட்ஸின் பிரதேசம் ராணுவ சூன்யமாக வேண்டுமென்றும், மஞ்சுகோ சர்க்காரை சீனா அங்கீகரிக்க வேண்டுமென்றும் அவர், மேலே கூறியுள்ள நிபந்தனைகளுடன்கூடச் சேர்த்து வற்புறுத்தினார்.

"சமாதானமாகவே தகராறைத் தீர்த்துக்கொள்ள சீனா விரும்புகிறது. அதற்காக சாத்தியமான எல்லா வழிகளையும் பார்த்து விடவும் தயாராயிருக்கிறது. ஆனால், திட்டமான ஒரு சமரஸம் ஏற்பட்டு, அது கிரமமாக அனுஷ்டானத்துக்கு வரும் வரையில் தற்காப்பு ஏற்பாடுகள் நீடித்துச் செய்யப்பட்டுதான் வரும்." என்று சீன சர்க்கார் ஆகஸ்ட் 5உ அறிக்கை விட்டனர்.

மறுநாள், ஜப்பானிய பார்லிமெண்டில் கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

"ஜப்பானுக்கு எதிராகச் சீனா அனுஷ்டிக்கும் கொள்கை, ஸர்வதேச சமாதானத்துக்கு பங்கம் விளைவிப்பதாக இருக்கிறது. ஆகையால், அந்தக் கொள்கையை நிராகரிப்பதன் மூலம், கிழக்கு ஆசியாவில் நிரந்தரமான சமாதானத்தை நிலைநாட்ட வேண்டுமென்று சர்க்காரை இந்த சபை வற்புறுத்துகிறது.

"ஜப்பான் நாடு வேண்டுமென்று கேட்கவில்லை; ஒத்துழைப்பையே நாடுகிறது. சீனாதான், கன வேகத்தில் யுத்த ஏற்பாடுகளைச் செய்து வருகிறது" என்று பார்லிமெண்ட் தீர்மானம் குற்றம் சாட்டுகிறது.

ஜப்பானியத் தளபதியான ஜெனரல் ஸுகியாமா, பார்லிமெண்டில் பின்வருமாறு தெரிவித்தார்:

"பீகிங்-டீண்ட்ஸின் பிரதேசத்துக்கு ஆபத்து விளைவிக்க வேண்டுமென்று சீனத் துருப்புகள் துணிந்தால், ஜப்பான், தன் அனுக்ரமிப்புக் கொள்கையைக் கைவிட வேண்டிய நிர்ப்பந்தமான நிலைமை ஏற்படும்."

வட சீனப் படையெடுப்பிற்காக, 41 கோடி யென் உபமான்யம் அனுமதிக்கப்பட்டது.

7, 8, 9 தேதிகள்: வட சீனாவில் ஜப்பானியர் கடுமையாய்த் தாக்கினர். 9உ யன்று பீகிங்குக்குள் பிரவேசித்தனர்.

அன்றைய தினமே, ஜப்பான், வட சீனாவில் வெற்றி பூர்த்தியாவது நிச்சயமென்று தெரிந்து, சீன மக்களில் பாதிப்பேருக்கு மேல் வசிக்கும் யாங்ட்ஸீ பள்ளத்தாக்கு முகவாய் போன்ற ஷாங்ஹாய்மீது போர் தொடுக்கலாயினர். ஷாங்ஹாய்க்குத் தென்புறம் ஹூஞ்ஜ்கா என்ற விடத்திலிருந்த விமான நிலையத்தை ஜப்பானிய விமானங்கள் தாக்கின.

12உ: ஷாங்ஹாய்க்கு 12 ஜப்பானிய யுத்தக் கப்பல்கள் வந்துவிட்டன. ஊஸுங்கில் ஜப்பானியத் துருப்புகள் வந்திறங்கின.

பிகிங்குக்கு வட மேற்கே, நான்கோ என்ற நகர் மீது ஜப்பானிய விமானங்கள் அக்கினி குண்டுகளைப் போட்டு அதை எரித்தன.

13உ: ஷாங்ஹாய் முற்றுகை ஆரம்பம். மீண்டுமொரு முறை நடைபெற்ற சமரஸ முயற்சிகள் தோற்றன. நகரின் வடபாகத்திலிருந்து பிரஜைகள் வெளியேறினர். 1932 ஒப்பந்தப்படி துருப்புகள் இருக்கக் கூடாதென்று ஒப்புக் கொள்ளப்பட்ட ராணுவ சூன்யப் பிரதேசத்தில் ஜப்பான் துருப்புகளைக் கொண்டு வந்து குவிக்க வாரம்பித்தது.

15உ: வெளி நாட்டினர், விசேஷ உரிமை பெற்று வசித்துவரும் ஸர்வதேசக் குடியேற்றம் தாக்கப்பட்டது. 200 பேர் மரணமடைந்தனர். பிரெஞ்சு குடியேற்றத்தில் மட்டும் 456 பேர் பலியாயினர்; 828 பேர்கள் காயமடைந்தனர்.

16உ: ஸிங்கப்பூரிலுள்ள பஞ்சாப் ஸைன்யம் சீனு போக வேண்டுமென்று பிரிட்டன் உத்தரவு போட்டது.

ஷாங்ஹாயில் மிகவும் கடுமையான யுத்தம் நடைபெற்றது.

17உ: சீனுவின் தலை நகராகிய நான்கிங்மீது ஜப்பானிய விமானங்கள் குண்டுகளை வருஷித்தன. இரவெல்லாம் ஷாங்ஹாயில் யுத்தம் நடைபெற்றது.

18உ: "சீன-ஜப்பானியப் போராட்டத்தில், போரிடுகிறவர்களின் நிலைமை கொஞ்சமும் தாரதம்யமில்லாமல் இருக்

கிறது. நடுநிலைமைச் சட்டம் பிரயோகிக்கப் பட்டால், ஜப்பானை அமெரிக்கா ஆதரிப்பதாக ஏற்படும். அதைச் செய்ய நாங்கள் தயாராயில்லை.'' என்று அமெரிக்க வர்த்தக மந்திரி ரோப்பர், வாஷிங்டனில் தெரிவித்தார்.

ஷாங்ஹாயில், துருப்புகளைக் கொண்டுவந்து அமைதியை ஜப்பான் குலைப்பதை பிரிட்டன் ஆட்சேபித்தது. "1927-ல் நீங்கள் ஷாங்ஹாயில் செய்ததையே இப்பொழுது நாங்கள் அனுஷ்டிக்கிறோம்.'' என்று ஜப்பானிய வெளிநாட்டு மந்திரி பதிலளித்தார்.

°

19உ: ஷாங்ஹாய் அருகில் சீனு, ஆறு ஜப்பானியக் கப்பல்களை மூழ்கடித்தது. ஷாங்ஹாயில், சில பெரிய பிரிட்டிஷ் வர்த்தக ஸ்தாபனங்களை ஜப்பான் பிடித்தது. ஜப்பானியக் கிடங்குகளையும் வர்த்தக ஸ்தாபனங்களையும் சீனர் அழித்துவிட்டனர். ஜப்பானுக்கு ஏராளமான சேதம். பல கோடி பவுன்கள் நஷ்டம்.

22உ: கிழக்கு ஷாங்ஹாயில் இரண்டு சதுரமைல் விஸ்தீர்ணம் தீப்பிடித்தது. 30 ஜப்பானிய விமானங்கள் சுட்டு வீழ்த்தப்பட்டன. வட சீனுவில், பீகிங் அருகில் மீண்டும் யுத்தம்.

23உ: ஷாங்ஹாய் அருகில் 50,000 ஜப்பானியத் துருப்புகள் இறக்குமதி. ஸெயூகாய், மின்ஸீடோ ஆகிய இரண்டு ராஜீயக் கக்ஷிகளும் ஜப்பானின் இயக்கத்துக்கு பூர்ண ஆதரவளித்தன.

யுத்தம் சீனு முழுமைக்கும் பாவி இரண்டு வருஷம் நடைபெறக்கூடும் என்று "ஜப்பான் டைம்ஸ்" எழுதியது.

24உ: ஜப்பானிய ஆக்கிரமிப்புக்கு ஜெர்மன் ஆதரவு. ரஷ்யாவின் பெயரை வம்புக்கு இழுத்து, "பொதுவுடமை ஆபத்துகளை ஒழிப்பதையே நோக்கமாய்க் கொண்ட இந்தப் போராட்டத்தை ஜெர்மனி ஆதரிப்பதாக "ஆங்கிரிப்" என்ற நாஜிப் பத்திரிகை கூறியது.

25உ: 1000 மைல் நீளத்துக்கு வடக்கே ஸிங்டாவிலிருந்து தெற்கே காண்டன் வரை சினக் கடற்கரையை ஜப்பானிய யுத்தக் கப்பல்கள் முற்றுகையிடத் தொடங்கின. ஆயுதங்கள் வருகின்றனவா என்று சோதனைபோட அந்நியக் கப்பல்களும் இணங்கவேண்டும் என்று ஜப்பான் அறிவித்தது. ஷாங்ஹாய் அருகில், ஊஸங் பிரதேசத்தில் இறங்க முயன்ற பல்லாயிரம் ஜப்பானியத் துருப்புகளை சினர் அழித்தனர்.

26உ: பீகிங்குக்கு வடமேற்கே நான்கோ கணவாயில் 20,000 சீனத் துருப்புகள் சிக்குண்டன. உட்புற மங்கோலிய சைன்யம் ஜப்பானுக்கு உதவியாக வந்தது. 'மங்கூகோ' என்ற பெயருடன் அங்கே ஒரு 'சுதந்திர' நாட்டை சிருஷ்டிப்பதாக ஜப்பானியர் வாக்களித்தனர்.

ஷாங்ஹாயில் மட்டும் யாங்குடேவ் என்ற ஜில்லாவில், பிரிட்டனுக்கு 18 கோடி பவுன் நஷ்டம் ஏற்பட்டதாக லண்டன் "டைம்ஸ்" எழுதியது.

27உ: நான்கோவில் ஜப்பானியர் விஷ வாயுவைப் பிரயோகித்தனர். 89-வது சீன ஸைன்யத்தைச் சேர்ந்த தீரர்கள் 18 நாள் எதிர்த்த பின் தோற்றனர்.

நான்கிங்கிலிருந்த பிரிட்டிஷ் ஸ்தானிகர் ஸர். நாட்ச்புல் ஹ்யுகேஸன் ஷாங்ஹாய்க்கு மோட்டாரில் போகையில், ஜப்பானிய விமானங்கள் மெஷீன் கன் பிரயோகம் செய்து அவரைக் குற்றுயிராக்கி விட்டன.

தங்களுக்கு ஷாங்ஹாயில் ஏற்படும் நஷ்டங்களுக்கு இரு சாராருமே ஜவாப்தாரி என்று அமெரிக்க வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ. கார்டெல் ஹல் ஒரு வழவழா எச்சரிக்கையை அனுப்பினர்.

28உ: சியாங்-கே-ஷேக்கைக் கொலை செய்யப் பார்த்த ஜப்பானிய விமானங்கள் தவறுதலாக, ஸர் ஹ்யுகெஸனைச் சுட்டுவிட்டதாகத் தெரிந்தது.

29உ: சங்கத்துக்கு சீனு ஒரு அறிக்கையை அனுப்பியது. ஆனுல், எவ்வித உதவியையும் கோரவில்லை. 1931-ல் மஞ்சூரியத் தகராறின்போது நியமிக்கப்பட்ட ஆலோசனைக் கமிட்டியிடம் யாதாஸ்து சமர்ப்பிக்கப்பட வேண்டும் என்றும், தங்களது பத்து வருஷத்திய புனர் நிர்மாண வேலை ஜப்பானிய ஆக்கிரமிப்பால் தடைப்பட்டதாகவும் அந்த அறிக்கை கூறியது.

ஆக. 30: சீனுவின் நிலைமையை மேலும் விளக்கி, மார்ஷல் சியாங்-கே-ஷேக் கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்தார்:

"சீனு சம்பந்தமாகவும், உலக சம்பந்தமாகவும் ஜப்பான் இப்பொழுது கொண்டிருக்கும் அசாத்தியமான நிலைமையிலிருந்து எப்பொழுது பின் வாங்குவதாகத் தீர்மானிக்கிறதோ, அப்பொழுதுதான், எந்த நிபந்தனைகளின் பேரில் போரை நிறுத்த சீனு சம்மதிக்கும் என்பதைக் கூறமுடியும்.

"போர், தொடுப்பதாக முறைப்படி முன்னதாகவே அறிவிக்கப்படாத இந்த யுத்தத்தில், வெளிநாடுகள் குறுக்கிட வேண்டியது சீனுவுக்காக மட்டுமின்றி, உலக சமாதானத்துக்கு மிகவும் அவசியமானது.

"ஆசியாக் கண்டத்தில் ஒரு பெரிய ஏகாதிபத்தியத்தை ஸ்தாபிக்க வேண்டுமென்ற நோக்கத்துடனேயே ஜப்பான் போரில் இறங்கி யிருக்கிறது என்பது தெளிவான உண்மை.

"ஆகையால், சீனு அடியோடு அழிந்து போகாமல் தடுக்கவும், நியாயமான வர்த்தகம் நடைபெறுவதை உத்தரவாதம் செய்யவும், நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளவேண்டிய பொறுப்பு, யாருடைய தோள் மீதாவது விழவேண்டும் என்பது சந்தேகமறத் தெளிவாயிருக்கிறது."

## செப்டம்பர்

3: 11·9 கோடி பவுன் கடன் வாங்க ஜப்பான் தீர்மானித்தது.

ஷாங்ஹாயில் கடுமையான பீரங்கி யுத்தம் நடைபெற்றது.

செப். 4: ஜெர்மனி-ஜப்பான் பொதுவுடைமை எதிர்ப்புக் கொள்கையை விஸ்தரித்து, அதைப் பூராவுமாக நடத்திக் காண்பிப்பது ஜப்பானுக்கு அவசியமாய் விட்டதாக ஜப்பானில் செல்வாக்குள்ளவர்கள் ஒரு பிரகடனம் விட்டனர்.

செப். 6: சீன கடற்கரை முழுவதையும் தாங்கள் முற்றுகை போடப் போவதாகவும், ஆயுதங்களை சீனுவுக்காக ஏற்றிவரும் கப்பல்களை விடப்போவதில்லை என்றும் ஜப்பானியர் எச்சரித்தனர். 150 ரஷ்ய விமானங்கள் சீனுவுக்கு வருவதாக ஜப்பானுக்கு செய்தி கிடைத்ததாம்.

சீனரை எதிர்க்க ஜப்பான் அனுப்பிய ஒரு மஞ்சுகோ சைன்யம், சீன சர்க்காரிடம் விசுவாசம் கூறி, அவர்களுடைய படையுடன் ஐக்கியமாய் விட்டது.

தன் பிரதேசத்தின்மீது ஜப்பான் ஆக்கிரமித்திருப்பதாகக் குற்றம் சாட்டி, ஸர்வதேச சங்கத்துக்கு முறைப்படி சீன சர்க்கார் மனு அனுப்பினர்.

செப். 9: யுத்தத்தைச் சரிவர நடத்த ஜப்பானிய சர்க்கார் ஸர்வாதிகாரத்தை ஸ்வீகரித்துக் கொண்டனர்.

ஊஸங் அருகில் ஒரு சீனப் பட்டாளம் கடைசி வரை எதிர்த்து நின்றது. ஒரு ஆள் மிஞ்சிய வரை ஜப்பானிய சோல்ஜர்கள் கப்பல்களிலிருந்து நிர்ப்பயமாய் இறங்கமுடியவில்லை.

ஹிபூகேஸன் சம்பவத்துக்கு ஜப்பான் பொறுப் பேற்கவில்லை என்று கூறப்பட்டது.

"ஜப்பானுடன் நாம் செய்துகொண்டிருக்கும் ஒப்பந்தத் தின் நோக்கம் இரு நாடுகளும் தோளோடு தோள் கொடுத்து நின்று, நாகரீகம் தாக்கப்படுவதை தடைசெய்வதுதான்" என்று ராஜி மகாநாட்டில் ஹிட்லர் முழங்கினர்.

செப். 9: 61 ஜப்பானிய விமானங்கள் சமாப்தி யாயின. ஒரு பிரிட்டிஷ் கப்பலை ஜப்பானியர் சோதனை போட்டனர்.

செப். 10:—சீனுவிலுள்ள அமெரிக்கரெல்லோரும் வாபஸாய்விடவேண்டுமென்று சில தினங்களுக்குமுன் ரூஸ்வெல்ட் தன் கொள்கையை மாற்றிக்கொண்டு விட்டார். 'தங்கள் துருப்புகளேயோ யுத்தக் கப்பல்களையோ சீனுவி லிருந்து வாபஸ் வாங்கும் உத்தேசம் அமெரிக்க சர்க்கா ருக்குக் கிடையாது' என்று அமெரிக்க வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ. கார்டெல் ஹல் தெரிவித்தார்.

சீனரின் எதிர்ப்புக் கண்டு ஜப்பான் ஆச்சரிய மடைந்தது. "சீன யுத்தம் இவ்வருஷம் முடிவடையு மென்று நான் நினைக்கவில்லை. யுத்தம் நீடித்து நடை பெறும் என்பதை எதிர்நோக்கியே 1938 பட்ஜெட் தயாரிக்கப்படவேண்டும்" என்று ஜப்பானிய முதல் மந்திரி ஸ்ரீ. கொனேய் தெரிவித்தார்.

செப்.2:—சீன-ரஷ்ய அநாக்கிரமிப்பு உடன்படிக் கையில் இரகசிய ஷரத்துக்கள் இல்லையென்று டோகி

யோவிலுள்ள சீன ஸ்தானீகர் ஜப்பானிய சர்க்காரிடம் தெரிவித்தார். ஜப்பானுடனும் அத்தகைய உடன்படிக்கையைச் செய்துகொள்ளத் தாங்கள் தயார் என்றும் கூறினார். ஆனால், ஜப்பானிய முதலாளிக் கக்ஷி சீனசர்க்காரை அடியோடு நிர்மூலமாக்குவதுதான் ஜப்பானின் இலட்சியமாயிருக்கவேண்டுமென்று கூக்குரலிட்டது.

பல நகரங்கள்மீது ஜப்பானிய விமானங்கள் படையெடுத்து குண்டுகளைப் போட்டன.

பத்து கோடி டாலர் பெறுமான வெள்ளியை சீன சர்க்கார் ஹாங்காங்குக்குக் கொண்டுபோய் விட்டனர்.

செப்.11.—சீனுவின் மனு சங்கத்துக்கு கிடைத்தது. சங்க உடன்படிக்கையின் 3, 10, 17, ஷரத்துகளின் கீழ் அது சமர்ப்பிக்கப்பட்டது.

சீனு மீது ஜப்பான் படையெடுத்திருப்பதற்கு உண்மையான காரணம் சீனுவை ஜெயித்து, ஆசியாவில் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டிக்கொண்டு பஸிபிக் பிரதேசத்தில் எஜமானுய் இருக்கவேண்டுமென்ற கொள்கையே. ஜப்பானிய ஆக்கிரமிப்பினுல் உலக சமாதானத்துக்கே பேராபத்து ஏற்பட்டிருக்கிறது. சீனுவில் ஜப்பானுடைய அட்டூழிய ஆக்கிமிப்புப் போர் நீடிப்பதால் ஏற்பட்டுவரும் சகிக்க முடியாத நிலைமையை முடிவுக்குக் கொண்டுவருவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை சங்கம் எடுத்துக்கொள்ளுமென்று சீன சர்க்காரும் சீனமக்களும் நம்புகின்றனர். சங்கத்தில் அங்கத்தினர்களாயில்லாத, ஆனல் சீனுவில் விசேஷ உரிமைகள்

பெற்றுள்ள, அமெரிக்கா போன்ற நாடுகள் ஜப்பானிய ஆக்கிரமிப்பைத் தடுத்து சமாதானத்தை நிலைநாட்டும் பொதுப் படையான முயற்சிகளுக்கு உதவியளிக்கும் என்று அவர்கள் நம்புகின்றனர்.

'சங்கத்தில் அங்கத்தினர்களாயுள்ள நாடுகளின் பிரதேச உரிமைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் சங்க உடன்படிக்கையின் 10-வது ஷரத்துப்படி சீனுமீது படையெடுத்திருக்கும் ஜப்பான் விஷயத்தில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் படவேண்டும் என்பது தெளிவான விஷயம்.

யுத்தம் ஏற்பட்டால் அல்லது யுத்த ஆபத்து தோன்றினுல், அது சங்கம் பூராவையுமே பாதிக்கும் பிரச்னையாகிறபடியால், சங்கம், யுத்தமென்றும் பலனளிக்கக்கூடியதென்றும் கருதும் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படவேண்டுமென்று கூறும் 11வது ஷரத்தின் கீழும் இது வருகிறது.

சங்கத்தில் அங்கத்தினர்களா யில்லாத நாடுகளுக்கும் சங்க நாடுகளுக்கும் தகராறு ஏற்பட்டால், எப்படி நடந்து கொள்வது என்பதைப்பற்றி விவரிக்கும் 17வது ஷரத்துப் படியும் நடவடிக்கை எடுக்கவேண்டும்.

''வெற்றி வெறி கொண்ட ஜப்பான் ஈவிரக்கமின்றிப் படுகொலை செய்வதிலும் வேண்டுமென்றே நாசமாக்குவதிலும் முனைந்திருக்கிறது. இந்த விவகாரத்தில் 45 கோடி ஜனங்களின் உயிர் சிக்குண்டிருக்கிறது. நாகரிகம் மட்டுமின்றி உலக சமாதானமே இதில் ஊசலாடுகிறது.'' என்று மனுவுடன் இருக்கும் விளக்கம் கூறுகிறது.

இதுதான் சீன விக்ஞாபனத்தின் சாராம்சம்.

சங்கத்தில் அமெரிக்கா மெம்பராயில்லாத போதிலும் அதன் நடவடிக்கைகளை ஜாக்கிரதையாய் கவனித்து வருமாறு ஜினீவாவிலுள்ள அமெரிக்க ஸ்தானீகர் கேட்கப்பட்டார்.

"சீன - ஜப்பானியத் தகராறு ஏதாவது ஏற்பட்டால், அதை நேரில் சீனவுடன் தீர்த்துக்கொள்வதுதான் ஜப்பானின் பரம்பரையான கொள்கை. இந்தக் கொள்கையில் எதுவும் மாறுதல் இருக்குமென்று நான் நினைக்கவில்லை. 1932 தகராறைத் தீர்ப்பதற்கு உதவிய வல்லரசுகள் இப்பொழுது ஒத்துழைப்பதாகக் கூறினல், ஜப்பான் அதை நிராகரித்துத்தான் தீரும் என்பதில்லை." என்று சீனவிலுள்ள ஜப்பானிய ஸ்தானீகர் கவாகோ தன் சொந்த அபிப்ராயத்தைத் தெரிவித்தார்.

ஷாங்ஹாய் ராணுவ நிலைமையில் முக்கியமான மாறுதல் இல்லை. வட சீனவில் டீண்ட்ஸின் - பூகோ அருகில் ஜப்பானியர் முன்னேறினர்.

செப்: 13:—இரண்டு நாடுகளுக்குமிடையே சமரஸம் செய்துவைக்க ஜெர்மனி முயற்சிப்பதாக ஒரு பிரெஞ்சு பாஸிஸ்ட் பத்திரிகை அறிவித்தது. சங்கம் திட்டமான நடவடிக்கை எடுக்கவொட்டாமல் வீண் காலங் கடத்துவதற்கு அனுசரணையாக இந்த ஹேஷ்யம் கிளம்பியது.

சீனர், வடசீனவிலும், ஷாங்ஹாய்க்கு வடகிழக்கிலிருந்தும் பின்வாங்க ஆரம்பித்தனர்.

ஜப்பானியரின் மிருகத்தனத்துக்கு எல்லையில்லை.

செப். 14:—அமெரிக்கா மீண்டும் உறுதியற்றபோக்கை அனுஷ்டிக்க வாரம்பித்தது. அமெரிக்க சர்க்காருக்குச் சொந்தமாயுள்ள வர்த்தகக் கப்பல்கள் சீனுவுக்கோ அல்லது ஜப்பானுக்கோ ஆயுதங்களையும் தோட்டாக்களையும் ஏற்றிச் செல்லக் கூடாதென்று தலைவர் ரூஸ்வெல்ட் தடை யுத்தரவு பிறப்பித்தார். தனிப்பட்டவர்களுக்குச் சொந்தமான அமெரிக்கக் கப்பல்கள் தங்கள் சொந்தப் பொறுப்பின் பேரில்தான் கீழ்க்கோடிக்குப் போகலாம் என்று அவர் தெளிவுபட எச்சரித்து விட்டார். அதன் விளைவாக, "பால்டிமோர்" என்ற அமெரிக்க சர்க்கார் கப்பலில் சென்ற 19 விமானங்கள் திரும்பப் பெறப்பட்டன.

தெற்கு சீனுவில் காண்டனையும் இரண்டு கோட்டைகளையும் ஜப்பான் தாக்கியது. பணக்காரர்கள் சர்க்காருடன் ஒத்துழைக்க வேண்டுமென்றும், மூலதனத்தின்மீது ஆதிக்கமளிக்கும் கட்டாயச் சட்டத்தைச்செய்ய தான் விரும்பவில்லை யென்றும் ஜப்பானிய முதல் மந்திரி ஒரு அறிக்கை விடுத்தார்.

பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்கள் அருகாமையி லில்லாதிருக்கும் பக்ஷத்தில், வர்த்தகக் கப்பல்கள் ஜப்பானிய யுத்தக் கப்பல்கள் ஆணையிட்டால், நின்று தஸ்தாவேஜிகளை ஜப்பானிய அதிகாரிகளின் பரிசிலனைக்கு சமர்ப்பிக்க வேண்டுமென்று பிரிட்டிஷ் சர்க்கார் உத்தரவு பிறப்பித்தனர். இவ்வாறு பிரிட்டனும் அமெரிக்காவும் செய்தது ஜப்பானுக்கு மிகுந்த தைரியத்தை உண்டுபண்ணி விட்டது.

செப். 16 :—பின் வாங்குவதைவிட பிராணத் தியாகமே மேல் என்று கருதி, ஷாங்ஹாயில் ஒரு சீன ஸைன்யம் கடைசிவரை எதிர்த்துப் போரிட்டு நிர்மூலமாயிற்று.

மஞ்சுகோவுக்கு பல்லாயிரக் கணக்கில் ஜப்பானிய துருப்புகள் விரைந்தன. அங்கு ஜப்பானுக்கு எதிரிடையாக பலம்பெற்ற ஒரு திடீர் கலகத்தை அடக்கவே அவை சென்றனவாம். தெற்கு சீனாவில் காண்டனுக்கு அருகில், ஸ்வாடோ உட்பட பல நகரங்களை ஜப்பானிய விமானங்கள் நிர்மூலமாக்கின.

செப். 17 :—வட சீனாவில் இழந்த சில இடங்களை சீனர் மீண்டும் பிடித்தனர். ரூஸ்வெல்டின் போக்கைக் கண்டு சீனாவுக்கு மிகுந்த ஏமாற்றம் ஏற்பட்டது.

பர்மாவிலுள்ள சீனர், ரூ. 1,70,000 சேர்த்து தாய் நாட்டின் விடுதலைக்காக அனுப்பினர்.

ஹாலந்துக்குச் சொந்தமான கிழக்கு இந்தியத் தீவுகளில், ஆஸ்ட்ரேலியா, கடல் விமான நிலையங்களை அமைக்க வேண்டுமென்று பிரிட்டன் கொடுத்த யோசனையை ஆஸ்ட்ரேலியா அங்கீகரித்தது. இது 'மிகவும் முக்கியமான விஷயம்' என்றும், சட்டம் உடனே இயற்ற வேண்டியிருக்குமென்றும் ஆஸ்ட்ரேலிய முதல் மந்திரி தெரிவித்தார்.

செப். 20 :—சீனத் தலைநகரான நான்கிங்மீது ஜப்பானிய விமானங்கள் நான்கு தடவை படையெடுத்தன. ஷாங்ஹாய் அருகிலுள்ள தீவுகளைப் பிடித்து ஜப்பானி

யர் அவற்றைப் படை நிலையங்களாக உபயோகிக்கலாயினர். வடக்கே ஷான்ஸி மாகாணத்தில் ஜப்பானியர் முன்னேற ஆரம்பித்தனர்.

சீன ஜப்பானியத் தகராறைப்பற்றி கவனிக்கும் சங்க ஆலோசனைக் கமிட்டிக்குப் பிரதிநிதியை அனுப்ப அமெரிக்க சர்க்கார் சம்மதித்தனர். ஸ்வித்ஸர்லாந்திலுள்ள அமெரிக்க மந்திரி ஸ்ரீ. லீலண்ட் ஹாரிஸன் அமெரிக்கப் பிரதிநிதியாயிருப்பார் என்றும், அமெரிக்கா இவ்விஷயத்தில் சங்கத்துடன் எவ்வளவுதூரம் ஒத்துழைக்க முடியும் என்பதை தெரிந்து கொள்வதுதான் இதன் நோக்கமென்றும் திட்டமாக அறிவிக்கப்பட்டது.

"ஜப்பானை எதிர்த்துப் போரிட, சீன சர்க்கார், நான்கிங்கை போர்க்களமாக உபயோகித்துக் கொள்வதால்" அதன்மீது தாங்கள் கடுமையான நடவடிக்கை எடுக்க நேரிடுமென்றும், அதை யுத்தேசித்து அந்நிய நாட்டு மக்களும் பிரதிநிதிகளும் அங்கிருந்து வெளியேறி விடவேண்டுமென்றும், ஜப்பானிய அதிகாரிகள் எச்சரிக்கை செய்தனர். யுத்தக் கப்பல்களும் அதற்கு அருகாமையில் இருக்கக் கூடாதென்றும் கேட்டனர். பிரிட்டிஷ்-பிரெஞ்சு தளபதிகள் ஜப்பானின் இந்த கோரிக்கையை நிராகரித்தனர். அமெரிக்க ஸ்தானிகர் மறுநாள், ஒரு யுத்தக் கப்பலில் தன் பரிவாரங்களுடன் கிளம்பினர். சீன-அமெரிக்க நட்புக்கு அமெரிக்கா துரோகம் செய்து விட்டதாக சீனர் கருதலாயினர்.

நான்கிங்மீது குண்டு வீச்சு நடைபெறுவதைக் கண்டித்து, பிரிட்டனும் அமெரிக்காவும் ஜப்பானுக்கு ஆட்சேபணைகளை அனுப்பின.

சீன-ஜப்பானியத் தகராறைப்பற்றி சங்க கவுன்சிலால் நியமிக்கப்பட்ட ஆலோசனைக் கமிட்டி கூடி கவனித்தது. லாட்வியாவின் வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ. மான்டர்ஸ் தலைமை வகித்தார். அமெரிக்கப் பிரதிநிதியாக ஸ்ரீ. ஹாரிஸனும் வந்திருந்தார். சீனாவும் ஜப்பானும் கமிட்டிக்குப் பிரதிநிதிகளை அனுப்புமாறு கேட்க வேண்டுமென்று ஒப்புக் கொள்ளப்பட்டது.

காண்டன்மீது 2 மணி நேரம் விமான குண்டு வீச்சு நடைபெற்றது. வடக்கே, ஸூயுவான் மாகாணத்தில், நான்கோ என்ற மலைக் கணவாயில் 50,000 சீனத் துருப்புகள் சிறைப்படுத்தப் பட்டன.

செப். 21 :—சங்க அசெம்பிளி கூடியது. "சதா தன் பொறுப்புகளை தட்டிக் கழித்துக்கொண்டே வந்தால் சங்கம் எப்படி நிலைபெற்றிருக்க முடியும்?" என்று ரஷ்ய வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ. லித்வினுவ் கேட்டார். பொருத்தமில்லாத அநாவசியமான விவரங்களில் இறங்கி, சங்கம் ஏதோ உதவி செய்யப் போவதாக சீனாவுக்கு ஒரு தப்பெண்ணத்தை விளை விக்கக் கூடாது என்று ஆஸ்ட்ரேலியப் பிரதிநிதி ஸ்ரீ. ஸ்டான்லிபுரூஸ் எச்சரித்தார்.

ஸர்வ தேசீய உறவு சீரழிந்து வருவதை உத்தேசித்து கிழக்கு இந்தியத் தீவுகளுக்கு அதிக ஸைன்யத்தை அனுப்ப

வேண்டுமென்று ஹாலந்து பார்லிமெண்டின் கூட்டத்தில் ராணி வில்ஹெல்மினு தெரிவித்தார்.

செப். 22 :—இறுமாப்படைந்த ஜப்பான் நான்கிங் மீது கடுமையாக விமான குண்டுகளை வீசியது. காண்டனிலும் பயங்கரமான விமானப் போர் நடைபெற்றது.

"வெளிநாட்டு யுத்தக் கப்பல்களும் வெளிநாட்டினரும் நான்கிங்கிலிருந்து வெளியேற வேண்டுமென ஜப்பான் விடுத்த எச்சரிக்கை, யுத்தம் நடைபெறும்வரை கட்டுப்படுத்தும். ... நான்கிங்மீது மீண்டும் மீண்டும் படையெடுப்பு நடைபெறும்" என்று ஒரு ஜப்பானிய அதிகாரி ஷாங்ஹாயில் தெரிவித்தார்.

அமெரிக்க ஸ்தானீகர் காரியாலயம் உட்பட பல ஸ்தானீக காரியாலயங்களும், ஏராளமான வீடுகளும் ஜப்பானிய குண்டுகளால் தாக்கப்பட்டன. அமெரிக்க சர்க்கார் ஒரு கண்டிப்பான ஆட்சேபனையை அனுப்பினர். அவர்களுக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது. கப்பலேறிய அமெரிக்க ஸ்தானீகர் நான்கிங்குக்கு மீண்டும் திரும்பினர்.

"ஏராளமான ஜனங்கள் வாசஸ்தலமாக உபயோகித்துக்கொண்டு சமாதானமாய் தங்கள் தொழில்களை நடத்திக் கொண்டிருக்கும் விஸ்தாரமான பிரதேசத்தின் மீது பொதுப் படையாக குண்டுகளை வீசுவது கொஞ்சமும் பொருத்தமில்லாதது: சட்ட பூர்வமான கொள்கைகளுக்கும் ஜீவகாருண்யத்துக்கும் விரோதமானது.

அமெரிக்க மக்களுக்கு ஏற்படக்கூடிய நஷ்டத்துக்கு ஜப்பான்தான் ஜவாப்தாரி. நஷ்ட ஈடு கொடுக்க வேண்டி நேரிடும்" என்று அமெரிக்க ஆட்சேபனை கூறியது.

சீன ஸோவியத் தலைவர்கள் கூடி, தங்கள் தனி சர்க்காரைக் கலைத்து விட்டனர். பொதுவுடமை ஸைன்யங்கள் ஜப்பானுக்கு எதிராகப் போரிடுவதற்காக, சீன தேசீய ராணுவத்தின் பகுதிகளாக மாற்றியமைக்கும் வேலை ஆரம்பமாயிற்று.

பிரிட்டிஷ்-அமெரிக்க ஸ்தானீகர்களை ஒரே சமயத்தில் டோகியோவிலிருந்து வாபஸ் பெறலாமா என்ற விஷயம் பிரிட்டிஷ்-அமெரிக்க சர்க்கார்களால் கவனிக்கப்பட்டது.

செப். 22:—ஹ்யுகேஸன் சம்பவத்துக்கு முதலில் பொறுப்பேற்க மறுத்த ஜப்பான், பிறகு பொறுப்பேற்று வருத்தம் தெரிவித்துக் கொண்டது. சீன ராணுவத் தலைவர்களின் மோட்டாரா யிருக்கலாமென்று கருதி, விமானிகள் அதைத் தாக்கி யிருக்க வேண்டுமென்று அறிக்கை கூறியது. ஜப்பானின் பதில் திருப்திகரமா யிருப்பதாகக் கூறி பிரிட்டன் அதை ஏற்றுக் கொண்டது.

செப் 23, 24:—சீனவெங்கும் பயங்கரமான விமானப் படையெடுப்பு நடைபெற்றது. காண்டன் தெருக்களில் பிணக்குவியல்கள் நிறைந்திருந்தன. நான்கிங்கில் பிரிட்டிஷ் ஸ்தானீகர் காரியாலயம் தாக்கப்

பட்டது. ஒரு மரணமும் நேரிட்டது. அமெரிக்காவும் பிரிட்டனும் இந்த அநாகரிகத்தைக் கண்டித்தன.

ஒன்பது வல்லரசு உடன்படிக்கையில் கையெழுத்துச் செய்த நாடுகள், தங்களுக்கிடையே நிலைமையைப்பற்றி ஆலோசிக்கலாயின. ஆனல், அதன்கீழ் நடவடிக்கை எடுக்கும் உத்தேசம் யாருக்கு மிருப்பதாகத் தெரியவில்லை என்று அமெரிக்க காங்கிரஸில் (பார்லிமெண்டில்) அறிவித்தனர்.

"எல்லோருக்கும் நன்ருய்த் தெரிந்துள்ள காரணங்களுக்காக" சங்க ஆலோசனைக் கமிட்டியில் தாங்கள் கலந்துகொள்ளப் போவதில்லை என்று ஜெர்மன் சர்க்கார் பதிலனுப்பி விட்டனர்.

செப் 24:—ஹாங்கோ நகரை ஜப்பானிய விமான குண்டுகள் ஒரு நரகமாக்கின. கள்ளமற்ற சிசுக்கள் அங்கே கணக்கின்றி மாண்டன. பள்ளி மாணவிகளெல்லாம் பயித்தியமானர்கள். ஆஸ்பத்திரிகள்மீது குண்டுகள் சிதறின. புகலிடமின்றி மாந்தர் புகைந்தனர். இடிந்த கட்டிடங்கள் கீழே ஏங்கின. கால், கைகள் ஒடிந்தோரின் ஓலம் சொல்லொணுது.

ஷான்ஸி மாகாணத்தின் வடபுறத்தில் மிகவும் மூர்க்கமான ஒரு கை கலந்த போரில் 5000 ஜப்பானிய சோல்ஜர்கள் கொல்லப்பட்டனர். 2000 ஜப்பானியர் சிறைப்பட்டனர்.

ஜப்பானிய சாமான்களைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்ற கிளர்ச்சி பிரிட்டனில் கிளம்பியது. சங்க ஆலோசனைக் கமிட்

டிக்கு ஜப்பான் பிரதிநிதியை அனுப்பப் போவதில்லை என்று ஸ்ரீ. ஹிரோடா ஜப்பானியப் பார்லிமெண்டில் தெரிவித்தார்.

சீனு-ஜப்பான் போர் நீடிக்கும் வரை, அமெரிக்க சர்க்காரின் ஆசியக் கடற்படை, சீனுவிலேயேதான் இருக்கும் என்று அமெரிக்க கடற்படை இலாகா ஒரு அறிக்கையை விடுத்தது.

"ஒன்பது வல்லரசு உடன்படிக்கையையும், சங்க உடன்படிக்கையையும் நிலைநாட்டுவதற்காகத்தான் சீனு போரிடுகிறது. ஒன்பது வல்லரசு உடன்படிக்கையில் கையெழுத்துச் செய்த இதர நாடுகள் தம் பொறுப்பை மறக்கவில்லை என்று நம்புகிறேன். மற்ற நாடுகளை விட அமெரிக்காவுக்குத்தான் பொறுப்பு அதிகம். ஏனெனில், வாஷிங்டன் மகாநாட்டைக் கூட்டி, ஒன்பது வல்லரசுகளின் உடன்படிக்கைக்குக் காரணமாயிருந்தது அமெரிக்காதான்." என்று சியாங்-கே-ஷேக் ஒரு அறிக்கை விடுத்தார்.

செப். 25 :—ஜப்பான் சம்பந்தமாக சீனுவில் கடுமையான மனப்பான்மை நீடிக்கிறதா அல்லது கைவிடப் படுகிறதா என்பது தெரியவேண்டும் என்று ஜப்பான் கேட்டது. "ஜப்பான் கோறும் மனப்பான்மை மாற்றம் சீனு எதிர்க்காமல் பணிந்துவிட வேண்டும் என்பதுதான். இது சாத்யமல்ல." என்று சீன அதிகாரிகள் பதிலளித்தனர்.

"பிரஜைகள்மீது குண்டுகளை வீசத்தான் செய்வோம்" என்று ஜப்பானிய ராணுவ அதிகாரி ஒருவர் ஷாங்ஹாயில் தெரிவித்தார்.

தங்கள் கடமையை நிறைவேற்றத் தவறியதால் வடக்கே, தோல்விக்குக் காரணமாயிருந்த இரண்டு சீன தளகர்த்தர்கள் தூக்கிலிடப்பட்டனர்.

மிகப் பெரிய சீன ஸோவியத் தலைவர் ஜெனரல் கர்-ஸா-வியாங், சீன தளபதியானார்.

இத்தருணத்தில் ஹிட்லரும் முஸோலீனியும் சந்தித்துப் பேசினர்.

செப். 27 :—பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் ஜப்பானிய பகிஷ்கார இயக்கம் வலுத்து வந்தது. அதற்காக ஒரு தனி ஸ்தாபனமும் பிரிட்டனில் நிறுவப்பட்டது.

ஷாங்ஹாயில் ஏராளமான மீன் படகுகளை ஜப்பானிய சப்மரைன்கள் அக்கிரமமாய் முழ்கடித்தன. 300 பேர்களுக்கு மேல் மாண்டனர். காண்டன் மீண்டும் தாக்கப்பட்டது.

23 நாடுகளடங்கிய சங்க ஆலோசனைக் கமிட்டி ஜினிவாவில் கூடியது. சீனப் பிரதிநிதி ஸ்ரீ. வெல்லிங்டன் கூ நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று மன்றாடினர். நகரங்கள் மீது குண்டு வீசுவது கண்டிக்கப்பட்டது. 'இப்போதாவது உலகம் தன் மனச்சாக்ஷிப்படி நடந்து கொண்டு, இதைக் கண்டிக்காவிடில், அது, குற்றமிழைப்பதற்கு உடந்தையாயிருந்தது போலாகும். நாகரீக வாழ்வுக்கே ஆபத்து வந்துவிடும்." என்று பிரெஞ்சு வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ. டெல்போஸ் தெரிவித்தார்.

ஜப்பானுக்கு எதிராக ஸர்வதேச பகிஷ்காரம் நடைபெற வேண்டுமென்று பிரிட்டிஷ் சுரங்கத்தொழிலாளர் கோரினர்.

நகரங்கள்மீது குண்டுகளை ஜப்பானிய விமானங்கள் வீசுவதைக் கண்டிக்கும் தீர்மானம் சங்க அசெம்பிளியில் ஏக மனதாக நிறைவேறியது.

நான்கிங்கிலிருந்த ஸோவியத் ஸ்தானாதிபதி ஸ்ரீ. பொகொமொலோவ், மாஸ்கோவுக்கு விமானத்தில் போனார். மிகவும் முக்கியமான ஜோலியுடன்தான் அவர் கிளம்பியதாகக் கருதப்படுகிறது.

செப். 29: ஜப்பானின் அட்டூழியம் ஓயவே யில்லை. சீன அடையாளங்களுடன் ஜப்பானிய விமானங்கள் அந்நியரின் விடுதிகளைத் தாக்கின.

ஜப்பானிய குண்டு வீச்சைக் கண்டித்து சங்கக் கமிட்டியில் பேசிய அமெரிக்கப் பிரதிநிதி அது காட்டுமிராண்டிகளின் வேலை என்று தெரிவித்தார்.

சீன ஜப்பானியத் தகராறில் பிரிட்டன், மத்தியஸ்தம் செய்து வைக்கத் தயார் என்று பிரிட்டிஷ் மந்திரி சபை அறிவித்தது. ஆலோசனைக் கமிட்டி ஒரு உப கமிட்டியை நியமித்தது.

குண்டு வீச்சை சங்க அசெம்பிளி கண்டித்தது கண்டு ஜப்பானெங்கும் தாங்கமுடியாத ஆத்திரம் ஏற்பட்டிருக்கிறது. எதிரியின் போர் செய்யக்கூடிய சக்தியை அழித்து விடுவதென்று ஜப்பான் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறதென்று ஜப்பானிய வெளிநாட்டு இலாகா அதிகாரி யொருவர் தெரிவித்தார்.

செப். 30:—ஜப்பானிய சாமான்களைப் பகிஷ்கரிப்பது இந்தியர் கடமை என்று ராஷ்டிரபதி ஜவாஹர்லால் நேரு

ஆக்ஞையிட்டார். வெறும் வாய் வேதாந்தத்துடன் நிற்காமல், செய்கையில் வீரம் காட்டவேண்டும் என்று அழைத்தார்.

சீனுவுக்கு, பிரிட்டிஷ் கம்பெனிகள் தயாரித்த விமானங்கள் வந்தன.

லண்டன் மேயர், சீனரின் கஷ்ட நிவாரணத்துக்காக பணம் வசூலித்தார். ஜப்பானுக்குப் போர் சாதனங்கள் போகக்கூடாதென்றும் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்றும் பிரிட்டிஷ் தொழிற்கக்ஷி கோரியது.

ஜப்பான் 300 சாமான்களின் ஏற்றுமதியை, யுத்தத்தை உத்தேசித்துத் தடை செய்தது.

அக்டோபர் 1:—சீன யுத்தப் பிரச்னை கமிட்டிக்குக் கமிட்டி தாவலாயிற்று. 23 நாடுகளடங்கிய ஆலோசனைக் கமிட்டி, 13 நாடுகளடங்கிய ஒரு உப-கமிட்டியை நியமித்தது. இதில் பிரான்ஸ், பிரிட்டன், ஹாலந்து, ரஷ்யா, அமெரிக்கா, சீனு இவை முக்கியமானவை. ஸர்வதேச சட்டத்துக்கு விரோதமாகவும் ஒப்பந்தங்களின் மூலம் ஏற்றுக்கொண்டுள்ள பொறுப்புகளை உதாசீனம் செய்தும் சங்கத்தில் அங்கத்தினராயுள்ள ஒரு நாட்டின்மீது ஜப்பான் படையெடுத்திருப்பதாகக் கமிட்டி தீர்மானித்தது.

வடக்கே, 60,000 சீனர்களை, யென்மென் என்ற கணவாயில் சூழ்ந்துகொண்டு ஜப்பானியர் தாக்கலாயினர். ஷாங்ஹாயிலும் காண்டனிலும் போர்.

அக் 5:—ஜப்பானியர், ஹோபெய்-சாஹாரிலிருந்து தெற்கு நோக்கி, ஷாண்டுங் மாகாணத்தில் முன்னேற

ஆரம்பித்தனர். இங்குள்ள கவர்னர் ஜப்பானுக்கு அனு கூலமாயிருப்பார் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் அது சாத்தியப்படவில்லை. ஹோபெய்-சாஹாருக்கு வடமேற்கிலுள்ள ஸுயுவான் மாகாணத்திலும் ஜப்பானியர் முன்னேறினர்.

ஜப்பானிய சப்மரைன்கள் ஒரு பிரிட்டிஷ் கப்பலை இரண்டு தடவை நிறுத்தி சோதனை போட்டன.

அக் 6:—இந்தியாவிலுள்ள ஜப்பானிய ஸ்தானீகர் அவசரமாக ஜப்பானுக்குப் பிரயாணமானார். இந்திய பகிஷ்கார இயக்கத்தை எப்படிச் சமாளிப்பதென்று கேட்கவே அவரை ஜப்பானிய சர்க்கார் அழைத்தனராம்.

ஐந்து மாகாணங்களில் 1,250 மைல் நீளமுள்ள போர்முனையில் ஜப்பான் போரிட்டது. 6 யுத்தக் கப்பல் களில் துருப்புகள் ஜப்பானிலிருந்து வந்தன. அதுவரை, 19 சீனக் கப்பல்களும், 305 விமானங்களும் ஜப்பானிய ரால் தகர்க்கப்பட்டனவாம்.

ஜெர்மனியிலிருந்து சீனுவுக்கு 50 ராணுவ மோட் டார்களும் 80 லக்ஷம் தோட்டாக்களும் வந்தன.

அக். 5:—கெல்லாக் ஒப்பந்தத்தையும் ஒன்பது வல்லரசு ஒப்பந்தத்தையும் ஜப்பான் மீறி சீனுவை ஆக்ர மித்திருப்பதாகப் பதின்மூவர் கமிட்டி தீர்ப்பளித்தது.

"சீனுவுடன் நேசமாக ஒத்துழைப்பதுதான் தமது கொள்கையின் லக்ஷியம்" என்று ஜப்பானிய ராஜ

தந்திரிகள் சொல்கிறார்கள். ஆனால் அவர்கள் சொல்வது வேறு, செய்வது வேறு.

சீனவுக்கு உதவி செய்வதற்கு மற்ற வல்லரசுகள் தமக்கு உசிதமெனத் தோன்றும் காரியங்களை தனி முறையில் செய்யவேண்டுமென்றும் சீனவின் பாது காப்பு பலத்தையும் யுத்த பலத்தையும் குறைக்கும்படி எந்தக் காரியத்தையும் மற்ற வல்லரசுகள் செய்யலாகா தென்றும் அறிக்கை சிபார்சு செய்தது.

அவசியம் ஏற்படும்போது 9 வல்லரசு ஒப்பந்த நாடுகள் தம்மிடையே கட்டுப்பாடாகக் காரியம் செய்வது பற்றிக் கலந்தாலோசிக்க ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் அந்த நாடுகள் சீக்கிரமாகக் கூடி யோசிக்க வேண்டும் என்பது அறிக்கையின் சிபார்சு.

பதின்மூவர் அறிக்கை வெளியான தினத்தன்றே தலைவர் ரூஸ்வெல்ட் கீழ்க்கண்ட மிகவும் முக்கியமான பிரசங்கத்தை சிகாகோவில் செய்தார்.

"உலகத்து ஜனத்தொகையில் 100-க்கு 90 பேரின் அமைதி, சுதந்திரம், க்ஷேமம் இவை 100-க்கு 10 பேரின் தீவினையால் பாதிக்கப்படுகிறது"

என்று கூறுகிறார் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஸ்ரீ. ரூஸ்வெல்ட். இப்போதுள்ள உலக நிலை சம்பந்தமாக ஜனங்களின் உணர்ச்சி எவ்வாறிருக்கிறதென்பதைச் சோதித் துத் தெரிந்துகொள்வதற்காக அவர் அமெரிக்கா முழுவதிலும் சுற்றுப் பிரயாணம் செய்கிறார்.

யுத்தம் செய்யப் போவதாக அறிவிக்காமல், எச்சரிக்கையும் கொடுக்காமல் எவ்வித நியாயமுமற்று (ஜப்பானியர்) விமானத்திலிருந்து குண்டு போட்டு எண்ணற்ற சாதாரண ஜனங்களையும் பெண்களையும் குழந்தைகளையும் கொலைசெய்கின்றனர்.

எவ்வித மனித உணர்ச்சியுமற்று அதிகாரத்திலும் ஆதிக்கத்திலும் பேராசை கொண்டவர்களால் சிறிதும் நீதி நியாயமின்றி நிரபராதிகள் கொடுங் கொலைக்கு பலியிடப்படுகின்றனர்.

இப்போதுள்ள உலக அமைப்பில் ஒவ்வொரு தேசத்தில் நடக்கும் காரியமும் மற்ற நாடுகளைப் பாதிப்பதாக இருக்கிறது. ஆகையால் எந்த நாடும் மற்ற நாடுகளில் நடக்கும் பெரிய சம்பவங்களினின்று தனித்து ஒதுங்கிவிட முடியாது.

ஆகையால் சர்வதேச உடன்படிக்கைகளும் சர்வதேசிய ஒழுக்கமும் புனிதமாகப் பாதுகாக்கப்படுவது அமெரிக்க மக்களுக்கு ஜீவாதாரமான முக்கிய விஷயம்.

மனித உணர்ச்சியையும் உடன்படிக்கைகளையும் மீறும் நாடுகளுக்கு எதிராக, சமாதானத்தை விரும்பும் நாடுகள் ஒன்றுபட்டு, நடவடிக்கை யெடுக்க வேண்டும்.

அநீதிகள் நீக்கப்படுவது அவசியமே. அதற்குத் தக்கபடி, மனித சமூகத்தின் நியாய உணர்ச்சி தூண்டப்படவேண்டியதே.

அதோடு, மற்ற நாடுகளின் சுதந்திரம், சர்வதேச ஒப்பந்தங்கள் இவற்றின் புனிதத் தன்மை கவுரவிக்கப் படுதல் மிக மிக அவசியம்.

"சமாதானக் கொள்கையையே கடைப்பிடித்து நின்று அமெரிக்கா எந்த யுத்தங்களிலும் சிக்காமலிருக்கும்படி செய்வதற்குரிய சாத்தியமான எல்லா முறைகளையும் நான் அனுஷ்டிப்பேன்.

"நாகரிகம் காப்பாற்றப்பட வேண்டுமாயின், உலகில் சமாதான தர்மம் மீண்டும் நிலைநாட்டப்படுதல் அவசியம்."

அக். 7 :—ஹான்கிங் விமான நிலயத்தை ஜப்பானிய விமானங்கள் தகர்த்தன.

இந்தியா ஜப்பானிய சாமான்களை பகிஷ்கரித்தால், ஜப்பானும் இந்திய சாமான்களை பகிஷ்கரிக்குமென்று அறிவிக்கப்பட்டது.

அக். 6 :—சீனாமீது ஜப்பான் படையெடுத்திருப்பது, 9 வல்லரசுகள் ஒப்பந்தத்துக்கும் கெல்லாக் உடன்படிக்கைக்கும் விரோதமானதென்று அமெரிக்க சர்க்கார் ஒரு அறிக்கை விடுத்தனர்.

"சீனா—ஜப்பான் தகராறு ஆரம்பித்த காலத்திலிருந்தே அமெரிக்காவானது சீன சர்க்காரையும் ஜப்பானிய சர்க்காரையும் யுத்தத்தைத் தவிர்க்கும்படி கேட்டுக்கொண்டது.

இருவரும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாக, ஒரு சமரசத் திட்டம் தயாரிப்பதில் அமெரிக்கா உதவி செய்யத் தயார் என்றும் அறிவிக்கப்பட்டது.

உலகில் சமாதானம் நிலவவேண்டுமானால் சர்வ தேசப் பிரச்னைகளில் எந்த நாடும் பலாத்காரப் பிரயோகம் செய்ய

லாகாது ; எந்த நாடும் மற்றொரு நாட்டின் உள்நாட்டு விவ காரங்களில் பிரவேசிக்கக்கூடாது ; பிற நாட்டுடன் தீர்த்துக் கொள்ளவேண்டிய பிரச்னைகள் ஒப்பந்தங்கள் மூலமும் சமா தானப் பேச்சுகள் மூலமுமே தீர்த்துக்கொள்ளப்படவேண் டும்; ஒப்பந்தங்கள் யாராலும் உல்லங்கனம் செய்யப் படலா காது. உடன்படிக்கைகளின் புனிதத் தன்மை பாதுகாக்கப்பட வேண்டும். இதுதான் அமெரிக்காவின் கொள்கை.

இக்கொள்கைகளைத் தலைவர் ரூஸ்வெல்ட் 5உ பிரசங்கத் தில் வற்புறுத்தியிருக்கிறார்.

எந்த தேசத்தின் உள்நாட்டிலும் சரி, பல தேசங்களி னிடையேயும் சரி, சமாதானம் இருக்க வேண்டுமானால் சில ஒழுக்கச் சட்டங்களுக்கு எல்லோரும் உட்பட வேண்டும்.

சர்வதேசிய அராஜகம் சமாதானத்தின் அடிப்படையைச் சீர்குலைத்து உடனேயோ அல்லது சிறிது காலத்துக்குப் பிறகோ ஒவ்வொரு தேசத்து மக்களின் க்ஷேமத்தையும் பாழ் படுத்தி விடும்.

ஆகையால் சர்வதேச ஒப்பந்தங்கள் மதிக்கப்படவேண் டும். அந்த நிலைமை மீண்டும் ஏற்படுத்தப்பட வேண்டும்.

கீழ்நாடுகளில் நடந்துவரும் சம்பவங்களைக் கவனிக்கும் போது ஜப்பானனது இக்கொள்கைகளை யெல்லாம் மீறி, சீனு சம்பந்தமாக ஏற்பட்ட "9 வல்லரசு" ஒப்பந்தத்துக்கு எதிராகவும் கெல்லாக் உடன்படிக்கைக்கு எதிராகவும் காரி யம் செய்துவிட்டது என்பதே அமெரிக்க சர்க்காரின் முடி வான அபிப்ராயம்.

அமெரிக்க சர்க்காரின் இந்தத் தீர்ப்பும் சங்க அசெம்ப்ளி யின் தீர்ப்பும் ஒரே தன்மை வாய்ந்ததாகும்.

## பூர்ண ஒத்துழைப்பு

சீன நெருக்கடியில் அமெரிக்க சர்க்கார் பூரணமாகத் தன்னாலியன்ற மட்டில் சங்கத்துடன் ஒத்துழைக்கும் என்பது சர்க்காரின் இன்றைய அறிக்கை மூலம் நிச்சயமாயிற்று.

"ஜப்பான், உலகத்து நாகரீக நாடுகள் யாவற்றையும் கவலைக்கு உட்படுத்துவதால், உலகத்தின் கண்டனத்தை மட்டுமல்லாமல், கடைசியில் உலகத்திலுள்ள நாடுகளின் எதிர்ப்பையும், பலாத்காரத்தையும் கூடச் சமாளிக்க வேண்டியிருக்கும்" என்று லண்டன் "டைம்ஸ்" எச்சரிக்கை செய்தது.

9 வல்லரசு உடன்படிக்கையில் கையெழுத்திட்ட எல்லா நாடுகளும் கூடி ஆலோசனை நடத்துவதற்காக, சங்க மெம்பர்களாயுள்ள (1) பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் (2) பெல்ஜியம் (3) சீனு (4) பிரான்ஸ் (5) இத்தாலி (6) ஹாலந்து (7) போர்ச்சுகல் (8) பொலிவியா (9) டென்மார்க் (10) மெக்ஸிகோ (11) நார்வே (12) ஸ்வீடன் இவற்றிற்கு அழைப்பு போயிற்று.

சங்க கமிட்டி தயாரித்த ஜப்பானியக் கண்டனத் தீர்மானத்துக்கு சயாமும் போலந்தும் எதிரிடையாக வோட் கொடுத்தன.

அக். 8. ரூஸ்வெல்டின் சிகாகோ பிரசங்கம் உலக சமாதானத்துக்குப் பெரிய தொண்டு என்று பிரிட்டிஷ் சர்க்கார் கருதுவதாக ஸ்ரீ ஈடன் அமெரிக்க ஸ்தானிகரை வரவேற்று நன்றி கூறினர்.

அக். 9. ஜப்பானை ஜெர்மனியும் இத்தாலியும் ஆதரிக்க முன் வந்தன.

"ஜப்பான் செய்யும் காரியம் தற்காப்பு உரிமையை உபயோகித்துச் செய்யக்கூடிய நியாயமான காரியத்தைத் தவிர வேறெதுவுமில்லை" என்று ஸினர் முஸொலினி தம் பத்திரிகையில் எழுதினர். "இப்போது நடக்கும் சீன யுத்தம் பொதுவுடைமையை எதிர்க்கும் ஒரு புண்ணிய யுத்தமாக வளருமானல், இத்தாலியானது ஜப்பானுக்கு ராணுவ உதவி செய்யவும் தயார். இவ்விஷயத்தில் இத்தாலியிலுள்ள எல்லோரும் ஜப்பானை ஆதரிக்கிறார்கள். அதுமட்டுமல்ல. ஹிட்லரும் இத்தாலியக் கொள்கையை ஆதரிக்கிறார். சீனவில் ஜெர்மன் உரிமைகள் பாதகமடைந்தாலும், அதையும் பொருட்படுத்தாமல் ஹிட்லர் ஜப்பானை ஆதரிக்கத் தயார்" என்று முஸொலினி எழுதியிருந்தார்.

நான்கிங் சர்க்காரின் மூன்று பிரதிநிதிகளும், ரஷ்ய ஸ்தானீகர் ஸ்ரீ பொகமொலாவும் வெளி மங்கோலியாவின் தலைநகராகிய உலம்பதோருக்குச் சென்றனர். வெளி மங்கோலியாவை ஜப்பானுக்கு எதிராக யுத்தம் செய்யச் சொல்வதே இந்த விஜயத்தின் நோக்கம் என்று ஒரு ஜப்பானியப் பத்திரிகை குற்றம் சாட்டியது.

"யுத்தம் நீடித்து நடக்குமென்று எதிர்பார்த்து, அதற்குத் தயாராயிருங்கள்; வெளி நாட்டினர் காட்டும் அனுதாபம் ஊக்கமளிப்பதாகவே இருக்கிறது. ஆனல், அதைக் கண்டு பொய்யான நம்பிக்கையை வளர்த்துக் கொண்டு முயற்சியைக் குறைத்துவிடலாகாது" என்று தலைவர் சியாங்-கே-ஷேக் மக்களை எச்சரித்தார்.

அக். 11: "ஸர்வதேச நிலைமையில் சீர்குலைவு ஏற்பட்டு விட்டதால், அமெரிக்கா தன் கடற்படை பட்ஜெட்டைப் புதுப்பித்துப் படையை அதிகப்படுத்துவது அவசியமாய் விட்டது" என்று அமெரிக்க சர்க்காரின் கடற்படைக் கமிட்டித் தலைவர் கூறினர்.

ஐரோப்பாவில், ஸ்பெயின் சம்பந்தமாக நெருக்கடி வலுத்தது.

அக்டோபர் 11உ வரை, பீகிங்குக்குத் தென்புறம் 40,000 சதுரமைலுள்ள பிரதேசத்தில் ஜப்பானின் ராணுவ ஆதிக்கம் வியாபித்திருப்பதாக ஜப்பானியர் கூறினர்.

ஷாண்டுங் மாகாண கவர்னர் டான்-பூ-சூ குவாங்ஸி கவர்னர் லிட்-ஸுங்-ஜேன் இருவரும் சியாங்-கே-ஷேக்கிடம் தங்களுக்குள்ள பழைய விரோதங்களை மறந்து, அவருடைய கட்டளைப்படி நடப்பதாக அறிவித்தனர்.

அக். 13: மஞ்சகோவில் அதிருப்தி வளர்ந்தது. பல ஜில்லாக்களில் ஜப்பானிய ஆதிக்கமே அற்றுப்போய் விட்டது. ஆனல் இந்த இயக்கம் கட்டுப்பாடா யிருக்கவில்லை.

பிரிட்டிஷ் ஸ்தானிகரின் 3 மோட்டார்கள் நான்கிங்கிலிருந்து ஷாங்ஹாய் போகும் பாதையில் 6 ஜப்பானிய விமானங்களால் தாக்குண்டன.

ஸர்வதேச ஒழுக்கமுறைகளின் அவசியத்தை ஸ்ரீ ரூஸ்வெல்ட் மீண்டும் வற்புறுத்தினர். "யுத்தத்தை

விட்டு ஒதுங்கி நிற்பது, யுத்தம் செய்யத் தெரியாத காரணத்தால் அல்ல” என்று ஜாடையாக ஒரு எச்சரிக்கை விடுத்தார்.

அக். 14: ஷான்ஸியில் சீனர் முன்னேறி ஜப்பானுக்குப் பெருத்த நஷ்டத்தை விளைவித்தனர். 22 டாங்கிகளையும், 3000 சோல்ஜர்களையும் இங்கு ஜப்பான் இழந்தது. ஷாங்ஹாயில் 2 லக்ஷம் அநாதைகள் தவித்தனர்.

ஜப்பானியப் பிரமுகர்கள் ஐரோப்பிய நாடுகளுக்குக் காவடி எடுத்துச் சென்றனர். அட்மிரல் கூடோ என்பவர் ஜெர்மனிக்கும், பாரன் ஒகூரா இத்தாலிக்கும் சென்றனர். சில ஜப்பானிய பார்லிமெண்ட் மெம்பர்கள் அமெரிக்காவுக்கும் வேறிடங்களுக்கும் சென்றனர்.

“அகஸ்டா” என்ற அமெரிக்க யுத்தக் கப்பல்மீது ஷாங்ஹாய் துறைமுகத்தில் குண்டுகள் விழுந்தன.

ஸூயுவான் மாகாணம் ஜப்பான் வசமாய் விட்டது. இதில் உட்புற மங்கோலியாவிலிருந்துவந்த துருப்புகள் ஜப்பானுடன் ஒத்துழைத்தன. ஆகவே, மங்கோலியாவுக்குத் தங்கள் ஆதிக்கத்தின்கீழ் ஒரு தனி சர்க்காரைச் சீக்கிரத்தில் ஏற்படுத்தலாமென்று ஜப்பான் நினைத்தது.

அக் 15: வட ஷான்ஸியில் சீனர் வெகுதூரம் முன்னேறினர். ஜப்பானியர் விஷவாயுப் பிரயோகம் செய்தனர். விஷ வாயுவினால் பீடிக்கப்பட்ட பலருக்குத்

தாங்கள் சிகித்ஸை செய்ததாக ஸர்வதேச சங்கத்தின் ஆரோக்கிய இலாகா டாக்டர் போலீகோவும், நான்கிங் செஞ்சிலுவை ஆஸ்பத்திரி டாக்டர் ஹூபிங்கரும் அத் தாட்சிக் கையெழுத்துப் போட்டனர்.

9 வல்லரசு மகாநாட்டில் எல்லோரும் ஒத்துழைக்க வேண்டுமென்று ஸ்ரீ ஈடன் பார்லிமெண்டில் பேசினர்.

அக் 17: வடசீனுவில் சினர் வேகமாய் முன் னேறி இழந்த பல விடங்களைப் பிடித்தனர். ஷெகுவான் குவெய்சோ மாகாணங்களிலிருந்து பெரிய சைன்ய மொன்று 1500 மைல் நடந்துவந்து வடபோர் முனையில் ஜப்பானியரைத் தாக்கினர். "இரும்புக் கால்களும் பசியா வயிறும் பெற்றவர்கள்" என்று இந்தத் துருப்பு கள் பாராட்டப்பட்டன.

பிரஸ்ஸெல்ஸில் கூடவிருந்த 9 வல்லரசு மகாநாட்டுக்கு வரமுடியாதென்று ஜப்பான் அறிவித்துவிட்டது.

ஜப்பானைப் பகிஷ்கரிக்க உலகத் தொழிலாளர் ஒன்று படவேண்டுமென்று பிரிட்டிஷ் தொழிற்சங்க காங்கிரஸ் தீர்மானித்தது.

அக் 18: ஷான்ஸியில் ஜப்பானியரை முறி யடித்து ஏராளமான தளவாடங்களைச் சீனர் கைப் பற்றினர்.

அக் 19: ஷாங்ஹாயில் ஜப்பானியரால் முன்னேற முடியவில்லை. நான்கு முறை தோற்றனர். 55,000

சீனத் துருப்புகள் ஜப்பானியரை 3 பக்கங்களில் வளைத்துத் தாக்கின.

அக் 21: ஷாங்ஹாயில் சீனர், ஜப்பானியரைத் திணறவடித்தனர்.

அக் 22: அமெரிக்க வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ கார்டெல் ஹல். ஜப்பானைக் கடுமையாகக் கண்டித்து எச்சரித்தார். "சமாதானத்தைச் சிதைப்போர் பணியவைக்கப்படுவர்" என்று மிரட்டினர்.

வடக்கே ஜப்பானியத் துருப்பு ரயிலைச் சீனர் நாசமாக்கினர்.

ஜப்பான்மீது நிர்ப்பந்த முறைகளை அனுஷ்டிக்கும் உத்தேசமே இல்லை என்று பிரிட்டிஷ் முதல் மந்திரி ஸ்ரீ சேம்பர்லேன் பார்லிமெண்டில் தெரிவித்தார்.

அக் 23: 70 மணிநேரம் இடைவிடாமல் நடந்த யுத்தத்தில் ஜப்பானுக்குத்தோல்விதான் கிடைத்தது. மேலும் 20,000 ஜப்பானியத் துருப்புகள் வரவழைக்கப்பட்டன.

ஷாங்ஹாயில் பிரிட்டிஷ் காவற்படைகளை ஜப்பானியர் தாக்கிப் பிறகு மன்னிப்புக் கேட்டனர்.

அக் 25: மிகவும் நெருக்கடியான யுத்தம் ஷாங்ஹாயில் நடைபெற்றது. 2000 ஜப்பானியர் உயிரிழந்தனர். ஜப்பான் விமானங்களை அதிகமாய் உபயோகித்துச் சீன அணிவகுப்புக்களைக் கலைக்கப் பார்த்தது.

அக் 27: இரண்டு நாள் மூர்க்கமாய்த் தாக்கிய பிறகு, ஷாங்ஹாயின் மர்மஸ்தானமாகிய சேபையை

ஜப்பானியர் பிடித்தனர். சியாங்-கே-ஷேக் போர்முனை சென்றார். சேனையை இழந்ததும் சீனர் அங்கிருந்து ஒழுங்காகவே பின் வாங்கினர். சேனையில் ஒரு பகுதியை அவர்கள் தீக்கிரையாக்கினர்.

அக் 28: வட ஷாங்ஹாய் வீழ்ச்சியைத் தடுக்க முடியாததால், சீன தளகர்த்தர் ஜெனரல் சுயாஹுவா பிராணத் தியாகம் செய்தார்.

ஸ்ரீமதி சியாங்-கே-ஷேக்கின் மோட்டார் கவிழ்ந்து அவருக்கு ஒரு எலும்பு முறிந்தது.

"உட்புற மங்கோலியாவின் சுதந்திர சர்க்கார்" என்று ஒரு பொம்மை நிர்வாகத்தை ஸூயுவான் தலைநகராகிய குவேஹ்வாவில் ஜப்பானியர் அமைத்தனர்.

அக் 29: ஷாங்ஹாயில் ஜப்பானிய குண்டுகளால் இரண்டு பிரிட்டிஷ் சோல்ஜர்கள் காயமடைந்தனர்.

நவம்பர் 3ஆ: 9 வல்லரசு மகாநாடு பிரஸ்ஸெல்ஸில் ஆரம்பமாயிற்று. பிரிட்டனும் அமெரிக்காவும் ஒரே விதமான மனப்பான்மை கொண்டிருந்தது ஸ்ரீ. ஈடனும், ஸ்ரீ நார்மன் டேவிஸூம் செய்த பிரசங்கங்களிலிருந்து புலப்பட்டது. ரஷ்யா நடவடிக்கை எடுப்பதைப் பலமாய் ஆதரித்தது.

ஷான்ஸியில் நிலைமை நெருக்கடியாயிற்று. தலைநகராகிய டாயுவானுக்கு 30 மைல் கிழக்கே ஜப்பானியர் வந்து விட்டனர்.

4ஆ: ஜப்பானுக்கு மீண்டும் ஸர்வதேசக் காவடி எடுப்பதென்று 9 வல்லரசு மகாநாடு தீர்மானித்தது. ஜப்ப

னுக்கு ஒரு பதிலனுப்பவும், ஜப்பானுக்கும் சீனுவுக்குமிடையே மத்தியஸ்தம் செய்துவைக்கவும் ஒரு சிறிய உபகமிட்டியை நியமிப்பதென்று தீர்மானிக்கப்பட்டது.

ஜப்பானுக்கு இந்தியாவிலிருந்து பருத்தி வாங்குவதற்காக, இந்தாலிக்கும் ஜப்பானுக்கும் ஒரு ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று.

5உ:—கல்வி ஸ்தாபனங்களை ஜப்பானியர் அழித்தனர் என்று 102 சீனப் பேராசிரியர்கள் ஒரு அறிக்கை விடுத்தனர். ஷான்ஸியில் பொதுவுடைமைக்காரர், ஜப்பானியரை வெற்றிகரமாக எதிர்த்தனர்.

ஜப்பானுக்கு அனுப்பவேண்டிய கடிதத்தைப் பற்றி ஒன்பது வல்லரசுகள் மகாநாட்டில் விவாதம் நடைபெற்றது.

6உ:—ஜப்பானுக்குக் கீழ்கண்ட கடிதத்தை பிரஸ்ஸெல்ஸ் மகாநாடு அனுப்பியது.

"சீனுவில் நாடுபிடிக்க வேண்டுமென்ற அபிலாஷை ஜப்பானுக்கு இல்லை. அந்நாட்டின் ஒழுக்கமும் செல்வமும் அபிவிருத்தி யடைவதற்கு உதவி யளிக்கவே, ஜப்பான் விரும்புகிறது. வெளி வல்லரசுகளின் ஒத்துழைப்புடன் அந்நாட்டுடனிருந்து வரும் நாகரிக, பொருளாதார சம்பந்தங்களைப் பலப்படுத்த ஜப்பான் விரும்புகிறது. வெளி நாடுகளுக்குள்ள உரிமைகளையும் அவற்றின் க்ஷேமலாபங்களையும் கௌரவிப்பது ஜப்பானின் உத்தேசம். இவ்வளவு வல்லரசுகள் சேர்ந்த கூட்டம் நிலைமையைச் சிக்கலாக்கிவிடத்தான் செய்யும்."

ஜப்பானின் கடிதத்தில் கண்டுள்ள மேற்படி விஷயங்களை மகாநாடு கவனித்ததாக ஜப்பானுக்கு அனுப்பியுள்ள பதில் கூறுகிறது. பதிலிலுள்ள மேல் விவரங்களாவது:—

"ஒன்பது வல்லரசுகளின் உடன்படிக்கையில் கையெழுத்துச் செய்துள்ள நாடுகளெல்லாம் உடன்படிக்கைப் படி தங்களுக்குள்ள உரிமைகளை உபயோகிக்க அதிகாரமுள்ளவர்கள். கீழ்க்கோடியில் சிரத்தையுள்ள எல்லா நாடுகளும் இந்த யுத்தத்திஞல் பாதிக்கப்பட்டுள்ளன.

இருந்தபோதிலும், 9 வல்லரசுகள் உடன்படிக்கையின் வரம்புக்கு உட்பட்டுப் பொறுக்கி யெடுக்கப்படும் சில வல்லரசுகளடங்கிய ஒரு கமிட்டியைச் சந்தித்துப் பரஸ்பரம் அபிப்பிராயங்களைப்பரிமாறிக்கொள்வதற்கு,ஜப்பான் பிரதிநிதிகளை நியமிக்க வேண்டுமென்று, மகாநாடு யோசனை கூறுகிறது."

இந்த யோசனைக்கு ஜப்பானிய சர்க்கார் சீக்கிரத்தில் பதிலனுப்ப வேண்டுமென்றும் மகாநாடு கேட்கிறது.

7வ:—பொதுவுடைமை-எதிர்ப்பு உடன்படிக்கையில் இத்தாலியும் கையெழுத்கிட்டது. "20 கோடி ஜனங்களையும் 20 லக்ஷம் டன் யுத்தக் கப்பல்களையும் இந்த ஒப்பந்தம் ஒன்ருகப் பிணைத்திருக்கிறது. இன்று முடிவு பெற்ற இந்த ராஜிய எற்பாட்டின் கருத்தை 3 தேசங்களின் சேர்ந்த ஆயுத பலம் திட்டமான எச்சரிக்கை போல் எடுத்துக் காண்பிக்கிறது" என்று முஸோலினி கூறினர்.

"சீன-ஜப்பானியத் தகராறை பிரஸ்ஸெல்ஸ் மகாநாடு தீர்த்துவைப்பது சாத்தியமல்ல......இத்தாலி,

ஜெர்மனி, ஜப்பான் மூன்றும் செய்துகொண்டுள்ள உடன்படிக்கையின் உண்மையான கருத்தைப் பிரிட்டன் தெரிந்துகொள்ளும் என்று நான் நிச்சயமாய் நம்பு கிறேன். அது இன்னம் நன்ருய்த் தெரிவதற்கு வேண்டிய விரிவான நடவடிக்கைகளை எடுத்துக்கொள் ளப்போகிறேன்" என்று ஜப்பானிய வெளிநாட்டு மந் திரி ஸ்ரீ ஹிரோடா தெரிவித்தார்.

8௳ :—ஷாங்ஹாயில், சீனர், ஒவ்வொரு அங்குல மாகப் போரிட்டுப் பின்வாங்கினர். ஷான்ஸி தலைநகர் டாயுவான் ஜப்பானியர் வசமாயிற்று. ஷாங்ஹாயில் சீனர் கடைசியாக எதிர்த்து நின்றனர்.

1914-ல் இருந்த உலக நிலைமை இப்பொழுது வந்து விட்டதாக பிரெஞ்சு உதவி முதல் மந்திரி ஸ்ரீ லியான் புளூம், சோஷலிட்ஸ் கக்ஷியின் கூட்டத்தில் தெரிவித்தார். பிரிட்டனும் ரஷ்யாவும் ஒன்று சேருவது சமாதானத்துக்கு அத்தியாவசியம் என்று அவர் கருதினர்.

இத்தாலி, பொதுவுடைமை எதிர்ப்பு உடன்படிக்கை யில் சேர்ந்தது தங்களுக்கு விரோதமான செய்கை யென்று ரஷ்ய சர்க்கார் கருதுவதாக ரோமாபுரியிலிருந்த ரஷ்ய ஸ்தானுதிபதி தெரிவித்தார்.

9௳ :—ஷாங்ஹாயில் மூர்க்கமான போர் நடை பெற்றது, 10,000 சீனத் துருப்புகள் சிறைப்பட்டன. பின் வாங்கிய துருப்புகள் மீது விமானங்கள் குண்டு

களை வீசின. வடசீனுவில் 6 சைன்யங்கள் ஜப்பானியர் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தின.

உலகமெங்கு முள்ள பிரெஞ்சு காலனிகளுக்கு, பிரெஞ்சு போர் விமானங்கள், ஒத்திகையாகப் பறந்து சென்றன.

பிரஸெல்ஸ் மகாநாட்டிலிருந்து ரஷ்ய வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ லித்வினுப் வெளியேறினுர். கீழ்க்கோடி விவகாரத்தைப்பற்றி கவனிப்பதற்காக நியமிக்கவிருந்த நடைமுறைக் கமிட்டியிலிருந்தும், சிறிய மத்தியஸ்தக் கமிட்டியிலிருந்தும் ரஷ்யாவை நீக்கிவிடுவதற்காக நடைபெற்ற சூழ்ச்சிகளைக் கண்டிப்பதற்கு அறிகுறியாகவே ஸ்ரீ லித்வினுப் இம்மாதிரி செய்தார்.

மகாநாட்டின் கடிதத்துக்கு ஜப்பானின் பதிலை எதிர்நோக்கி அடுத்த கூட்டம் ஒத்திவைக்கப்பட்டது.

10உ: ஷாங்ஹாய்க்குத் தென்புறம் நான்டோவில் சீனர் கடுமையாய் எதிர்த்துப் பார்த்தனர். ஏராளமான பேர்கள், பிரெஞ்சுக் குடியேற்றத்தில் சரண் புகுந்தனர்.

11உ: யுத்த நஷ்டம் போதாதென்று இயற்கையும் சீனுமீது சீறி விழுந்தது. மஞ்சள் நதி உடைப்பெடுத்துக் கொண்டு, ஷாண்டுங் மாகாணத்தில் ஐந்தில் ஒரு பாகம் வெள்ளக் காடாகி விட்டது. 20 லக்ஷம் சீனர்கள் வீடு வாசலிழந்து பட்டினியால் பரிதவித்தனர்.

ஷாங்ஹாய் அநேகமாய் ஜப்பானியர் வசமாய் விட்டது. பெம்புரோக் ஸ்டீபன்ஸ் என்ற பத்திரிகை நிருபர்

ஜப்பானிய மெஷின்கன்களுக்குப் பலியானார். ஷாங்ஹாயிலிருந்த ஜப்பானிய தளபதி ஜெனரல் மாட்ஸுயி நடுநிலைமையை மீறியதாக ஸர்வதேச குடியேற்ற அதிகாரிகள்மீது குற்றம் சாட்டினார். "ஜப்பானிய ஸைன்யம் சீனுவுக்குச் சென்றது கடவுளின் ஆணைப்படிதான்" என்று அவர் சமாதானம் கூறினார்.

தென் அமெரிக்காவில், உலக ராஜீயப் போக்கைக் கலக்கிய ஒரு சம்பவம் நிகழ்ந்தது. மிகப் பெரிய தென் அமெரிக்கக் குடியரசாகிய பிரேஸிலின் தலைவர் வர்காஸ் முனிசிபாலிடிகள், பார்லிமெண்டுகள் போன்ற எல்லாப் பிரதிநிதி ஸ்தாபனங்களையும் கலைத்துவிட்டு ஒரு பாஸிஸ்ட் சர்க்காரை ஸ்தாபித்தார். அமெரிக்கா, கீழ்க்கோடி விவகாரத்தில் பூரா கவனம் செலுத்தாமலிருப்பதில் ரோம்-பெர்லின்-டோகியோ திரிகோண சக்ரவ்யூஹத்துக்கு சிரத்தையுண்டு. தென் அமெரிக்காவிலேயே பாஸிஸம் உறுமத் தொடங்கினுல், அமெரிக்க கடற்படையில் பெரும் பகுதி. பனுமா பிரதேசத்தைக் காக்க வேண்டியிருக்கும். ஜப்பானை எதிர்க்க சுலபத்தில் வராது என்பது முஸோலீனியின் துணிபு. ஆகவே, சரியான தருணம் பார்த்து, அவர் சொற்படி வர்காஸ் யுத்த வெறிக்கு முதற்படியான பாஸிஸத்துக்கு வேரூன்றினார்.

12உ: "பிரஸ்ஸெல்ஸுக்கு வரமுடியாது. சீனு நேரடியாக ஸமாதானம் பேசட்டும். இது தற்காப்பு யுத்தமே. எங்களைக்குற்றவாளிகள் என்று சொல்லிவிட்டு அழைப்பு அனுப்புவானேன்?" என்று ஜப்பான் பதிலனுப்பி

விட்டது. யுத்தத்தை முடுக்கி, கிழக்கோடியில் சமாதானத்தை நிலைநாட்டவேண்டுமென்று ஜப்பானிய சக்ரவர்த்தி துருப்புகளை உற்சாகப்படுத்தினர்.

ஷாங்ஹாயில் அமெரிக்க ஆஸ்பத்திரிமீது ஜப்பானிய குண்டுகள் விழுந்தன.

13உ ஜப்பானை 9 வல்லரசுகள் மகாநாடு கண்டித்தது. ஒரு கண்டன யாதாஸ்து தயாரிக்கப்பட்டு, மகாநாட்டுக்குப் பிரதிநிதிகளை அனுப்பிய சர்க்கார்களின் அங்கீகாரத்துக்காக அனுப்பப்பட்டது. ஜப்பானும் சீனுவும் நேரடியான போரம் நடத்துவதால், காலவரம்பின்றி யுத்தம் நீடிக்கத்தான் செய்யும் என்று அறிக்கை அபிப்பிராயப்பட்டது.

ஜப்பானுக்கு யுத்த சப்ளைகளை நிறுத்திவிட்டு, சீனுவுக்கு உதவியளிக்கவேண்டுமென்று சீனப் பிரதிநிதி ஸ்ரீ வெல்லிங்டன் கூட கேட்டுக்கொண்டார்.

16உ: சீன சர்க்கார் நான்கிங்கிலிருந்து தங்கள் காரியாலயங்களை வேறிடம் மாற்றினர். சுகாதாரம், நிதி மந்திரி, வெளிநாட்டு மந்திரி இலாகாகள் நான்கிங்கிலிருந்து 350 மைலிலுள்ள ஹாங்கோவுக்கும், யுவான் என்ற மத்திய நிர்வாக சபையும், இதர கவுன்சில்களும் ஷேக்வான் மாகாணத்திலுள்ள சுங்கிங் (நான்கிங்கிலிருந்து 1000 மைல்) என்றவிடத்துக்கும் மாற்றப்பட்டன. நான்கிங்கிலிருந்து பிரஜைகளை வெளியேற்றும் வேலையும் முடுக்கிவிடப்பட்டது. ஷாங்ஹாய்க்கு 2½ லக்ஷம் ஜப்பானியத் துருப்புகள் வந்துவிட்டனர்.

அதுவரை சீனா இழந்தது 8 லக்ஷம் பேர்கள் என்று செஞ்சிலுவை ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஸ்ரீ வாடேவில் என்பவர் தெரிவித்தார்.

17 உ: பிரஸ்ஸெல்ஸ் மகாநாட்டில் ஒப்புக்கொள்ளப்பட்ட கண்டன அறிக்கையைக் கண்டு ஜப்பான் சீற்றமடைந்தது. 'சீனாவில் கை வைக்காதே' என்று அந்த வல்லரசுகளுக்கு அவை அழுத்தமாய் உபதேசம் செய்தன. ஜப்பான் திறந்துவிட்ட ஒத்துழைப்புப் பாதையைப் பயன்படுத்திக் கொள்ளும் சாதுர்யமும் திறமையும் பிரஸ்ஸெல்ஸ் மகாநாட்டில் கூடியவர்களுக்கு இல்லையென்று ஜப்பானிய சர்க்கார் சம்பந்தமுள்ள ஒரு அறிக்கை வெளியாயிற்று.

ஷெக்பானிலிருந்து நான்கிங் தற்காப்புக்காக 1,50,000 துருப்புகள் வந்தன.

இந்தோ சீனா வழியாக சீனாவுக்கு பிரான்ஸ் யுத்த தளவாடங்களை அனுப்பியதாக ஜப்பான் புகார் செய்தது.

18உ: ஜெனரல் பிராங்கோவை ஜப்பான் அங்கீகரித்தது. இத்தாலியும் ஜெர்மனியும் மஞ்சுகோவை அங்கீகரித்தன.

ஷாங்ஹாய் ஸர்வதேசக் குடியேற்றத்தில் ஜப்பானியர் கொள்ளையடித்தனர். ஷாங்ஹாய் போரில் மாண்டவர்களும் காயமடைந்தவர்களும் 2,30,000. இவர்களில் 25,000 பேர் ஜப்பானியர்.

19உ: ஷாங்ஹாய்க்கும் நான்கிங்குக்கு மிடையே யுள்ள ஸூசோவில் மும்முரமான போர் நடைபெற்றது. ஜெனரல் லியூ-டோ-சுவான் என்பவரின் கீழ்ப் போரிட்ட துருப்புகள், மேலிடமிருந்து உத்தரவின்றிப் பின்வாங்கியதால் அனர்த்தம் நேரிட்டது. ஜப்பானியர் அவர்களை வெருட்டியடித்து, நான்கிங்கை நோக்கி முன்னேறுவது எளிதாய்விட்டது.

21உ: ஷாங்ஹாயில் ஜப்பானுக்குத்தான் ஆதிபத்தியம் உண்டு என்று ஜப்பானிய சர்க்கார் ஒரு அறிக்கை விடுத்தனர். ஸ்வதேசக் குடியேற்றம், தங்கள் அதிகார எல்லைக்கு உட்பட்டதென்றும், பாங்குகளையும் சகல ஸ்தாபனங்களையும் தங்களிடம் ஒப்படைக்க வேண்டுமென்றும், பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா மூன்றுக்கும் நோட்டீஸ் அனுப்பினர்.

ஷாங்ஹாயில் ஜப்பானுக்கு எதிராகச் சீனர் நடத்தும் பிரசாரமெல்லாம் அடக்கப்படவேண்டும்: சீன தேசியக் கக்ஷியாகிய கோமிண்டாங் உட்பட ஜப்பானுக்கு எதிரிடையான எல்லா ஸ்தாபனங்களும் கலைக்கப் படவேண்டும். சீனர் நடத்தி வரும் எல்லாத் தணிக்கைகளும் நிற்கவேண்டும். சீன சர்க்காரின் ஸ்தாபனங்களெல்லாம் கலைக்கப்பட வேண்டும். சீன அதிகாரிகள் மீது கண்காணிப்பு இருக்க வேண்டும். ஏற்றுமதி இறக்குமதி வரிகளை வசூலிக்கும் கஸ்டம்ஸ் காரியாலயங்கள், தபால், தந்தி, சர்வீஸ்கள்மீது ஆதிக்கம், ஸர்வ

தேசக் குடியேற்றத்தில் காவலிருந்து வரும் சீனத் துருப்புகளை ஒப்படைக்க வேண்டும். ஜப்பானியர் விரும்பாத சீனர்களை ஸர்வதேசக் குடியேற்றத்திலிருந்து அடியோடு வெளியேற்றுவது, சீன சர்க்கார் பாங்குகளை மூடுவது, ஸர்வதேசக் குடியேற்றத்தின்மீது ஆதிபத்ய உரிமை—இவைதான் ஜப்பானின் கோரிக்கைகள். இவற்றை ஸர்வதேச பிரெஞ்சு குடியேற்றங்களின் முனிசிபல் கவுன்சிலர்கள் நிறைவேற்றி வைக்கத் தவறினால், தான் அவசியமெனக் கருதும் நடவடிக்கைகளை ஜப்பானிய ராணுவம் எடுத்துக்கொள்ளும் என்று ஜெனரல் மாட்ஸூயி எச்சரித்தார்.

22உ :—பிரஸெல்ஸ் மகாநாடு, சுவான மண்டலம் போட்டுக்கொண்டு சுருண்டு விட்டது. சமரஸம் செய்துவைக்கப் பக்குவமான நிலைமை ஏற்பட்டதாகத் தோன்றும் வரையில் மகாநாட்டை ஒத்திவைப்பதென்று தீர்மானித்து வல்லரசுகள் சீனப் பிரச்னையைக் கைகழுவிவிட்டன. மீண்டும் பயன்தரத்தக்க விதத்தில் மகாநாட்டின் நடவடிக்கைகள் ஆரம்பமாகலாம் என்று தலைவரும் இரண்டு மெம்பர்களும் கருதும்போது அதைக் கூட்டலாமென்று தீர்மானிக்கப்பட்டது.

ஷாங்ஹாயின் ஸர்வதேசக் குடியேற்ற முனிசிபல் நிர்வாகத்தைச் சீன சர்க்காரின் சம்மதமின்றி மாற்ற முடியாதென்று ஸ்ரீ ஈடன், பார்லிமெண்டில் தெரிவித்தார்.

23உ: ஜப்பானின் கோரிக்கைகளுக்கு ஸர்வதேசக் குடியேற்ற முனிசிபாலிடியார் ஒருவாறு இணங்கினர். 5 சீனப் பத்திரிகைகளை நிறுத்தி விட்டனர்.

ஐம்பது ஸோவியத் விமானங்கள் சீனுவுக்கு வந்தன.

ஸயாமுடன் பிரிட்டன் புதிய நேச ஒப்பந்தத்தைச் செய்து கொண்டது.

24உ: வல்லரசுகள் சமாதானத்தை நிலைநாட்டுவதற்காகக் காரியத்தில் இறங்கவேண்டுமென்றும், ரஷ்யா தன் கடமையைச் செய்தாய் விட்டதென்றும், லண்டனிலுள்ள ஸோவியத் ஸ்தானுதிபதி ஸ்ரீ மெய்ஸ்கி உருக்கமாக வல்லரசுகளை வேண்டிக் கொண்டார்.

25உ: ஷாங்ஹாய் சுங்கவரி வசூல் ஸ்தாபனத்தை ஜப்பான் கைப்பற்ற பிளான் போட்டது. ஸர்வ தேசக் கடன்களுக்கு சுங்க வரி வருமானமே ஈடுகாட்டப் பட்டதால், ஜப்பானும் அந்த விதாசாரப் பொறுப்புகளைக்கவுரவிக்கும் என்ற உத்தரவாதம் அளிக்கப்பட்டது.

சியாங்-கே-ஷேக் போரை நிறுத்திக்கொள்ள வேண்டுமென்றும், வெளிநாடுகள், ஜப்பான் சம்பந்தமாய்த் தம் மனப்பான்மையை மாற்றிக்கொள்ள வேண்டுமென்றும் ஜெனரல் மாட்ஸுயி தெரிவித்தார்.

நவ 27உ: "இங்கிருந்து, மத்திய ஐரோப்பா வழியாக ரோமாபுரியுடன் தொடர்பு ஏற்படுத்தும் உருக்கு அச்சு, இப்போது டோக்கியோவரை வியாபிக்கிறது" என்று ஜெனரல் கோயரிங் பெர்லினில் உறுமினர்.

28உ: ஷாங்ஹாயில் ஜப்பானிய ஆதிக்கம் பூர்ணமாயிற்று. சீன சுங்க வரி வசூல் நிர்வாகம், தங்கள் ஆதிக்

கத்தின் கீழ் வந்துவிட்டதாக ஜப்பானியர் கூறினர். பிரிட்டனும் பிரான்ஸும் ஆட்சேபித்தன.

ஹோனன் மாகாணம் சீனமத்ய சர்க்காரின் ஆதிக்கத்திலிருந்து தனியாகப் பிரிந்து ஒரு சுதந்திர சர்க்காரை ஏற்படுத்திக் கொண்டுவிட்டதாக ஜப்பான் அறிவித்தது. சீனாவின் பல பாகங்களில் இத்தகைய ஸ்தலசர்க்கார்கள் கிளம்பக்கூடுமென்றும் ஜப்பானியர் அவர்களுடன் ஒத்துழைப்பார்கள் என்றும் அறிவிக்கப்பட்டது.

29௳ : கீழ்க்கோடி விவகாரங்களைப் பற்றி பிரிட்டனும் பிரான்ஸும் ஆலோசித்தன.

மஞ்சுகோவை இத்தாலியும் பிராங்கோவை ஜப்பானும் அங்கீகரித்தன.

எந்த எதிரியையும் தனித்து நின்று தோற்கடிப்பதற்கு வேண்டிய ராணுவபலம் ரஷ்யாவுக்கு இருப்பதாக, ஸ்ரீலிட்வினுப், தம் தேர்தல் பிரசாரத்தில் தெரிவித்தார்.

நவ. 30 : —ஷாங்ஹாயில் இத்தாலியப் படகுகள் இரண்டையும் ஒரு அமெரிக்கப் படகையும் ஜப்பானியர் கைப்பற்றி இத்தாலிய, அமெரிக்க கொடிகளை அவமதித்தனர். பிரிட்டிஷ் விமானமொன்று ஹாங்காங் அருகில் தாக்கப்பட்டது.

டிச. 1 : பிரிட்டனில் மொத்தம் 16 கோடி சீன டாலர்கள் இருப்பதாக அறிவிக்கப்பட்டது. சீனத் தலைவர்கள் ஹாங்காங் வந்து ராஜீய சதிகளை செய்வதா

யும் அது நிற்காவிடில் சீன-ஜப்பானிய யுத்தத்தில் ஹாங் காங்கையும் சேர்க்கவேண்டி யிருக்கும் என்று ஹாங் காங்கிலுள்ள ஜப்பானிய ஸ்தானீகர் எச்சரித்துவிட்டு, பிறகு அதை மழுப்பிவிட்டார்.

"ஜப்பானிய சக்ரவர்த்தி போகும் பாதை-ஹாங்கோ, ஹாங்காங், ஸிங்கப்பூர், பர்மா, அஸ்ஸாம், வங்காளந்தான் என்பது தெளிவான விஷயம். அவருடைய ராணுவத்தைத் தடுத்து திட்டமாய் நிறுத்த ஐரோப்பாவுக்குக் குறைந்த வேறு எவராலும் முடியாது.

"பிரான்ஸ், பிரீட்டன் இரண்டு நாடுகளின் இராணுவ இலாகா தலைவர்கள் மட்டுமின்றி எல்லா ஐரோப்பிய நாடுகளின் இராணுவத்தலைவர்களும் கூடி கீழ்க்கோடி பிரச்னையைச்சமாளிக்க என்ன நடவடிக்கை எடுப்பதென்று விவாதிக்கவேண்டிய இத்தருணத்தில். நாய்கள் எலும்புத்துண்டுக்காக அடித்துக்கொள்வதுபோல, 1937 முழுவதிலும், ஐரோப்பிய நாடுகள் உறுதியாயுள்ள ஸ்பெயினைப்பற்றி தகராறு செய்துகொண்டிருந்தது எவ்வளவு அட்டூழியமான வேலை என்று இனி வரும் சந்ததிகள் நினைக்கமாட்டார்களா?

"ஸிங்கப்பூரில் இல்லாமல் இலங்கையிலிருக்கும் திரிகோண மலையில்தான் கடற்படை தளம் இருக்கவேண்டுமென்று நான் வற்புறுத்தி வந்திருக்கிறேன்" என்று ஜெனரல் ஸர். அயான் ஹாமில்டன், ராயல் ஸ்காட்டிஷ் கார்ப்பொரேஷன் விருந்தின்போது கூறினர். இவர் முதிர்ந்த அநுபவமுள்ள பிரிட்டிஷ் தளகர்த்தர்.

மஞ்சுகோவில் ஜப்பான் தன் விசேஷ உரிமைகளை விட்டுக் கொடுத்து விட்டதாக அறிவிக்கப்பட்டது. ஹாங்காங் அருகில் ஒரு தீவில் ஜப்பானியத் துருப்புகள் இறக்குமதி செய்யப்பட்டன.

பிராங்கோ சர்க்காரை மஞ்சுகோவும், மஞ்சு கோவை பிராங்கோவும் அங்கிகரித்தனர்.

டிச: 2. நான்கிங்கிலிருந்த ஜெர்மன் ஸ்தானாதிபதி டாக்டர் டிராட்மன் சமரஸம் செய்து வைக்க முயற்சித்தார். முஸொலீனியும் சமாதானம் செய்துகொள்ளுமாறு சீனாவுக்கு உபதேசித்தார்.

ஹாங்காங்கில் விமானத் தற்காப்பு ஏற்பாடுகளைப் பிரிட்டிஷார் பலப்படுத்தினர்.

போட்டா போட்டியாக மூன்று திசைகளிலிருந்து நான்கிங்கை நோக்கி ஜப்பானியத் துருப்புகள் முன்னேறின. வடக்கே ஸிங்டாவில் ஜப்பானியத் துருப்புகளை இறக்கமுடியாமற் செய்ய, சீனர் அந்தத் துறைமுகத்தையே நாசமாக்கினர்.

டிச. 3: ஷாங்ஹாயில் ஸர்வதேசக் குடியேற்றத்தில் ஜப்பானியர் ஒரு வெற்றி ஊர்வலம் நடத்தினர். இந்திய சோல்ஜர்கள் ஊர்வலத்தின்முன் சென்றனர். ஒரு சீனன் குண்டு வீசினான். அதிலிருந்து பிரமாதமான நிலைமை ஏற்படும் போல் தோன்றியது. ஆனால், பிரிட்டிஷ் அதிகாரிகள் சாதுரியமாக நிலைமையைச் சமாளித்து விட்டனர்.

ஸர்வதேசக் குடியேற்றங்கள் நடு நிலைமைப் பிரதேசங்க ளல்லவென்றும், அங்கு அமைதியற்ற நிலைமை இருந்துவருவதை உத்தேசித்து, ஜப்பானிய ராணுவம் அதைக் கண்காணிக்கும்படி நேரிடுமென்றும் ஜப்பானிய ராணுவத்தின் விளம்பர அதிகாரி தெரிவித்தார்.

ஜெர்மனி சமாஸம் செய்துவைப்பதில் சிரத்தை காட்டுவதன் நோக்கம் வெளிப்பட்டது. ஸோவியத் ரஷ்யாவைக் கிழக்கீதிசையில் தாக்குவதற்கு வேண்டிய தளவாடங்களையும் பலத்தையும் சக்தியையும், சீனுவின் உட்புறத்தில் பிரவேசித்து, ஜப்பான் வியர்த்தமாக்காமலிருக்கவேண்டும் என்று ஜெர்மனி கவலைப்படுவதுதான் காரணம்.

டிச. 5: ஸூ-ஸி-வேன் என்பவனை ஜப்பானியர் ஷாங்ஹாயின் மேயராக்கினுர்கள். அது ஒரு 'சுதந்திர' நகரமாய்விட்டதாக அறிவிக்கப்பட்டது.

ஸர்வதேசக் குடியேற்றத்தில் 6 ஜப்பானியக் குதிரை வீரர்கள் கலாட்டாச் செய்தனர். அமெரிக்கா கண்டிக்கவே மன்னிப்புக் கேட்டனர். ஜப்பானியத் துருப்புகள் முதலில் வாபஸானுல்தான் சமரஸம் பேசமுடியுமென்று சியாங்-கே-ஷேக் கண்டிப்பாய்த் தெரிவித்து விட்டார்.

2 பிரிட்டிஷ் கப்பல்களை ஊஹூ அருகில், யாங்ட்ஸீ நதியில் ஜப்பானிய விமானங்கள் தாக்கி, அவற்றின்மீது மெஷீன்கன் பிரயோகம் செய்தன. இரண்டு கப்பல்களும் மிகவும் பழுதடைந்தன.

டிச. 6: சீனத் தலைநகராகிய நான்கிங்கை ஜப் பானியர் நெருங்கிவிட்டனர். சீனாவின் எதிர்ப்பை ஜப்பானியரின் கடுமையான முற்றுகை உடைத்து விட்டது.

ஷாங்ஹாயில் பிரிட்டிஷ் ஹோட்டலை ஜப்பான் முற் றுகை போட்டு, பிறகு மன்னிப்புக் கேட்டது.

டிச. 8: சியாங்-கே-ஷேக் தம்பதிகள் நான் கிங்கிலிருந்து தங்கள் ஆஸ்ட்ரேலிய நண்பர் ஸ்ரீ டோனால்டுடன் விமானத்தில் ஹாங்கோ செல்கை யில், அவர்களைக் கொல்ல ஜப்பானிய விமானங்கள் முயற்சித்துப் பார்த்தன.

நான்கிங்கிக்கு வெளியே வசதியான இடங்களை ஜப்பான் பிடித்துக்கொண்டது. 90 விமானங்கள் கடுமை யாகத் தலைநகர்மீது குண்டுகளை வீசின.

ஷான்ஸியில் சீனருக்குப் பெரிய வெற்றி கிடைத் தது. இழந்த பலவிடங்களை அவர்கள் ஷாண்டுங் மாகாணத்தில் பிடித்தனர்.

சியாங்-கே-ஷேக் ராஜிநாமாச் செய்வாரென்ற வதந்திகள் ஆதாரமற்றவை என்று மறுக்கப்பட்டன.

டிச. 9: நான்கிங் முற்றுகை மும்முரம். கோட்டை வாயில்களை ஜப்பானியர் தகர்த்தனர்.

டிச. 10: நான்கிங்குக்குள் ஜப்பானியர் பிர வேசித்து விட்டனர். பிரிட்டிஷ் படகில் ஜப்பானியக் கொடி பறக்க விடப்பட்டது.

இத்தாலியிலிருந்து கீழ்க்கோடிக்கு ஏராளமான ஆயுதங்கள் வந்தன.

டிச 11. 12: நான்கிங்கில் தீரமான சீன எதிர்ப்பு உடைந்தது. ஷாங்ஹாய்க்குத் தென்புறமுள்ள நான்டோவும் ஜப்பானியர் வசமாயிற்று. ஜப்பானிய யுத்தக் கப்பல், யாங்ட்ஸீ நதியில் சீனர் போட்டிருந்த அடைப்புக்களை உடைத்து மேலே வந்து நான்கிங்மீது பீரங்கிப் பிரயோகம் செய்யவாரம்பித்தன.

டிச 12: இத்தாலி சங்கத்திலிருந்து விலகிவிட்டது. அதனால் ஸர்வதேச உஷ்ணம் பல டிகிரி ஏறிவிட்டதாகக் கருதப்பட்டது. ஜெர்மனியும் சங்கத்துக்குத் திரும்பமாட்டாது என்று அறிவிக்கப்பட்டது. ஆகவே, யுத்த வெறி கொண்ட 3 நாடுகளும், திரிகோண சக்ர வியூஹத்தை மிக்க பலப்படுத்திக் கொண்டன.

டிச 11: யாங்ட்ஸீ நதியில் நான்கிங் அருகில், "லேடிபர்ட்", "பீ" என்ற இரண்டு பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்களை ஜப்பானியர் தாக்கினர்.

"பானே" என்ற அமெரிக்க யுத்தக் கப்பல்மீது 2 மணி நேரம் ஜப்பானிய விமானங்கள் குண்டுவீசி, படகுகள் மெஷீன்கன் பிரயோகம் செய்து அதை மூழ்கடித்தன.

இரண்டு நாடுகளும் மிகவும் கண்டிப்பான ஆட்சேபணைகளை அனுப்பின.

டிச 13: நான்கிங் பரிபூர்ணமாய் ஜப்பானியர் வசமாயிற்று. பின்வாங்கிய சோல்ஜர்கள் மூழ்கடிக்கப்பட்டனர்.

பிரிட்டனுடன் அமெரிக்கா சேராமல் தடுக்க வேண்டுமென்று ஜப்பானிய சர்க்கார் விசேஷக் கவலைப் பட்டனர். தாமதமின்றி, அமெரிக்க ஸ்தானீகனை, ஜப்பானிய வெளிநாட்டு மந்திரியே கண்டு மன்னிப்புக் கேட்டார். வாஷிங்டனிலுள்ள ஸ்தானாதிபதியும் அமெரிக்க சர்க்காரை மன்னிப்புக் கேட்டார். நஷ்ட ஈடு கொடுப்பதாக வாக்களித்தனர். விசாரணை நடத்துவதாகக் கூறினர். இனி அத்தகைய சம்பவங்கள் நடை பெருமல் தடுப்பதாக உத்தரவாதம் அளித்தனர். பிரிட்டனிடமும் அதேமாதிரி மன்னிப்புக் கேட்கப் பட்டது.

ஆனால் அதே தினத்தன்று வூஹூ பிரதேசத்தில் ஜப்பானிய தளகர்த்தர், கர்னல் ஹாஷிமோடோ ஒரு எச்சரிக்கை விடுத்தார். அடுத்த மூன்று தினங்களில் யாங்ட்ஸீ நதியில் போகும் எல்லாக் கப்பல்களையும் சுட்டு மூழ்கடிக்குமாறு தனக்கு உத்தரவென்று கூறினார். இது, ஜப்பானிய மன்னிப்பின் பலத்தைக் குறைத்துவிட்டது.

டிச 14: வடசீனவில் ஜப்பான், தன் ஆதீனத்துக்கு உட்பட்ட ஒரு போட்டி சீன சர்க்காரை பீகிங்கில் ஸ்தாபித்தது. வடசீன முழுமையிலும், யாங்ட்ஸீ பிரதேசத்திலும் தன் செல்வாக்கு விஸ்தரிப்பதற்காக இந்த சர்க்கார் பாடுபடுமேன்று அறிவிக்கப்பட்டது. ஷான்ஸி, ஹோனன், வட ஷாண்டுங் சுதந்திர சர்க்கார்களும் இந்த

சர்க்காரின் ஆதீனத்தில் வந்து விடுமென்றும் அறிவிக்கப் பட்டது.

டிச. 15: 'பானே' சம்பவத்தை அமெரிக்கா இலேசாக மதிக்கவில்லை. ஜப்பானிய சக்ரவர்த்தியே மன்னிப்புக் கேட்கவேண்டுமென்று தலைவர் ரூஸ்வெல்ட் கோரினர். சக்ரவர்த்தியைக் கடவுளாக ஜப்பானியர் மதிப்பதால், அவர் சற்று சினந்தாலும், பல உயர்தர ராணுவ அதிகாரிகள், ஹராகிரி (தற்கொலை) செய்து கொள்ளவேண்டிய நிலைமை ஏற்படும். ஆகவே, அவர்கள் தர்ம சங்கடமான நிலைமையில் இருந்தனர்.

இதற்கிடையே, ஜப்பான் ஜெர்மனியையும் இத்தாலியையும் பாஸிஸ்ட் போக்கில் பூர்ணமாகப் பின்பற்ற ஆரம்பித்தது. ராஜீயக் கக்ஷிகளைக் கலைத்துவிட்டு, ஒரே தேசிய சர்க்காரை ஏற்படுத்த வேண்டுமென்று, செல்வாக்கு நிறைந்த கரும்பறவை நாகம் என்ற ஸ்தாபனம் தேசத்துக்கு ஒரு விக்ஞாபனம் விடுத்தது.

ஷாங்ஹாயிலிருந்தும் நான்கிங்கிலிருந்தும் 50,000 ஜப்பானிய துருப்புகள் தெற்கு நோக்கிச் செல்ல வாரம்பித்தன. குவாங்டுங் தலைநகராகிய காண்டன்தான் அவர்களுடைய அடுத்த இலக்கு என்பது புலப்பட்டது. இவ்வாறாக, வடக்கே ஹோபெய்-சாஹார் முதல் தென் கோடியில் குவாங்டுங் உட்பட, சீனக் கடற்கரையை அடுத்துள்ள ஒரு மாகாண வரிசையை ஸ்வீகரித்துக் கொள்ளும் வேலையில் ஜப்பான் மும்முரமாய் இறங்கியது.

டிச. 16: 'பானே' சம்பவத்துக்காக ரியர் அட்மிரல் மிட்ஸுநாமியை ஜப்பானிய சர்க்கார் வேலையிலிருந்து நீக்கியதாக அறிவிக்கப்பட்டது.

போர்முனையிலிருந்து சியாங்-கே-ஷேக், ரேடியோ மூலம் தேசமக்களுக்குக் கீழ்கண்ட விக்ஞாபனத்தை விடுத்தார்.

"இப்போதைய நிலைமை எவ்வாறு மாறிய போதிலும் நாம் பணிந்துவிடக் கூடாது. முன்னேறிக் கொண்டிருக்க வேண்டும்.

"யுத்தம் ஆரம்பமானதுமுதல் எல்லாப் போர் முனைகளிலுமாக 3லக்ஷம் சீனத் துருப்புகளுக்குமேல் நஷ்டமாயிருக்கின்றன. சாதாரணப் பிரஜைகளின் உயிருக்கும் சொத்துக்கும் ஏற்பட்டிருக்கும் நஷ்டத்தை மதிப்பிட முடியாது.

"என் உடலில் உயிர் இருக்கும் வரை, என்னுயிர் அவ்வரை எதிர்த்து நின்று இறுதியில் தேசத்திற்கு வெற்றியைச் சம்பாதித்துக் கொடுக்கப் பாடுபடுவேன்.

"இப்போதைய நிலைமை சீனுவுக்கு அநுகூலமாயிருப்பதாக நாம் நிச்சயமாக நம்புகிறோம். சீனு நீடித்து எதிர்த்து வெற்றி பெறப் போகிறது. இந்த எதிர்ப்பை நான்கிங்கிலோ அல்லது பெரிய நகரங்களிலோ காண முடியாது. சீனு வெங்குமுள்ள கிராமங்களில், மக்களின் உறுதியான பிடிவாதத்தில் அதைக் காணலாம். ஜப்பானின் ராணுவ பலம் அடியோடு குன்றிப்போகும் காலம்

வந்துதான் தீரும். அதன் மூலம் இறுதியான வெற்றி நமக்குக் கிடைக்கப் போகிறது."

பிரிட்டனிடமும் இத்தாலியிடமுங் கூட ஜப்பான் மன்னிப்புக் கேட்டது. இத்தாலிய நிருபர் ஒருவர் "பானே" குண்டுவீச்சில் தாக்கப்பட்டு மாண்டார்.

டிச 17: எந்தத் தேசத்திலாவது அமெரிக்கா போர் தொடுக்க வேண்டுமானல் அதற்குமுன் ஸர்வ ஜன வோட்டின் மூலம் தேசத்தின் சம்மதத்தைப் பெறவேண்டியது அவசியம் என்று கூறும் ஒரு திருத்தத்தைத் தலைவர் ரூஸ்வெல்ட் அங்கீகரிக்கவில்லை. இச்செய்தி ஜப்பானுக்குச் சற்று பீதியை உண்டாக்கியது.

ஷாங்ஹாயில் சீனர் தோற்றதற்குக் காரணம் ஜெனரல் யாங்-ஹு என்ற தளகர்த்தர் ஜப்பானிடம் லஞ்சம் வாங்கிக்கொண்டு தளபதியின் உத்தரவைச் சரிவர நிறைவேற்றி வைக்காததுதான் என்றுதெரிந்தது. அவர் பிறகு தூக்கிலிடப்பட்டார்.

டிச. 18: நான்கிங்கில் ஜப்பானிய அட்டூழியங்கள் படுமோசமாயின.

ஜப்பானுக்கு எதிராகக் கடற்படை ஆர்ப்பாட்டங்களைப் பிரிட்டனுடன் சேர்ந்து நடத்திக் காட்டும் யோசனை கவனிக்கப்பட்டு, பிறகு கைவிடப்பட்டது.

போரில் ஜப்பானியத் துருப்புகள் அலுத்துப் போயிருப்பதாகவும் ஓய்வு அவசியமென்றும் இடைக் காலத்தில் சீனு, தன் மனப்பான்மையைப் பற்றி புன

ராலோசனை செய்ய இந்த அவகாசம் உபயோகமா யிருக்குமென்றும் சீனுவிலுள்ள ஜப்பானிய தளபதி ஜெனரல் மாட்ஸூயி கூறினர்.

ஹாங்கோவுக்கு ஒரு புதிய ஸோவியத் ஸ்தானீகர் வந்தார். சீன ஸோவியத்துகளின் பிரதிநிதிகள் பாதிப் பேராவது இருக்கும்படி சீன சர்க்கார் மாற்றி யமைக்கப் பட்டால், ரஷ்யா உதவியளிக்குமென்று அவர் கூறினராம். 240 ஸோவியத் விமானிகளும், 120 விமானங்களும் வந்தன. சீனருக்கு விமானப் பயிற்சி அளிக்கப்படு கிறது.

டிச. 20: "பானே" சம்பவம் பற்றி ஜப்பானிய விசாரணை முடிவுக்கும் அமெரிக்க விசாரணை முடிவுக் கும் அடிப்படையான வித்தியாசங்கள் இருந்தன. வேண்டுமென்றே தாக்கியதாக அமெரிக்க விசாரணை நிர்த்தாரணம் செய்தது. அகஸ்மாத்தாய், பின்வாங்கும் சீனத் துருப்புகளை ஏற்றிச்சென்ற கப்பலென்று நினைத்து, ஜப்பானியர் தாக்கியதாக ஜப்பானிய விசாரணை கூறியது.

டிச. 20: "ஒரு நூற்றாண்டுக்கு மேலாகக் கீழ்க்கோடி யில் சில உரிமைகளும் சொத்துக்களும் வளர்ந்து வந்திருக் கின்றன. திடீரென்று அமெரிக்க சர்க்கார் தங்கள் கடமை களையும் பொறுப்புக்களையும் விட்டுவிட முடியாது" என்று அமெரிக்க வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ கார்டெல் ஹல் தெரிவித் தார்.

டிச. 21: பிரிட்டன் கீழ்க்கோடி விஷயங்களில் அசிரத்தையாயில்லை என்று ஸ்ரீ சேம்பர்லேன் பார்லிமெண்டில் எச்சரித்தார். போதிய ஆயுத பலம் இல்லாமல், கீழ்க்கோடியில் போரில் இறங்கக்கூடாதென்று ஸ்ரீ ஈடன் தெரிவித்தார் ஜப்பான் மீது நிர்ப்பந்தங்கள் பிரயோகிப்பதை அவர் ஆதரிக்கவில்லை.

(1) சமாதானத்தை நிலைநாட்ட கவுரவமாய் இயன்றதையெல்லாம் செய்து பார்ப்பது.

(2) ஸர்வதேசப் பொறுப்புக்களை நிறைவேற்றி வைப்பதில் மற்றவர்களுடன்கூட, வீதாசார ஒத்துழைப்பைப் பூர்ணமாகக் கொடுப்பது.

(3) பிரிட்டிஷ் சொந்த நன்மைகளையும் பிரிட்டிஷ் பிரதேசங்களையும் காப்பாற்றுவது.

இவை மூன்றுந்தான் கீழ்க்கோடியில் பிரிட்டிஷ் கொள்கைக்கு அடிப்படையாயிருப்பவை என்று ஸ்ரீ ஈடன் தெரிவித்தார். அத்துடன்கூட ஜப்பானைக் கொஞ்சம் மிரட்டியும் பார்த்தார். பிரான்ஸ், அமெரிக்கா, ஐரோப்பிய சிறு நாடுகள், பால்கன் நாடுகள் - இவையெல்லாம் பிரிட்டனுடைய நேச தேசங்கள் என்று அர்த்த புஷ்டியுடன் கூறினார்.

அமெரிக்காவில், ருஸ்வெல்டுடன் தலைவர் பதவிக்கு நின்று தோற்ற கவர்னர் லாண்டனும், கீழ்க்கோடி நெருக்கடியைத் தவிர்க்க ருஸ்வெல்ட் என்ன நடவடிக்கை எடுத்தாலும் எதிர்க்கக்ஷியினர் அதை ஆதரிப்பார்கள்என்று தெரிவித்தார்.

"நாம் உலகத்தில் ஒரு பகுதி......எங்கு என்ன நடந்தா லென்ன என்று கண்ணை மூடிக்கொண்டு சும்மாயிருக்க முடி

யாது" என்று அவருக்கு ரூஸ்வெல்ட் பதிலெழுதினர். அன்றைய தினமே மேற்கு பஸிபிக்கில் அமெரிக்க கடற்படையின் மர்மமான வெள்ளோட்டம் ஆரம்பமாயிற்று. தயாராயிருக்குமாறு 5 விமானப் படைகளுக்கும் உத்தரவு போயிற்று.

அமெரிக்க-ஜப்பான் உறவு ரத்தாகக் கூடுமென்று சில பத்திரிகைகள் எழுதின. ஜப்பானுக்கு எதிராகப் பிரிட்டன், பிரான்ஸ், ஹாலந்து, ரஷ்யா, அமெரிக்கா ஆகிய ஐந்து நாடுகள் இருப்பதைக் காணலாம் என்று "வாஷிங்டன் டைம்ஸ்" எழுதியது.

மற்றொரு முக்கியமான விஷயமும் அன்று வெளியாயிற்று. வெளி மங்கோலியக் குடியரசு, சீக்கிரத்தில் ...ஞகவே கலந்துவிட்டு, சீன மத்திய சர்க்காரிடம் விசுவாசம் தெரிவித்துக்கொண்டு, ஜப்பானுக்கு எதிரான போரில் சேருமென்று சீக்கிரத்தில் அறிவிக்கப்படும் என்று ஷாங்ஹாய்க்குச் செய்தி எட்டியது. சுமார் 10 லக்ஷம் சதுரமைல் கொண்ட வெளி மங்கோலியாவின் ...ரத்தொகை 5,40,000. இதன் எல்லையெங்கும் ...ஷ்யக் கோட்டைகள் இருக்கின்றன. ஸோவியத் ரஷ்யா இந்நாட்டுடன் பரஸ்பர உதவி ஒப்பந்தம் செய்து ...ண்டிருப்பதால் ரஷ்யாவும் ஜப்பானும் மோதக்கூடும் என்பதைத்தான் காட்டுகிறது.

டிச. 22: ஜப்பான் வெகு ஜோராக பாஸிஸ்ட் நாடாகிறது. அந்நாட்டில் முற்போக்குக் கொள்கையுள்ளவர்களெல்லோரும் சேர்ந்த ஒரு ஐக்கிய முன்

னளியைச் சிருஷ்டிக்க முயற்சி நடைபெற்றது. அதை சர்க்கார் அடக்கி, தேசத்தில் புரட்சி செய்ய முயற்சித்த தாகப் பலவிடங்களைச் சோதனை போட்டு 370 பேர் களைக்கைது செய்தனர். சோஷல்மாஸ் பார்ட்டி என்ற தொழிலாளர் கக்ஷியைச் சேர்ந்த இரண்டு மெம்பர்களுங் கூடக் கைதியாயினர். பல ஸர்வகலாசாலை ஆசிரியர்கள், நூலாசிரியர்கள், சமாதான பக்தர்கள் போன்றோரும் சிறைப்பட்டனர்.

அமெரிக்கக் கடற்படை பழுது பார்க்கப்பட்டது.

ஹாங்காங் அருகில் ஜப்பானியக் கடற்படை நடமாட்ட மாயிருந்தது.

கீழ்க்கோடி பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்களை அதிகமாய் அனுப்பும் விஷயம் மந்திரி சபையில் கவனிக்கப்பட்டது. இப்போது அனுப்புவது அவசியமில்லை என்று கருதப் பட்டது.

ஊஹூவில் அமெரிக்கக் கொடி மீண்டும் அவமதிக் கப்பட்டது.

ரஷ்யாவிலிருந்து சீனாவுக்கு இரண்டு வாரங்களில் தளவாடங்கள் சுலபமாய் வருவதற்காக, 7 லக்ஷம் தொழிலாளர், 3,000 மைல் நீளமுள்ள ஒரு ரோட் அமைத்து வருவதாக ஷாங்ஹாய்க்குச் செய்தி கிடைத் தது.

“சீன-ஜப்பானிய யுத்தத்தில் பிரிட்டன் குறுக்கிடாமற் போனால், சீனாவில் பிரிட்டிஷ் உரிமைகளெல்லாம் பறிபோம்”

என்று ஸர் நாட்ச்புல் ஹ்யுகேஸன் இங்கிலாந்து போகும் மார்க்கத்தில் கொழும்பில் கூறினர். ஆனால், பிறகு, பிரிட்டனிலிருந்து ஏதாவது தந்தி கிடைத்திருக்குமோ என்னவோ, அம்மாதிரி கூறவே யில்லை யென்று பம்பாயில் தெரிவித்து விட்டார்.

23உ: ஷாங்ஹாய்க்குத் தெற்கே ஹாங்கோவை நோக்கி ஜப்பானியர் விரைவில் முன்னேறினர்.

24உ: அமெரிக்க கடற்கரை அருகில், பல ஜப்பானிய மீன் படகுகள் பிடிக்கப்பட்டன. அவற்றைச் சோதித்துப் பார்த்ததில், இரகசியமான பல கடிதங்கள் கிடைத்தன. அமெரிக்காவும் மெக்ஸிகோவும் கடற்கரைகளைக் கண்காணிக்க ஆரம்பித்தன.

ஹாங்கோ முற்றுகை யிடப்பட்டது.

ஷாண்டுங் மாகாணத்தில் ஜப்பானியர் மஞ்சள் நதியைக் கடந்தனர். "பானே" சம்பவத்துக்காக ஜப்பான் வருத்தம் தெரிவித்துக் கொண்டது.

ஹாங்காங்மீது ஜப்பானிய விமானங்கள் தாழ்வாகப் பறந்தன.

25உ: 'பானே' சம்பவத்துக்காக ஜப்பான் அனுப்பிய மன்னிப்பை அமெரிக்கா ஏற்றது. ஆனால், சீனவில் தங்கள் படை பலத்தை அதிகரித்துக் கொள்வதென்று ரூஸ்வெல்ட் தீர்மானித்தார்.

27உ: ஷாண்டுங் தலைநகர் ஸினன் ஜப்பானியர் வசமாயிற்று. ஸிங்டாவைச் சீனர் நிர்மூலமாக்கினர்.

ஸினுனும் நிக்கிரையாயிற்று. நான்கிங்கில் 53,874 சவங்கள் கிடந்தனவாம். அவற்றில் 50,000 ஜப்பானியர் படுகொலை செய்த பிரஜைகள்.

ஜப்பானிய மந்திரி சபை சோல்ஜர்களைப் பாராட்டியது.

ஜப்பானுக்கு இத்தாலிய ராணுவ நிபுணர்கள் போவார்கள் என்று இத்தாலிய சர்க்கார் அறிக்கை விடுத்தனர்.

சீனுவில் பொதுவுடைமை செல்வாக்கு விஸ்தரித்தது. ஸன்-யாட்-ஸேனின் புதல்வர் ஸன்-பேர், மாஸ்கோவுக்குச் சீன ஸ்தானுதிபதியாகச் சென்றார்.

ஜெனரல் சூடே வடசீனுவில் தளபதியானர். மாட்-ஸீ-டுங், சூ-என்-லாய் என்ற இரண்டு பொதுவுடைமைத் தலைவர்கள் கான்ஸு, ஷென்ஸி மாகாண கவர்னர்களாயினர். மாட்-ஸீ-டுங் சீன ஸோவியத் குடியரசின் தலைவராயிருந்தவர்.

28உ: ஒரு வருஷத்தில் 30,000 விமானிகளைப் பயிற்சி செய்ய சீனு திட்டம் வகுத்தது. 10,000 பேர் மார்ச்சுக்குள் தயாராய் விடுவார்கள். ஜப்பானியரைத் தாக்குவதற்குச் செய்யப்படும் பிரமாதமான ஏற்பாடுகளில் இது ஒரு பகுதியே.

அமெரிக்காவிலிருந்து 10 மேஜர்களும், 90 விமானிகளும் தொண்டர்களாகச் சீனுவுக்கு வந்தனர்.

தெற்கு சீனுவிலுள்ள மாகோ என்ற போர்ச்சுகீஸ் நகர் அருகில் ஜப்பானியர் வந்துவிட்டனர்.

ஷாங்ஹாயில் ஜப்பானியப் படகுகள்மீது சீனர் குண்டு வீசினர்.

## முடிவுரை

சீனமீது ஜப்பான் படையெடுத்து ஆறு மாதங்களுக்கு மேலாகிறது. மனித சரீரமும் நவீன இயந்திரச் சாதனங்களும் மோதும் இந்தப் போரில் சீனர் அதிகமாய் நஷ்டப்படுவது இயற்கையே. ஆனால், அவர்களுடைய நிலைமை அவ்வளவாக மோசமாயில்லை. ஒன்றுபட்ட சீனு, உருக்குப் போன்ற உறுதியுடன் இன்று ஜப்பானிய பாஸிஸத்தின் ஏகாதிபத்திய ஆக்ரமிப்பை எதிர்த்து நிற்கிறது. இந்தப் புத்தகத்தின் கடைசி வரிகள் எழுதப்பட்டபின், சீனுவின் போர் முறையில் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. போதிய பந்தோபஸ்தில்லாமல் சிதறுண்டு கிடக்கும் ஜப்பானிய அணிவகுப்புக்களைப் பலமாய்த் தாக்குவதென்று சீன தளகர்த்தர் மகாநாடு தீர்மானித்துள்ளது. இரண்டு கோடி டாலர் மதிப்பு தளவாடங்கள் ரஷ்யா மார்க்கமாக விரைவில் வந்து கொண்டிருக்கின்றன. அமெரிக்காவும், பிரிட்டனும், ரஷ்யாவும், பிரான்ஸும் இப்பொழுது கொண்டுள்ள மனப்பான்மையைப் பார்த்தால் சீக்கிரத்தில் அவை கிழக்கோடி விவகாரத்தில் தலையிடலாமென்று தோன்றுகிறது. அமெரிக்கா போர் தொடுக்க சர்வ ஜன வோட் வேண்டியதில்லை என்று

அமெரிக்க பார்லிமெண்ட் தீர்மானித்ததும், சீனுவில் அமெரிக்காவின் சிரத்தை குறுகிய சுயநல நோக்கங் கொண்டதல்ல வென்றும், ஸர்வதேச உறவுகளில் ஒழுங் கான முறைகள் அனுஷ்டிக்கப்படுவதற்குத் தாங்கள் நிர்த் தாரணம் செய்யப் போவதாகவும் அமெரிக்க வெளி நாட்டு மந்திரி அறிவித்துள்ளார். ஜப்பானுக்கும் சீக் கிரத்தில் வெற்றி கிடைக்குமென்ற நம்பிக்கை குறைந்து வருகிறது. சக்ரவர்த்தியே தலைமை வகித்து மந்திரா லோசனை செய்தார். வட சீனுவை அபிவிருத்தி செய்து அதன் மூலம் பண உதவி பெற்றுப் போரை நீடித்து நடத்தலாமென்று ஜப்பான் கனவு காண்கிறது.

எல்லாவற்றையும் பார்க்குமிடத்து, வெகு சீக்கிரத் தில் சீன யுத்தம் உலக யுத்தமாக மாறக்கூடிய நிலைமை நெருங்குகிறது என்றுதான் தோன்றுகிறது.

---